If you want more free e-Books

**அராத்து**

பாண்டிச்சேரியில் பிறந்து, கடலூர் மாவட்டம் புவனகிரியில் வளர்ந்தவர். சமூக வலைத்தளங்களில் தொடர்ந்து எழுதிவருவதன் மூலம் கவனம் பெற்றவர். நீயா நானா உட்பட்ட பல தொலைக்காட்சி விவாதங்களில் கலந்து கொண்டிருக்கிறார். விகடன், குமுதம் மற்றும் அந்திமழையில் இவரது சிறுகதைகள் வெளிவந்திருக்கின்றன. மென்பொருள் துறையில் கன்ஸல்டிங் நிறுவனம் நடத்தி வருகிறார்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

# நன்றி

கோபால கிருஷ்ணன்
கணேசன் அன்பு
சிவ கிருஷ்ணா
ஜேம்ஸ் சுதாகர்
செல்வகுமார் கணேசன்
கருப்புசாமி
கார்த்திக் பிச்சுமணி
கார்த்திகேயன் மேடி
சசி மாரீஸ்
ஸ்ருதி டிவி கபிலன்
டாக்டர் ஸ்ரீராம்
கண்மணி
சசிகலா
வெண்பா
ஜெகா
முருகன் கடற்கரை
சக்தி தாஸ்
அனோஜன் பேரின்பராஜ், இலங்கை
பிரஷாந்த், இலங்கை
கார்த்திகேயன், மலேஷியா

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

சிவனேஸ்வரன், மலேஷியா

சங்கீதா, மலேஷியா

யெர்ஸாத் மொஹம்மத்

ராஜ சுந்தரராஜன்

அந்திமழை அசோகன்

அம்மாசத்திரம் சரவணன்

துர்கா

பிரபு ராஜு

ஆடிட்டர் ஸ்ரீதர்

ஆடிட்டர் ரமேஷ்

சாம் நாதன்

கருந்தேள் ராஜேஷ்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

# முன்னுரை

பிரேக் அப் என்பது கடும் துன்பமாக ஒருகாலத்தில் இருந்தது. இப்போது அது ஃபேஷனாகிவிட்டது. சண்டையிட்டுப் பிரிந்து கொள்பவர்கள் ஒருபுறம், நிதானமாகப் பேசி, நமக்குள் சரி வராது என்று சொல்லிக்கொண்டு, புன்னகையுடன் பிரிபவர்கள் இன்னொரு புறம். காரணமே இல்லாமல் பிரிபவர்கள் அதிக அளவில் இருக்கிறார்கள். ஏன் திடீரென்று பிரிந்து போனார் என மற்றவருக்குக் கடைசி வரை தெரிவதே இல்லை. எப்படிப் பார்த்தாலும் பெரும்பாலான பிரேக் அப்-கள் அற்ப காரணங்களாலேயே செய்யப்படுகின்றன. அல்லது பிரேக் அப்புக்கு ஏதேனும் அற்ப காரணங்களே போதுமானதாக இருக்கின்றன.

இப்போதைய இளைஞர்களுக்கும் இளைஞிகளுக்கும் வெரைட்டி தேவைப்படுகிறது. காதல் மற்றும் திருமண நோக்கம் இல்லாமலேயே கேஷுவலாக குறிப்பிட்ட காலம் வரை ஒன்றாகச் சுற்றுபவர்கள் இருக்கிறார்கள். இவர்களுக்கு அடுத்த ஆள் மாட்டியவுடன் ஆர்ப்பாட்டமில்லாமல் பிரிந்து விடுவார்கள். இருவரும் இதே போன்ற எண்ணம் கொண்டவர்கள் எனில் பிரச்சினை இல்லை.ஒருவர் சும்மா கேஷுவலாகவும், இன்னொருவர் லாங்க் டேர்ம் எண்ணத்திலோ, காதலில் விழுந்து சுற்றும்போதோ பிரச்சினை வருகிறது. மன நலம் பாதிக்கப்படுகிறது.

திருமணத்துக்கு முன்னர் இதைப்போன்ற கூத்துக்கள் நடந்து கொண்டிருப்பது ஒரு பக்கம். திருமணத்துக்குப் பின்பும் விவாகரத்து என வழங்கப்படும் லீகல் பிரேக் அப்பும் எக்கச்சக்கமாக அதிகரித்து உள்ளது.பெண்களுக்குக் கிடைத்த பொருளாதார சுதந்திரம் ஒரு காரணம்.இவ்வளவு நாள் வேறு வழி இல்லாமல், புருஷன் என்ன செய்தாலும், அடித்தாலும் உதைத்தாலும், கூத்தியா வைத்துக்கொண்டாலும், அடிமை வாழ்வு வாழ்ந்து வந்தவர்கள்,

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

இப்போது தங்களுக்குப் பிடிக்காததை சகித்துக்கொள்ளத் தேவை இல்லாமல் சுதந்திரமாக வெளியே வருகிறார்கள்.

கணவன் கொடுமை அல்லது அவன் மீது உள்ள வெறுப்பால் விவாகரத்து நடப்பது ஒரு பக்கம் என்றால்,கள்ளத் தொடர்பு காரணத்தால் நடக்கும் விவாகரத்தும் அதிக அளவில் உள்ளன. இந்தக் கள்ளத் தொடர்புகள் பெரும்பாலும் அவரவர் குடும்ப நண்பர்கள் குழாமிற்குள்ளே அரங்கேறுகின்றன. கணவனின் நண்பனை மனைவி காமுறுகிறாள். மனைவியின் தோழியுடன் செக்ஸ் வைத்துக்கொள்கிறான் கணவன். அலுவலகப் பழக்கத்திலும் கள்ள உறவுகள் உருவாகின்றன. சோஷியல் நெட்வொர்க்கிங்க் வலைத்தளங்களும் இதில் முக்கியப் பங்காற்றுகின்றன. திடீரென ஃபிரண்டாகி, ரெண்டு நாள் சாட் செய்து, நான்காம் நாள் படுத்துக்கொள்ளும் ஆட்கள் இருக்கிறார்கள்,

பொருளாதார ரீதியாகச் சிக்கல் இல்லா வாழ்வை வாழ்ந்தாலும் ஹோம் மேக்கர் எனச் சொல்லப்படும் பெண்களுக்கு 32 வயது முதல் வெறுமை ஆரம்பிக்கிறது. கணவன் வேலைக்குச் சென்று விடுவான். குழந்தைகளையும் பள்ளிக்கு அனுப்பிவிட்டு, எக்கச்சக்க நேரத்தைக் கையில் வைத்துக்கொண்டு அமர்ந்திருக்கின்றனர். முன்பு போல செக்ஸ் உறவு ரெகுலராக இல்லாதது, கணவன் முன்பு போல கொஞ்சாதது, ஐ லவ் யூ சொல்லாதது போன்றவை, இவர்களை அடுத்த ஆள் தேட வைக்கிறது. இவர்களை வேட்டையாட ஃபேஸ்புக்கில் ஒரு குழு சுற்றிக்கொண்டு இருக்கிறது. மீண்டும் காதல் மெசேஜ்கள், குட்டிமா, புஜ்ஜிமா, லவ் யூ, மிஸ் யூ என அனைத்தையும் மீட்டுருவாக்கம் செய்து போலி திருப்தி அடைந்து கொண்டிருக்கிறார்கள் இந்த வகை இல்லத்தரசிகள். இதில் இருக்கும் ஆபத்தை நினைத்து கொஞ்சம்கூட அவர்கள் பயம் கொள்வதில்லை. இது கணவனுக்குத் தெரிய வரும்போது, நேரடியாக விவாகரத்துதான்.

மத்திம வயதில் இருக்கும் கணவர்களும் நாக்கைத் தொங்கப்போட்டுக்கொண்டு அலைந்து கொண்டிருக்கின்றனர். 16 வயது முதல் 40 வயது வரை எந்தப் பெண் கிடைத்தாலும் ஓக்கே என்ற மனநிலையை எப்படிப் புரிந்து கொள்வது என்றே தெரியவில்லை. நமக்கு வயதாகிறது, அதற்குள் எவ்வளவு முடியுமோ அவ்வளவு பெண்களை அனுபவிக்க வேண்டும் என்ற வெறி

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

புலப்படுகிறது. பெண்கள் கணக்கை ஏற்றுவதில் மும்முரமாக உள்ளனர்.

எதற்கும் உதவாத எதற்கும் ஒத்துவராத மோடு முட்டி ஆண்கள் என்று ஒரு பெரும் கோஷ்டி உள்ளது. இவர்களைத் திருமணம் செய்த பெண்களுக்கும், விவரம் தெரியாமல் காதலித்துத் தொலைக்கும் பெண்களுக்கும் கள்ளக்காதலைத் தவிர வேறு வழியில்லை.

சில காலம் முன்பு ஆற அமர காதலிக்க நேரம் இருந்தது. காதல் மெதுவாகப் பூத்து, மலர்ந்து, காய்த்துக் கனியாகும். ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ள நல்ல கால இடைவெளி இருக்கும். காதலிக்க ஆரம்பித்து முத்தமிடவே இரண்டு வருடங்கள் ஆகும். இப்போது மாறி வரும் ஃபாஸ்ட் ஃபுட் யுகத்தில் காதலைச் சொன்ன அன்றே உதட்டு முத்தம்.ஒரு வாரத்தில் படுக்கை வரை சென்று விடுகிறது. செக்ஸுக்கு அப்புறம்தான் ஒருவரை ஒருவர் கவனித்துக்கொள்ளவே ஆரம்பிக்கின்றனர். சில நேரங்களில், தொடுதல், முத்தமிடுதல் எல்லாம் முடிந்த பின்புதான் காதலே சொல்லிக்கொள்ளப்படுகிறது. பலமுறை செக்ஸ் உறவு அனுபவித்த பிறகு காதலைச் சொல்லிக்கொள்பவர்களும் இருக்கிறார்கள்.

இருவரும் காதலை சொல்லி ஒத்துக்கொண்ட சில நாட்களிலேயே, இன்னொரு அழகான பெண்ணையோ, பையனையோ பார்த்து விட்டால், ஐயய்யோ அவசரப்பட்டு விட்டோமே என்று நினைக்கும் மனப்பான்மைதான் அதிகம் இருக்கிறது. ஒருவரிடம்மட்டும் மனம் செட் ஆவதில்லை. அலைபாய்ந்து கொண்டு இருக்கிறது. சின்ன சின்ன கருத்து வேறுபாடுகளுக்கெல்லாம் வேறு ஆளைத் தேடுகிறது. எல்லோருக்கும் எல்லாவற்றிலும் வெரைட்டி தேவைப்படுகிறது. எந்தப் பிரச்சினையும் இல்லாமல் காதலித்துக்கொண்டு இருக்கும்போதும், இன்னொரு ஆளை மனம் நாடுகிறது. பேரலலாக இன்னொரு ஆள் தேவைப்படுகிறது.

மேற்சொன்ன இரண்டு தரப்பினரும் காதல் என்ற சொல்லைத்தான் கேடயமாகப் பயன்படுத்துகின்றனர். இதில் சுவாரசியம் என்னவென்றால், கள்ள உறவில் ஈடுபடும் பெரும்பாலோனோர், காதலித்துத் திருமணம் செய்தவர்கள்.

முன்பெல்லாம் குழந்தைகள் பெரும்பாலான விவாகரத்துக்களைத் தடுத்துக்கொண்டிருந்தனர். இப்போது குழந்தைகளுக்காக என்று

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

சகித்துக்கொண்டு யாரும் வாழ்வதில்லை. இதில் குழந்தைகளுக்கு ஏற்படும் மன ரீதியான சிக்கல்களைப் பற்றியும் யாருக்கும் கவலையில்லை. சரியோ தவறோ தனக்குப் பிடித்ததைத்தான் செய்யவேண்டும் என்ற முனைப்பில்தான் ஓடிக்கொண்டு உள்ளனர். தான் என்பதுவே இங்கே பிரதானம்.

இந்தத் தொகுப்புக்கு நண்பர்களின் பிரேக் அப் கதைகளைச் சொல்லச் சொல்லி கேட்டிருந்தேன். பலர் பகிர்ந்து கொண்டார்கள். அவர்களின் பெயரைக் குறிப்பிட்டு நன்றி போடலாம் என்று எண்ணம் இருந்தது. அது அவர்களுக்கு வாழ்வில் சிக்கலை ஏற்படுத்தும் என்பதால் அந்த எண்ணத்தைக் கைவிட்டேன். அவர்கள் சொல்லிய கதைகளை அப்படியே எடுத்துக்கொள்ளவில்லை. அதில் இருந்த ஒன்லைனை மட்டும் எடுத்துக்கொண்டேன். அதனால் யாரும் தங்கள் கதையை இப்படி எழுதி விட்டானே என வருத்தம் அடையவேண்டாம். கதை சொன்ன அனைத்து நண்பர்களுக்கும் நன்றி. இந்த உண்மைக் கதைகளை மாதிரியாக வைத்து எழுதிய கதைகளுடன், முழுக்க முழுக்க வேடிக்கையான கற்பனையான கதைகளும் இத்தொகுப்பில் உள்ளன.

ஒருவிதப் பித்துக்குளித்தனமான வாழ்வை பித்துக்குளித்தனமான மொழியில்தானே வெளிப்படுத்த முடியும்? அப்படியே செய்திருப்பதாக நம்புகிறேன். நான் இதைப்போன்ற ஒரு தொகுப்பை எழுதுவதற்கான உந்துதலை சாரு நிவேதிதாவிடம் இருந்து பெற்றிருக்கக்கூடும். நான் செய்யும் எந்தப் புது முயற்சிக்கும் ஏதாவது ஒரு விதத்தில் சாரு நிவேதிதா இன்ஃப்ளுயன்ஸ் செய்து இருப்பார் என்று நினைக்கிறேன்.

இந்தத் தொகுப்பைப் பிழைத்திருத்தம் செய்து கொடுத்த டிமிட்ரி இவ்நோஸ்கிக்கு எனது அன்பும் நன்றியும். இந்த தொகுப்பைப் படித்து அவ்வப்போது ஆலோசனைகளையும், உற்சாகத்தையும் கொடுத்து வந்த பிச்சைக்காரனுக்கும் நன்றிகள். இந்தக் கதைகளை வரிசைக்கிரமமாக அமைத்துக்கொடுத்ததும் பிச்சைக்காரனே!

பல வித அட்டைப்படங்களைத் தயங்காமல் போட்டுப் போட்டுப் பார்த்து நல்ல அட்டைப் படத்தைக் கொடுத்த கார்த்திகேயன் மேடிக்கு அன்பு.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

அராத்து கதைதானே என அசட்டையாக இல்லாமல் கவனமாகப் படித்து, சின்னசின்ன வார்த்தைகளுக்கும் சந்தேகங்கள் எழுப்பி, கடைசி கட்டத் திருத்தல் பணிகளை சிரத்தையாகச் செய்த ஹரன் பிரசன்னா என்னை ஆச்சரியப்படுத்தினார்.

இதை வெளியிடும் கிழக்கு பதிப்பகத்திற்கும், பத்ரி சேஷாத்ரி மற்றும் கிழக்கு குழுவிற்கும் எனது நன்றிகள்.

ஃபேஸ்புக்கில் எழுதுகையில் தொடர்ந்து உற்சாகப்படுத்திக்கொண்டிருக்கும் நண்பர்களுக்கும், என்னுடைய வித்தியாசமான முயற்சியை எப்போதும் கொண்டாட்டமாக ஆதரிக்கும் அனைத்து நண்பர்களுக்கும் என்னுடைய அன்பும் நன்றிகளும்.

**அராத்து**

araathu@outlook.com

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

# உள்ளே



Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

21. ஆற்றலின் அந்தப்புரம்
22. ரூம் நம்பர் 132
23. கொஞ்ச நேரம் காத்திருங்கள்
24. நடுவில் காணாமல் போனவன்
25. பெயர் எடுப்பது எப்படி
26. ஐ வான்ட் மோர்
27. கண்ணனின் குழல்
28. மின்ட்ரூவைப் பற்றி கிசுகிசு
29. தொப்பை
30. ப்ளீஸ் வேணாம்டா!
31. மேல் தட்டு மக்கள்
32. லவ்வெல்லாம் இல்லை
33. பெர்ஃப்யூம்
34. இன்னர்ஸுடன் ஒரு போட்டோ
35. மீண்டும் ஒரு முறை
36. அனிதாஸ் அண்ட் ஆனந்த்ஸ்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 1. பிரேக் அப்
## ஃப்ளஷ்... ஃப்ளாஷ்பேக்

கிருத்திகாவின் அறைக்குள் நுழைந்த வேகம் சற்றே குறைந்து, சடுதியில் அதைவிட அதிக வேகத்துடன் ரெஸ்ட் ரூமிற்குள் நுழைந்து ஜிப்பை இறக்கி, ஆசுவாசத்துடன் வானத்தைப் பார்த்தான். வானத்தை மறைத்துக்கொண்டிருந்த கான்கிரீட் மேற்கூரையில் இவன் மாட்டிய சிஎப்எல் பல்ப் வெள்ளையிழந்து பழுப்பாகி (க்கொண்..டு) இருந்தது.

அவள் இந்த அறை எடுத்த புதிதில் மங்கலாகமுனகிக்கொண்டிருந்த மஞ்சள் பல்பைக் கழட்டி, சிஎப்எல் பல்ப் மாட்டியதை நினைவு கூர்ந்தபடிப் பார்வையை கீழே இறக்கினான்.

இந்த பல்பை மாட்டியபின் சிஎப்எல் பல்ப் குறித்த அவனுடையஅரை மணி நேரப் பிரசங்கம் அவனது ஃப்ளாஷ் பேக்கில் வரவில்லை. வயிறு சற்றே தளர்ந்து இருந்தது. விர்ர்ர்ர்ர்ர்ர்ர்ர் சத்தம் வி..ர். வி..ர் ஆக மாறி விட்டிருந்தது.

இந்த சிஎப்எல் பல்ப் தன்னுடைய காதல் காலத்தின் குறியீடு எனப் புன்னகையினூடே யோசிக்கையில் விர் சத்தம் சுத்தமாக அடங்கிப்/ போனது. நல்ல அற்புதமான எண்ணங்களின்போது சிறுநீர் தீர்ந்து நின்று/போனால் ஒருவித அலுப்போ வெறுமையோ வந்து விடுகிறது. ஜிப் போட்டு ஃப்ளஷை அமுக்கலாமா, ஃப்ளஷை அமுக்கிவிட்டு ஜிப் போடலாமா எனக் குழம்பி, எப்போதோ எழுதப்பட்ட பிரபஞ்ச விதியின் ஒரு சிறுநீர்த்துளி விதியின் படிஜிப் போட்டுவிட்டு ஃப்ளஷை அமுக்கினான்.

அமுக்கும்போதே மூலையில் கிடக்கும் கிருத்திகாவின் முந்திக்குளியல், குளியல் மற்றும் பிந்திக்குளியல் அழகு, ஆரோக்கிய, தேக சாதன பொருட்களின் ஊடே ஆண்கள் பயன்படுத்தும் ஷேவிங்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

ரேஸர் பாக்கெட் ஒன்றின் தலை தெரிந்தது. கலைத்து இழுத்துப் பார்த்தான்.

அதேதான். ஜிவ்வென மூளைக்கு ரத்தம் ஏறியது அல்லது மூளையில் இருந்த கொஞ்ச நஞ்ச ரத்தமும் இறங்கியது. குறி அநியாயத்துக்கு சிறுத்துப் போனது.

கிட்டத்தட்ட உள்வாங்கிக்கொள்ளும் நிலைமை.

இன்னொரு முறை ஃப்ளஷை அமுக்கிவிட்டு, வெறும் காற்றை வாய் முழுக்க இழுத்து அவசரமாக வெளியேற்றினான். மலை முகட்டில் செய்யவேண்டியதை பாத்ரூமில் செய்தால் இப்படித்தான் ஆகும். உடனடியாக பாத்ரூமைவிட்டு வெளியேறினான்.

கிருத்திகாகிச்சனலில் சமைத்துக்கொண்டிருந்தாள். வாசனை. மெதுவாக ஆரம்பிக்க வேண்டும் என மூச்சை நிறுத்தி நிதானித்தான். வாசனை. பசித்தது. கிருத்திகா அரவம் உணர்ந்து வெளியே வந்து, ‘மை பேபி’ என்றாள் சிரித்தபடி.

ஃப்ளாஷ் பேக் 1:

இவனைத்தான் கட்டிப்பேன் என, கிருத்திகா வீட்டில் அடம் பிடித்ததால் ‘வீட்டைவிட்டு வெளிய போடீ நாயே’ என விளிக்கப்பட்டாள். அவளது பெற்றோருக்கு இந்த நவீன கால நாகரீகச் சூழலில் அதுவே மிகச் சுலபமான வழியாகப் பட்டது.

முடிவெடுப்பதில் மிக வேகம் கொண்டவர் என கிருத்திகாவின் தாயார் அண்டை அயலாரிடம் பெயர் பெற்றிருந்தார். ஒரு வாரம் பேயிங் கெஸ்ட்அகாமடேஷனில் தங்கி, இந்த அறையை எடுத்து, ஒரே நாளில் அனைத்து ஏற்பாடுகளையும் செய்து விட்டிருந்தாள். இவன் கடைசியாக வந்து மஞ்சள் பல்பை கழட்டி வெள்ளை பல்பை மாட்டினான்.

ஃப்ளாஷ் பேக் 2:

அறைக்கு குடிவந்த புதிதில் வாங்கிய பல்வேறு கேரி பேக்குகளில் இருந்த பல பொருட்களையும் உபயோகித்து விட்டாலும், எங்கோ பதுங்கிக்கொண்டு இருந்த கேரி பேக் ஒன்று நேற்று இரவுதான், கிருத்திகாவுக்கு ஆமாம் சாமி போட்டது.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

அந்த கேரி பேக்கினுள் டாய்லெட் ரெஃப்ரெஷனர், ஷேவிங் ரேசர் பாக்கெட் மற்றும் சில கெட்டுப்போன பொருட்கள் இருந்தன.

ஃப்ளாஷ் பேக் 3:

நான்கு மாதம் முன்புதான் இவன் ஷேவ் செய்வதை நிறுத்திவிட்டு ட்ரிம்மருக்கு மாறி இருந்தான்.

ஃப்ளாஷ் ஃபார்வேர்ட் 1:

நான் உன்ன இப்பவே வீட்டைவிட்டு வெளில போய்த்தான் ஆகணும்னு சொல்லலை, காலைல கூட போகலாம் என்றாள் கிருத்திகா.

ஏன்டீய... இப்பவே போய் போதைல அடிபட்டு செத்துப்போனா போலீஸ் என்கொயரில மாட்டிப்பனு பயமா? நீ எப்பவோ முடிவு பண்ணிட்டு கொஞ்சம்கொஞ்சமா என்னை டென்ஷன் ஏத்தி ஏத்தி கழட்டி வுட்டுகிட்டே வரடீ... நான் ஒரேடியா போய்த் தொலையறேன். நீ எவன் கூட வேணா படுத்துக்கிட்டு கூத்தடி.

டேய்... உனக்கு ஓவராயிடிச்சி. அசிங்கமா பேசாத. தூங்கிட்டு காலைல போ.

தேவடியா வூட்ல ஒரு செகண்ட் கூட இருக்க மாட்டேன்டீஎன்றபடி விருட் என வெளியேற ஆசைப்பட்டபடி, தட்டுத்தடுமாறி பம்மி பம்மி மாடிப்படிகளில் இறங்கத் தொடங்கினான்.

ஃப்ளாஷ் பேக் 2.1:

சில நாட்களுக்கு முன்பு அறிமுகமான தோழனின் க்ளீன் ஷேவை சோ க்யூட் எனப் பாராட்டி இருந்தாள் கிருத்திகா.

ஃப்ளாஷ் பார்வேர்ட் 2:

எப்போதோ வாங்கி, தாமதமாக பாத்ரூம் புகுந்த ரேஸர் பயன்படுத்தப்பட்டது.

நிகழ்காலம் தொடர்கிறது.

‘மை டியர் ஹனி’ என்றான் இவன். வாசனையோடும் சமையல் தெறிப்புக்களோடும் கிருத்திகாவை அணைத்துக்கொண்டான்.

ம்ம்ம் ம்ஹ்ம் ம்ஹ்ம் எனச் சிணுங்கினாள் கிருத்திகா.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 2. பிரேக் அப்
## நோ மோர் பிரேக் அப்

லிரிதா என்ற பெயர் கதைக்காக வைக்கப்பட்ட கற்பனைப் பெயர் போலத் தோன்றும். ஆனால் உண்மையான பெயர். லிரிதா வெளிநாட்டில் வாழ்ந்து கொண்டிருப்பதால் உண்மையான பெயரிலேயே கதையாடுகிறார். இந்தப் பேரைக் கேட்டதுமே பார்மணி, லிரிதா மேல் காதல் வயப்பட்டான். லிரிதா விடுமுறைக்காகத் தன் நாட்டுக்கு வந்திருந்ததையும், தற்போது அவள் தன் வீட்டில் தங்கி இருந்ததையும் நண்பன்கோசுராஜ் சொல்லக்கேட்டு, கோசுராஜை அந்தக் கணமே உயிர் நண்பன் ஆக்கிக்கொண்டான் பார்மணி. பார்மணியை ஆஅகீ மணி என்ற தொனியில் அழைக்கலாகாது. தமிழில் பார் என்ற வார்த்தை உள்ளதல்லவா?

அதான், உலகைக் குறிக்குமே! அந்த பார் என்ற தொனியில் பார்மணி என்று அழைக்க வேண்டும். நண்பர்கள் சுருக்கமாக, ஒரு காலத்தில் செல்லமாகவும், தற்போது வசையாகவும் பீ எம் என அழைத்துக்கொண்டு இருந்தனர்.

ஷார்ட்ஸ், பேஸ்ட், பிரஷ் சகிதம் ஒரு விர்ச்சுவல் கூடாரம் அமைத்து கோசுராஜ் வீட்டில் தங்கி விட்டான் பார்மணி.

முதலில், லிரிதாவுக்கு பார்மணியைப் பார்க்க வேடிக்கையாக இருந்தது. என்னதான் கிராக்காக இருந்தாலும் பார்மணியிடம் ஏதோ ஒரு தனித்துவம் இருந்தது. பெண்களிடம் ஒரு வீக்னெஸ் உள்ளது, குஞ்சோண்டு தனித்துவம் இருந்தாலும் ஈர்க்கப்பட்டு விடுவார்கள்.

லிரிதாவுக்கு தன்னிடம் லேசாக ஈர்ப்பு வந்துவிட்டது தெரிந்ததும் பார்மணி பரபரப்பாகி விட்டான். கோசுராஜ் வீட்டில் பாத்திரம் கழுவுவது, மளிகை சாமான் வாங்குவது, குழந்தைக்கு

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

புட்டாபிஷேகம் செய்வது போன்ற வேலைகளைத் தடாலடியாக நிறுத்தினான்.

லிரிதாவுடன் மட்டுமே பழகி பழகி, அந்த ஈர்ப்பை மென்மேலும் பெரிதாக்கி, அவள் ஒரு கிலோ ஜாங்கிரி தின்றவள் போலத் திகட்டிக் குழம்பி நிற்கையில், ‘லவ் யூ லிரி’ என்று சொல்லி, அவள் மேலே உயர்த்திய புருவத்தை கீழே இறக்குவதற்குள் சடுதியில் அணைத்து மூக்குக்கும் மேலுதட்டுக்கும் நடுவில் முத்தமிட்டான்.

கோசுராஜ் வீட்டில் கூடாரத்தைக் காலி செய்துவிட்டு, வெளியே சிறகடித்து நடந்தனர். ஊர் சுற்றிக் காண்பிக்கிறேன் பேர்வழி என அவ்வப்போது லிஃப்டில், இருட்டு நடைபாதையில், சினிமா தியேட்டரில் பச்சக் முச்சக் கச்சக் என முத்தமிட்டான். இருவரும் தனியறையில் இருக்கும்போது முத்தமிடத் துணிவில்லைபார்மணிக்கு. நடக்கையில் இடுப்பை அழுத்துவது, புட்டத்தை வழுக்கை மண்டையைத் தடவுவது போல தடவுவது போன்ற புனிதமான செயல்களின் மூலம் காதலை வளர்த்தான். ஒருமுறை பொது இடத்தில் பின்னழகைத் தடவும்போது நறுக்கென இவன் கையில் ஊசி குத்தியது. பேண்டியில் எதற்கு சேஃப்டி பின்? அல்லது புட்டத்தில் ஏதேனும் முள்செடி வளர்கிறதா எனக் குழம்பினான் பார்மணி.

இந்தக் கதை முடியும் வரை இந்த சந்தேகத்தை அவன் லிரிதாவிடம் கேட்டவனில்லை.

‘லவ் யூ சொல்ல மாட்டியா?’ என வாயாலும் இடுப்பிலும் நச்சரித்துக் கொண்டே இருந்தான் பீஎம். ‘சொன்னாதான் லவ்வா’ எனக் குழம்பிப் பார்த்தாள் லிரி. ஒருநாள் மார்பு காம்பு வரை பீஎம் முத்தமிட்டுவிட வேறு வழியில்லாமல் ‘லவ் யூ பீஎம்’ என்றாள் லிரி.

முள் பயத்தால், ஒரு இடம் தவிர மற்ற இடங்களிலெல்லாம் முத்தமிட்டு முடித்துவிட்டு, லிரிதா தன் ஆள்தான் என மனதளவில் கொக்கரித்துக் கொண்டான்பீஎம். லிரிதாவின் நண்பர்கள், தன் நண்பர்கள், பொது நண்பர்கள், நண்பர்களின் நண்பர்கள் என விழியில் தென்படுவோரிடமெல்லாம், லிரிதா தன் ஆள் எனப் பெருமை பொங்கச் சொல்லிக்கொண்டிருந்தான் பீஎம். போன வாக்கியத்தில் பெருமை என்ற வார்த்தை வந்து விட்டபடியால் லிரிதா மிக அழகு, மிக மிக அளவுஎன்பது தவிர்க்கமுடியாததாகிறது.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

லிரிதாவிடம், ஃபேஸ்புக்கில் சிங்கிள் ஸ்டேட்டஸை, இன் ரிலேஷன்ஷிப் என மாற்றச் சொன்னான். சிலரை பிளாக் செய்யச் சொன்னான். சிலரை அன் ஃபிரண்ட் செய்யச் சொன்னான்.

சில போட்டோகளை நீக்கச் சொன்னான். மொபைலை வாங்கி நோண்டிக்கொண்டேயிருந்தான். இந்த உடை வேண்டாம் என்றான். ஓவர் மேக் அப் என்றான்.

லிரிதா பாத்ரூமில் ஒருநாள் அழுந்த தேய்த்துக் குளித்து, அவன் முத்தமிட்ட இடங்களை எல்லாம் தோல் கிழியும் அளவுக்கு துடைத்து எடுத்தாள். அவன் சொல்வதை செய்யாமல் எதிர்ப்பு தெரிவிக்க ஆரம்பித்தாள். பலருடனும் சாட் செய்தாள். அனைத்து போன் கால்களையும் அட்டென்ட் செய்து சிரித்த முகத்துடன் பேசினாள்.

பீஎம்முக்கு மைனாரிட்டி அரசை ஆள்வதைப் போல பதட்டம் ஏறியது. லிரிதா கைவிட்டுப் போய்விடுவாளோ என்று பயம் அதிகரித்தது. லிரிதா மீது கோபம் வந்தது.

அவளின் எழில்கள், அவன் கண்முன்னே நர்த்தனமாடி அவள் மேல் இருந்த கோபத்தை குறைத்து, அவளிடம் சாட் செய்பவர்கள், அவளிடம் வழிபவர்கள் மேல் மடை மாற்றின.

கோபத்துடன் தனியாகத் தன் அறையில் அமர்ந்து காண்டு குடிகுடியெனக் குடித்தான். குடி போதையில் ஞானம் பிறந்தது. எடுறா லேப்டாப்பை, லாகுடா உள்ள என ஃபேஸ்புக்கிற்குள் நுழைந்தான். லிரிதா என்னோட ஆள், இனிமேல் நீங்கள் யாரும் லிரிதாவுடன் தவறான எண்ணத்துடன் பழக வேண்டாம், சாட் செய்ய வேண்டாம் என லிரிதாவின்அனைத்து நண்பர்களுக்கும் குரூப் மெசேஜ் அனுப்பினான். அப்போதும் வெறிஅடங்காமல் வாட்ஸ் அப் காண்டாக்ட் அனைத்துக்கும் இதே மெசேஜைஅனுப்பினான். லிரிதாவுக்கு இந்த மெசேஜை அனுப்பாததால் அவளுக்குத் தெரியவாய்ப்பில்லை என்று போதையில் நினைத்துக்கொண்டானோ என்னவோ!

லிரிதா இவனை பிளாக் செய்தாள். லிரிதாவை இவனால் தொடர்பு கொள்ளவே முடியவில்லை. எப்போதோ வாங்கி வைத்திருந்த லிரிதாவின் அம்மா நம்பர் மூலம் பலமுறை முயன்று லிரிதாவை பிடித்து விட்டான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

‘புரிஞ்சுக்கோ பீஎம். உன்னை எனக்கு சுத்தமா பிடிக்கலை. ஒரு செகண்ட் கூட இனிமே உன் கூட பழக முடியாது. ஃபிரண்டா கூட உன் மூஞ்சை பாக்க பிடிக்கலை. எனக்கு நிறைய லைஃப் இருக்கு, ப்ளீஸ்... டிஸ்டர்ப் பண்ணாதே. இதுக்கு மேல தொந்தரவு பண்ணா, போலீஸ்ல கம்ப்ளைண்ட் பண்ணிடுவேன்’ எனக் கூறி கட் செய்தாள்.

லிரிதாவின் அம்மா நன்றாகப் பேசினார். அவருடன் பேசுவதோ ஏனோ பீஎம்-க்குஇதமாக இருந்தது. என்ன எழவு சைக்காலஜி எனத் தெரியவில்லை, இன்னமும் பீஎம் லிரிதாவின் அம்மாவுடன் தொடர்பில் இருக்கிறான். தவறாக நினைப்பதற்கு ஒன்றுமில்லை, போன் மூலம் மட்டுமே தொடர்பு. இருவரும் நீண்ட நேரம் பேசிக்கொள்கின்றனர். சமயங்களில் லிரிதாவே தன் அம்மாவின் போனை எடுத்து, ‘ஓ... பீஎம் ஆ? அம்மா... உனக்கு போன்’ எனக் கொடுக்குமளவுக்கு இருவரும் நெருக்கமாக உள்ளனர்.

இன்றைய நிலை: பீஎம்முக்கு அதற்குப் பிறகு காதலே கைகூடவில்லை. அதனால் நோ மோர் பிரேக் அப். அம்மாவுடன் போன் பேசிக்கொண்டு இருந்தால் எங்க வௌங்கப்போகுது? வீட்டில் பார்த்து வைத்த பெண்ணைத் திருமணம் செய்துகொண்டு சமர்த்தாக 3 குழந்தை பெற்று விட்டான். மனைவிக்கும் இவன் லிரிதாவின் அம்மாவுடன் பேசிக்கொண்டு இருப்பது பெரிய பிரச்சினையாகத் தெரியவில்லை. ஆனாலும் மனைவி, லிரிதாவின் அம்மாவிடம் ஹாய் சொல்லக் கூடத் துணியவில்லை.

லிரிதா அதற்குப் பிறகு பிரேக் அப் வர வழியில்லாத அளவுக்கு லிமிட்டெட் ரிலேஷன்ஷிப்களில் இருந்து, திருமணம் வரை செல்லக்கூடிய லிவ் இன் ரிலேஷன் ஷிப் வரை வந்திருக்கிறாள்.

எதிர்காலக் கணவனிடம், பீஎம் உறவைச் சொல்லி இருக்கிறாள். பீ எம்முடன் செக்ஸ் வைத்துக்கொள்ளவில்லை எனினும், வைத்துக்கொண்டதாகஎதிர்கால கணவனிடம் சொல்லி விட்டாள். இப்படிச் சொல்லி விட்டால் ஒரு மேட்டர் முடியும், இல்லன்னா வளத்தி வளத்தி கேட்டுகிட்டே இருப்பான் என்பது அவளின் பல லிமிட்டட் ரிலேஷன்ஷிப்கள் சொல்லிக்கொடுத்த பாடம்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 3. பிரேக் அப்

## லவ் யூ அண்ணா

எதிர் வீட்டுச் சுட்டிப்பெண் ருமீதாவின் கல்வி மீது, சொளேர் மோகனுக்கு ஆர்வம் அதிகம். அவள் 10வது படிக்கும்போது தனிக்கவனம் எடுத்து கணக்கு சொல்லிக்கொடுத்தான். இவனுடைய கடும் பயிற்சியால் கணக்கில் மட்டும் பள்ளியிலேயே குறைந்த மதிப்பெண் எடுத்து ஃபெயில் ஆனாள் ருமீதா.

ஆனாலும், ருமீதாவின் பெற்றோர் சொளேரைக் குறை சொல்லவில்லை. ‘தம்பியும் எவ்ளோ முயற்சி பண்ணிச்சி, இந்த சனியனுக்குத்தான் கணக்கு ஒழுங்கா வரலை’ எனத் திட்டிவிட்டு அடுத்த வேலை பார்க்கச் சென்றனர்.

சொளேரின் வேலை விடுமுறை தினங்களில் அண்ணா... அண்ணா... என அன்புடன் அழைத்துக்கொண்டு சொளேரின் வீட்டிலேயே வலம் வந்து கொண்டிருப்பாள் ருமீதா. ‘ருமீ, உங்கண்ணன் இன்னும் தூங்கிட்டு இருப்பான், போய் காஃபி குடுத்து எழுப்பி விடு’ என்று சொளேரின் அம்மா அனுப்பி வைப்பாள். ‘ண்ணா, எழுந்துருண்ணா, எழுந்துருண்ணா’ எனச் செல்லம் கொஞ்சுவாள் ருமீ. புரண்டு புரண்டு படுப்பான் சொளேர். போர்வையைப் பிடித்து இழுப்பாள் ருமீ. ஏதோ மாய மந்திர வேலை நடந்து, சொளேரும் இழுக்காமல், இவளும் விழ முயற்சிக்காமல், ருமீ சொளேரின் கட்டிலில் விழுந்து விடுவாள். காஃபி மட்டும் பதமாக பக்கத்து ஸ்டூலில் படு சேஃபாக இருக்கும். சொளேர் எழுந்து, ‘என்ன ருமீ, காலைலயே தூக்கத்தை கெடுத்துகிட்டு...’ என அன்பாக அலுத்துக்கொண்டே அவளைத் தூக்கிக் கீழே இறக்கி விடுவான்.

இரண்டு குடும்பத்தார் முன்னிலையிலும் துரத்திக்கொண்டு ஓடுவது, கன்னத்தைப் பிடித்துக் கிள்ளுவது, கையைப் பிடித்து முறுக்குவது, கழுத்தை இறுக்கிப் பிடித்துக் கொள்வது என அண்ணன் தங்கை

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

ஊடலுக்குப் புதுப்புது இலக்கணம் வகுத்த வண்ணம் இருந்தனர் சொளேரும் ருமீயும்.

ருமீதா +2 வில் சொளேரிடம் டியூஷன் படிக்காமல் வெளியில் படித்ததால் அனைத்து சப்ஜக்டிலும் பாஸ் செய்து விட்டாள். இல்லை, இஞ்சினியரிங் காலேஜ் வைத்திருப்பவர்கள் லஞ்சம் கொடுத்துப் பலரை பல்க்காக பாஸ் போட வைத்ததில் அடித்துக்கொண்டு வந்தாளா எனத் தெரியவில்லை. அவர்கள் கொடுத்த லஞ்சம் வீண்போகவில்லை. ருமீதாவை பொறியியல் படிக்க வைக்க முடிவு செய்தனர் ருமீதாவின் உறவு வழி பெற்றோர்கள். வெளியூரில் சீட் கிடைத்து, ஹாஸ்டலில் தங்கிப் படிக்க வேண்டிய சூழ்நிலை.

நாளைக்குக் கிளம்ப வேண்டும் என்றால், இன்றைக்கு சொளேரின் அறைக்கு, டிஃபன் சாப்பிட்டுவிட்டு வந்தாள் ருமீதா. ‘அண்ணா, நான் போறேன். இனிமே உன்னை அடிக்கடி பாக்க முடியாது’ என்றாள். ‘இல்லடீ தங்கம், நான் அடிக்கடி உன்னை ஹாஸ்டலில் வந்து பாக்கறேன், அண்ணனையே நினைச்சிட்டு இருக்காம ஒழுங்கா படிக்கணும்’ என்றான் சொளேர்.

ருமீதாவுக்கு கண்கள் கலங்கியது, மார்பகம் விம்மித் தணியவில்லை. தற்போதைக்கு தணிவது போலத் தெரியவில்லை. மேலே மேலே விம்மிக்கொண்டேயிருந்தது. ருமீதா தாவணி அணிந்து இருந்தாள். ஒன் சைடாக ருமீதாவை காதலிக்கும் 55 வயது காதர் பாய், நச்சென தைத்துக் கொடுத்த ஜாக்கெட்டை அணிந்து இருந்தாள். சற்று முன் சாப்பிட்ட 6 இட்லி வயிற்றை அழகாக மேடிட்டு காட்டியது. ‘அட! என்ன ருமீ, கண் கலங்கிட்டு...’ எனக் கூறிக்கொண்டே கண்ணீரைத் துடைத்தான் சொளேர். ருமீ அவன் கைகளைப் பற்றி, தன் இளம்பசு மார்பில் வைத்துக்கொண்டாள். இன்னொரு கையைக் காற்றில் ஆட்டி துழாவிக்கொண்டிருந்தான் சொளேர்.

‘அண்ணா, நான் உன்னை லவ் பண்றேன். நீ இல்லாம என்னால இருக்க முடியாது’ என்றாள் ருமீதா. சொளேர் சாய்த்து வைத்த வெளக்குமாரு போல நின்று கொண்டிருக்க, அவனைக் கட்டிப்பிடித்துக்கொண்டாள் ருமீதா. மாறி மாறி முத்தமிட்டாள். ஆவேச அன்புடன், அவனின் உதடுகளைக் கவ்விச் சுவைத்துக்கொண்டே, ‘லவ் யூ டா இடியட்’ எனக் குழறினாள். சொளேர், கையை முதுகில் படர விட்டான். கொஞ்ச நேரம்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

பின்னழகை ஒத்தடம் கொடுத்தான். அவளின் பின்னந்தலையைச் சொறிந்து விட்டான்.

ருமீதா பதட்டம் அடங்கி, திரும்பவும் சொளேரை கன்னத்தில் முத்தமிட்டு, திட்டமிட்ட உதட்டு முத்தம் தெளிவாகக் கொடுத்துக்கொண்டு இருக்கையில், லேசாக விலக்கினான்.

'ருமீ, தோ பாரு, உன் மேல எனக்குப் பாசம் அதிகம். நீ நல்லா படிக்கணும்கிறதுதான் என் ஆசை. அதுக்காக நான் என்ன வேணும்னாலும் செய்வேன். இதெல்லாம் வேணாம் ருமீதா. தப்பு. நாம பழைய மாதிரியே இருக்கலாம்' என்றான்.

இடுப்பில் அறுத்து இரண்டு துண்டாக்கிப் போட்டது போல இருந்தது ருமீதாவுக்கு. சரேலென விலகினாள். தாவணியைச் சரி செய்து கொண்டாள். 'ஐ ஹேட் யூ! சாரிண்ணா... தப்பாயிடிச்சி. நான் உன்னை மறந்துடறேன். இனிமே நீ எனக்கு அண்ணன் மட்டும்தான்' என்றபடி மெதுவாக விலகிச் சென்றாள். 'பின்னாலேயே சென்று, கஷ்டப்படாதே ருமீதா குட்டி' என்று கையைப் பிடித்துத் தலையைக் கோதினான்.

'அண்ணா, என்னை இனிமே இப்டில்லாம் தொடாதீங்கண்ணா' என்றாள் அவன் கண்களை தீர்க்கமாகப் பார்த்துக்கொண்டு.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 4. பிரேக் அப்
## ட்ரிபிள் பெட்ரூம் வீடு

எப்போதும் பள்ளியில் டாப் ரேங்க் எடுத்து வந்த கோந்து மதன், தன்னை காதலாக கவனிக்கும் கன்னியரின் கடைக்கண் பார்வையை எல்லாம் தவற விட்டான். நெருங்கி வந்து உடை உரசி உள்ளக்கிடைக்கையைக் குலுக்கி குலுங்கிச் சொன்னபோதும், ஏதோ ஈக்குவேஷனையே மனதில் ஓட்டிப்பார்த்துக்கொண்டு இருந்தான்.

படிப்பே பழியாக கிடந்தாலும், அம்மாவின் கலந்து கட்டிய டயட், அவன் உடலை பொங்கலுக்கு வந்திறங்கும் கரும்புக்கட்டு போல வைத்திருந்தது. பெற்றோர்களின் கனவுப்படி ஊரிலேயே முதல் ரேங்க் எடுத்து மேற்படிப்புக்கு ஸ்காலர்ஷிப்பும் பெற்றான்.

முதல் பாகம் முற்றும்.

கல்லூரி வளாகத்தில் கடித்துக்கொண்டிருக்கும் புத்தம்புது ஷூ எடுத்து வைத்ததும், தூங்கிக்கொண்டிருப்பவன் முகத்தில் ஃப்ரீஸரில் வைத்த சாக்கடைத் தண்ணியை எடுத்து ஊற்றியது போலத் திடுக்கிட்டு விழித்து உலகை முற்றிலும் புத்தம் புதிதாகப் பார்த்தான். புத்தம் புதிதாகப் பார்த்துக்கொண்டு இருக்கையில், மொத்தப் பார்வையிலும் ஆக்கிரமித்துக்கொண்டு சுரை ராணி இவனை நோக்கி வந்துகொண்டு இருந்தாள்.

சுரை ராணி இரட்டைப் பின்னல் போட்டிருந்தாள். எலக்ட்ரிக் கடையில் காயில் கட்டுவது போல, நேர்த்தியுடன் அந்தத் தக்கணுூண்டு கூந்தல் கிள்ளி முடிக்கப்பட்டு இருந்தது. அவளது கன்னங்கள் மற்றவர்களின் முலைகளுக்குச் சவால்விட்டுக்கொண்டு இருந்தன. இரண்டு கன்னங்களிலும் திருஷ்டிப் பொட்டு வைத்து இருந்தால் ஏகபோகமாக இருந்திருக்கும். அவளைப்பார்த்த கணம்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

யாருக்கும், அவள் வாயைக் காற்றால் உப்ப வைத்து, குழந்தை போல இரு கைகளாலும் புஸ்க் எனக் கன்னத்தில் குத்த ஆசை வரும்.

ஏற்கெனவே தாராளமயமாக்கப்பட்டபொருளாதாரக் கொள்கையினால் பழுத்துச் செழித்திருந்த மார்பகங்கள், பூ போட்ட பஃப் வைத்த டாப்ஸ் போட்டிருந்ததால் பைனாகுலர் வியூவில் தெரிவது போலத் தெரிந்தன. அதற்குக் கீழே, முற்போக்கு தியேட்டர் ஆர்டிஸ்டுகள் பாண்டிச்சேரியில் சீப்பாக வாங்கிப் போடுவது போன்ற கதகளி டைப் தொளதொளப் பாவாடை அணிந்திருந்தாள்.

சுரை ராணியை வாழ்க்கையிலேயே முதன்முதலாகப் பார்க்கும் பெண்மணியைப் போலப் பார்த்தான் கோந்து மதன். அவனுடைய கண்கள் நிறைந்தன. முகத்தை இடதுவலமாக முடியும் வரை திருப்பினாலும் சுரை ராணியே தெரிந்தாள். அவளே ஹாய் சொல்லிப் பேசத்தொடங்கி, ஏழெட்டு காஃபிக்கும் நாலைந்து சோயா பாலுக்கும் பிறகு, கோந்து மோகன் ‘லவ் யூ சுரை’ என்றான்.

சுரை, கோந்துவின் கைகளை எடுத்து பாசமாகத் தன் மடியில் வைத்துக்கொண்டாள். மிகப்பெரிய சமவெளி பள்ளத்தாக்கில் தான் மட்டும் பாதுகாப்பாகப் படுத்திருப்பது போலப் பட்டது கோந்து மோகனுக்கு.

இரண்டாம் பாகம் முற்றும்.

இருவரும் சுற்றித் திரிந்தனர். தேனீயாய்ப் பறந்து ஒருவரை ஒருவர் இனிப்பாகக் கொட்டிக்கொண்டனர். பொதுவெளியில் அவளைக் கன்னத்தில் முத்தமிடுவது, அணைத்துக்கொள்வது ஏதும் பார்ப்போருக்கு ஆபாசமாகத் தெரியாதது கோந்துக்கு வசதியாகவும் மகிழ்ச்சியாகவும் இருந்தது.

கல்லூரியில் இரண்டாண்டுகள் இதைப்போல சில்மிஷங்களோடு ஓடியிருக்கையில், ஹாஸ்டலைவிட்டு தனி வீடு எடுத்துத் தங்கலாம் என்ற தன் முடிவை சுரைராணியிடம் பப்பில் வைத்துச் சொன்னான் கோந்து. ‘டிரிபிள் பெட் ரூம் வீடு எடுக்கணும்’ என்று அரை போதையில் உளறினாள் சுரை. அலைந்து திரிந்து அட்டகாசமான வீடெடுத்து விட்டான் கோந்து. வழக்கமான தொடுதல்கள், முத்தங்களுடன் ஒரு பாட்டில் வைன் ஓடி இருக்கையில், சற்றே தைரியம் பெற்றவனாக அவளின் உடைகளை நெகிழ்த்தத் துவங்கினான் கோந்து. ‘செக்ஸெல்லாம் இப்ப வேண்டாம்’ என

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

நேரடியாக மேட்டருக்கு வந்தாள் சுரை. ‘செக்ஸெல்லாம் இல்லை, ஜஸ்ட் கிஸ் மட்டும்தான்’ என்று மார்பில் முகம் புதைத்துக்கொண்டே சொன்னான் கோந்து.

‘அதுக்கு ஏன் டிரஸ்ஸை அவுக்குற?’

‘ம்… டிரஸ் மேலயே கிஸ் அடிச்சா உதடு கிழியிது, எரியிது, அதாண்டீ.’

‘ ஏய்… ப்ளீஸ், செக்ஸெல்லாம் வேணாம்.’

‘நான் செக்ஸைப்பத்தி யோசிக்கவேயில்லை, நீயே தூண்டி விடற போலிருக்கே.’

டாப்ஸை ஒரு மாதிரி கழட்டி விட்டிருந்தான். பிரேசியரோடு சாய்ந்து அமர்ந்து இருந்தாள்.

‘லைட்டை ஆ∘ஃப் பண்ணுடா, ஒரு மாதிரி ஷையா இருக்கு.’

லைட்டை ஆ∘ஃப் செய்தாலும் டிவி மானிட்டரின் வெளிச்சம் அறையில் கிக்கை ஏற்றியது. ஸ்கர்ட் அணிந்து இருந்ததால் அதை அவிழ்க்க வேண்டிய முயற்சி கோந்துக்கு தேவைப்படவில்லை. பிரேசியரின் பயன் மார்பகம் தொங்கவிடாமல் பாதுகாப்பதுதானே தவிர, மொத்த மார்பகப் பாதுகாப்புக்கு ஏற்றது எனக் கூற முடியாது. அல்ரெடி பாதி தெரிந்து கொண்டிருக்கும் மார்பகத்தை, லேசாக உசுப்பேற்றினால் மொத்த மார்பகமும்பிரேசியருக்கு டிமிக்கி கொடுத்துவிட்டு வெளியே வந்து முயல் குட்டி போலக் குறும்பாக அங்குமிங்கும் நோக்குகின்றன. இதிலெல்லாம் கோந்துக்கு பழக்கமோ முன்அனுபவமோ இல்லையெனினும், நேர்த்தியாகவே பயன்படுத்தி, முலை சுளிக்காவண்ணம் முத்தமிட்டான்.

கடைசி வரை ‘செக்ஸெல்லாம் வேணாம்டா. இப்ப செக்ஸெல்லாம் வேணாண்டா’ என்றேசொல்லிக்கொண்டு இருந்தாள் சுரை. இப்படி ஆகும்னு தெரிஞ்சி இருந்தா, புது பேண்டியாவது போட்டிருந்திருக்கலாம் என்றும் சோகமாக நினைத்தாள்.

இதைப்போன்ற சம்பவங்களுக்கிடையே இரண்டு மேட்டர்கள் கவனிப்பாரற்றுப் போயின.

மேட்டர் 1: சுரை இளைக்க ஆரம்பித்து, கோந்து பெருக்க ஆரம்பித்தான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

மேட்டர் 2: சுரையின் கஸின் பிரதர் தனி வீடு எடுத்துத் தங்கி இருந்தான். அடிக்கடி சுரை அங்கே போய் வர ஆரம்பித்தாள்.

மூன்றாம் பாகம் முற்றும்

கோந்து, சுரையினுடனான காமத்தில் முங்கி முங்கி முத்தெடுத்தான். ரேங்க் ஹோல்டராக இருந்தவன், மெதுமெதுவாக பின்னோக்கிய பெஞ்சுக்கு இடம் மாறிக்கொண்டு இருந்தான். படிப்பாவது கேசமாவது, இன்று இரவு சுரையுடன் எப்படி குலாவலாம் என்பதே அவனின் சிந்தனையாகிப்போனது. பார்ன் சைட்டிலேயே தவம் கிடந்தான். வித்தியாசமான ஏதேனும் பொஸிஷனைக் கண்டுபிடித்து, அதை அன்றிரவு சுரையுடன் கொண்டாடலாம் எனப் பகல் முழுக்க கிளுகிளுப்புடனேயே திரிந்தான்.

சற்றே வித்தியாசமான செக்ஸ் எனில் சுரை அரை மனதுடனும் முக்கால் உடலுடனும் ஒத்துழைத்தாள். ஆனாலும், ‘இதெல்லாம் எதுக்குடா’ என்றும் சலித்துக்கொண்டாள். படு வித்தியாசமான காமநிலைகளுக்கு முற்றாக எதிர்ப்பு தெரிவித்தாள். ‘என்னால சர்க்கஸ் எல்லாம் பண்ண முடியாது. வலிக்குதுடா. அருவருப்பா இருக்குடா. எவ்ளோ நேரம்டா தாங்கறது? மூச்சு முட்டுதுடா. நாம என்ன நரியா? கரடியா?’ ஒவ்வொரு காமக் களியாட்டத்தின்போதும் உதிர்த்த சாம்பிள் வார்த்தைகள் மேற்சொன்னவைகள்.

கோந்து ரேங்க் ஹோல்டராக இருந்ததும், காமத்தின்போது எக்ஸ்ட்ரா கிளுகிளுப்புக்குக் காரணமாக இருந்ததை இப்போது உணர்ந்தாள். அந்த இண்டெலெக்சுவல் கிக் தற்போது மிஸ் ஆவதை நாசூக்காகக் கோந்துவிடம் எடுத்துரைத்தாள். ‘முன்ன மாதிரியே நல்லா படி கோந்து. நானும் செக்ஸும் எங்க ஓடிப்போயிடப்போறோம்? ப்ரொஃபசர்ஸ், ஸ்டூடண்ட்ஸ் எல்லாம் முன்ன உன்னைப் பாராட்டிப் பேசறதும், பெருமையா பாக்கறதும் எனக்கு அவ்ளோ சந்தோஷமா இருக்கும். இப்ப ஏண்டா தொம்மை ஆயிட்ட? ப்ளீஸ் கோந்து, முன்ன மாதிரி படி கோந்து’ என்று மன்றாடினாள். ‘நீ என்னை லவ் பண்றியா, இல்லை என் ரேங்கை லவ் பண்றியா’ என எகிறினான் கோந்து.

இதற்கிடையில் இடை மெலிந்து ரீ எண்ட்ரி கொடுத்த நயன்தாரா கணக்காகிப் போனாள் சுரை. மாடலிங் செய்யப் போகலாம் என்றளவுக்கு நளினமாகிப்போனாள். எண்ட்ரியோ, ரீ எண்ட்ரியோ, பிரபு போலவே ஆகிப் போனான் கோந்து.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

நான்காம் பாகம் முற்றும்.

சுரை, கஸின் பிரதர் பைக்கின் பின்னால் அமர்ந்துகொண்டு போவதைப் பார்த்துவிட்டான் கோந்து. சுரை வீட்டுக்கு வரும் வரை 7 முறை சுரையுடன் சண்டை போடுவதை மனதுக்குள் டயலாக் டயலாக்காக ஓட்டிப்பார்த்துக்கொண்டான். சுலபமாகச் சண்டை போட பக்காவாக ஸ்க்ரிப்ட் மனதுக்குள் உருவானது.

சுரை உள்ளே நுழைந்ததும், ‘இங்க வந்து ஒக்காரு, உன் கூட பேசணும்’ என்றான்.

‘ரெஸ்ட் ரூம் போய் ரெஃப்ரஷ் பண்ணிட்டு வந்துடறேன்.’

‘இல்ல, ஜஸ்ட் 5 மினிட்ஸ்தான், ஒக்காந்துட்டு போ.’

‘சரி, சொல்லு.’

‘எங்க போயிட்டு வர?’

‘ஷாப்பிங்.’

‘யார் கூட?’

‘அண்ணன் கூட.’

‘அண்ணனா? காலேஜே உங்க ரெண்டு பேரையும் பத்தி தப்பா பேசுது.’

‘காலேஜ் பேசட்டும். நீ தப்பா நினைக்கிறியா?’

‘ஆமாம். தப்பாத்தான் நினைக்க முடியும். அவனைப்பாத்தா அண்ணன் போலவா இருக்கு?’

‘ சரி, நீ நினைச்சிட்டுப் போ, எனக்கு கவலையில்லை.’

‘அப்புறம் எதுக்கு அவன் வீட்ல போய் நிறைய நேரம் தங்குற? அவன் கூட பைபக்ல சுத்தற?’

‘அண்ணன் கூட பைக்ல போறது தப்பா?’

‘பைக்ல போறது தப்பில்லடீ, மொலையை முதுகுல அமுக்கிக்கிட்டு போறதுதான் தப்பு. எவளாச்சும் அண்ணன் முதுகுல மொலையை வச்சி அமுக்கிக்கிட்டு போபாவாளாடீ?’

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

‘ச்சீ, அசிங்கமா பேசறடா... உனக்கு எப்பவும் செக்ஸ் நினைப்புதான்டா.’

‘ஆமாண்டீ. உன் மொபைல்ல மெசேஜ் பாத்தேன். அண்ணன் லவ் யூ சொல்றான். நீயும் லவ் யூ சொல்ற?’

‘என் மொபைலை நீ நோண்டியதே தப்பு. அண்ணன் லவ் யூ சொல்லக்கூடாதா?’

‘லவ் யூ சிஸ்டர்னு சொல்லலாம். நீயும் லவ் யூ பிரதர்னு சொல்லலாம். அப்படியாடீ சொல்லிக்கிறீங்க? ஏண்டீ அவனுக்கு வேற பொண்ணா கிடைக்கல? தங்கச்சி கிட்ட லவ்ஸ் உட்டுகிட்டு, கருமம் புடிச்சவன்.’

‘ஸ்டாப் திஸ் டர்ட்டி ஸ்பீச்’ என்றபடி கிளம்பிப் போனாள்.

இவன் இல்லாதபோது, வீட்டைக் காலி செய்து வேறு அறைக்கு மாறினாள். இவனை மொத்தமாக அவாய்ட் செய்தாள். போனில் பிளாக் செய்தாள். சுரையும் அவள் கஸின் பிரதர் பற்றியும் கல்லூரி முழுக்க கிசுகிசுத்தார்கள். இவனும் கொஞ்சம் தூபம் போட்டான்.

பல நாள் பகீரதப் பிரயத்தனத்திற்கு பிறகு, சுரையை ஒரு காஃபி ஷாப்பில் பிடித்தான். கெஞ்சிக் கூத்தாடி அமர வைத்தான். தெளிவாகச் சொன்னாள்,

‘ஐ ஆம் நாட் அட்ராக்டட் டு யூ!

‘யூ மீன்?’

‘இன்னும்தெளிவா சொல்லணுமா? எனக்கு உன்னைப் பார்த்தா ஃபீலிங்கே வரலை.’

‘ஏன்?’

‘அட்ச்சீ, உன்னைப்பாத்தா மூடே வரலைடா! உன்னைப் பாக்கவே பிடிக்கலை. டீஸண்டா சொல்றேன். இனிமே என் விஷயத்துல தலையிடாதே, அசிங்கப்பட்டு போகாதே! குட் பை’ எனச் சொல்லிப் பிரிந்தாள்.

ஐந்தாம் பாகம் முற்றும்.

டிகிரி முடித்து, போஸ்ட் கிராஜுவேஷனும் முடித்தான். நடுவில் காதலிக்கவும் முயலவில்லை, வந்த காதலையும் அறியவில்லை. இவளைத்தான் கட்டிக்கப்போறேன் என வீட்டிலும்,

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

நண்பர்களிடத்திலும் மோகம் இருவருக்கும் உச்சாணிக்கொம்பில் இருந்தபோது சுரையை அறிமுகப்படுத்தி வைத்தது மட்டும்தான் தர்மசங்கடமாக இருந்தது கோந்துக்கு.

அண்ணன் - தங்கை உறவு சீரும் சிறப்புமாகச் சென்றது. அண்ணன் கல்யாணத்தை சுரை முன்னின்று நடத்தி வைத்தாள். கோந்து மணப்பெண்ணையும், சுரையையும் வெறிக்கப் பார்த்து அமர்ந்து இருந்தான். சொந்தமாகத் தொழில் தொடங்கி பிஸியானான் கோந்து. விலைமாதுவிடம் சென்று திரும்புகையில் எதிர்கொண்ட நண்பன், ‘ஏண்டா மச்சி இங்கெல்லாம் போயிட்டு வர்ற?’ என்று வினவிய போது... ‘இதான் மச்சி பெஸ்ட். கல்யாணம் பண்ற வரைக்கும் இதான் பெஸ்ட். கல்யாணத்துக்கு அப்புறமும் இதான் மச்சி பெஸ்ட். கல்யாணத்துக்கு முந்தியும் பிந்தியும் எவளயும் லவ் மட்டும் பண்ணிடக்கூடாது மச்சி’ என்றவன், ‘பீர் அடிக்கலாம் வா மச்சி’ என்றான்.

கடைசி பாகம் முற்றவில்லை.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 5. பிரேக் அப்

## உண்மையான தேவதை

யாருக்கும் தெரியாமல் செமத்தியாகக் காதலிப்பான் ஓங்காரன். உருகி மருகிக் காதலிப்பான். அவளுக்குத் தலை தேய்த்து, குளிப்பாட்டி, ஜடை பின்னி சாம்பிராணி காட்டி மடியில் படுத்துத் தூங்க வைப்பான். தூங்கும்போது பின்னங்கழுத்தில் இருக்கும் கேசக்கற்றையை லாகவமாக ஒதுக்கிவிட்டு, மின்னும் வியர்வைத்துளிகளை நாகப்பாம்பு நாக்கால் சுரீரென உறிந்து மென்மையாக முத்தமிடுவான்.

இதைப்போல இன்னும் இன்னும்... கால் நக அழுக்கை எடுத்துவிட்டு, நகம் நறுக்கி, உள்ளங்காலை அமுக்கி மசாஜ் செய்து, கால் சுண்டு விரலை மென்மையாகச் சப்பி பாதத்தில் முத்தமிட்டு, முழங்காலுக்கு முன்னேறி முத்தம் பதித்து மேல் நோக்கி இருட்டைப் பார்ப்பான்.

இந்த கால்கோள் விழா ஏதும் சம்மந்தப்பட்ட பெண்ணுக்குக் கூடத் தெரியாது. இப்படியாக ஒரு பெண்ணுடன் காதலித்து, சல்லாபித்து, கர்ப்பமாக்கி, பிள்ளைபெற்று வாழ்வாங்கு வாழ்ந்து, எல்லாமும் ஒரு மாதத்திற்குள் முடிந்து விடும். வேறேதேனும் பெண், தாவணி பறக்கவோ, துப்பட்டா தெறிக்கவோ கடந்து சென்றால், அவளுக்கு ஹாய் சொல்ல ஆரம்பித்து விடுவான்.

கற்பனைதான் என்றாலும் அதில் ஒரு நயம் இருக்கும். சும்மா மற்றவர்களைப்போல அன்றிரவே அவளைத் துகிலுரிந்து சுய இன்பம் அனுபவித்து, 15 மில்லி விந்தை வெளியேற்றி, உள்ளதும் போச்சுடா எனக் கால் பரப்பிக் கிடப்பது ஓங்காரன் வாழ்க்கையில் இல்லை. முதலில் ஹாய் சொல்லுவான். அவளும் ஹாய் சொல்லுவாள். சில நேரங்களில், என்ன என்றும் கேட்பாள்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

‘உங்களைப் பாத்ததுமே தெய்வீகமா தோணிச்சி’ என்பான். ‘உலகத்தையே புதுசா பார்ப்பது போல இருக்கு’ என்பான். ‘என் வாழ்வின் தேவதை நீங்கதான், பாத்த அடுத்த செகண்ட் எனக்கு தெளிவா தெரிஞ்சிடிச்சி’ என்பான்.

அவள் பெரும்பாலும், பாசமாக அன்பாகச் சிரித்துக்கொண்டே பார்ப்பாள். காஃபி ஷாப்புக்கு அழைக்க மாட்டான், மொபைல் நம்பர் கேட்க மாட்டான். ‘கோவிலுக்குப் போலாம் வாங்க’ என்பான். அவளும் வருவாள். சன்னதியில் அவளின் கேசத்தை முகர்ந்து பார்ப்பான். கையைப் பற்றி வலம் வருவான். குங்குமம் இட்டு விடுவான். குளக்கரையில் அமர்ந்து அவளைப் பாட்டு பாடச் சொல்வான். அவள் பாடி முடிக்கையில் உச்சந்தலையில் முத்தம் இடுவான். அவள் அப்படியே அவன் மடியில் சாய்வாள். குளக்கரை மீன்கள் துள்ளிக்குதித்து விளையாடும். லேசாக இருள் கவியும். கோயில் மணி அடிக்கும். கோபுரத்தில் விளக்குகள் மின்னும். அவளின் முகத்தை அப்படியே குழந்தை போல ஏந்தி, உதட்டில் மென்மையாக முத்தமிடுவான். அவளின் மூடிக்கொண்ட இமைகளுக்குள் நர்த்தனம் ஆடிக்கொண்டிருக்கும் கண்களை முத்தமிடுவான். சில நேரங்களில், அவள் தாவணி அணிந்திருந்தால், அவளை அப்படியே குளத்துப் படிக்கட்டில் படுக்க வைத்து, மென்மையாக தாவணியை விலக்கி, பசித்த வயிற்றை புசிக்கத் தொடங்குவான். சுடிதார் அணிந்து இருந்தால், இந்த காரியம் செய்ய மாட்டான். கோவிலுக்குள் ஆடை அவிழ்ப்பது ஓங்காரனுக்குப் பிடிக்காது.

நாள்தோறும் சுற்றித்திரிந்தும் அன்றைய தினத்திற்கான தேவதை ஓங்காரன் கண்ணில் மாட்டவில்லை. ஆங்கில நாளிதழ் ஒன்று மசாஜ் விளம்பரம் ஒன்று வெளியிட்டு இருந்தது. மசாஜ் தகவல்களைத் தவிர மற்ற தகவல்கள் விளக்கமாகக் கொடுக்கப்பட்டு இருந்தன. அழகான பெண் மற்றும் முழு திருப்திக்கு உத்திரவாதம் எனச் சொல்லப்பட்டு இருந்தது.

பர்ஸைச் சோதித்துப் பார்த்து, தேவைப்படும் பணத்தை ஏடிஎம்மில் எடுத்துக்கொண்டு, மசாஜ் செய்யப்படுவதாகக் குறிப்பிட்டிருந்த விலாசத்துக்கு விரைந்தான் ஓங்காரன். மனதுக்கு அமைதியான முறையில் வடிவமைக்கப்பட்டிருந்தது அந்த வீடு. மென்மையான சங்கீதம் ஓடிக்கொண்டிருக்க, வன்மையாகத் தோன்றிய பெண்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

மென்மையாகப் பேசினாள். பணத்தை அவளிடம் செலுத்திவிட்டு, தனக்கு ஒதுக்கப்பட்ட அறையில் சென்று அமர்ந்தான்.

சரிதான், அவன் நினைத்தது போலவே அவனுடைய உண்மையான தேவதை அறையினுள் நுழைந்தாள். கோமணத்தை கட்டிக்கொள்ளச் சொல்லி அறிவுறுத்தினாள். வெட்கத்துடன் கோமணம் கட்டிக்கொண்டான். மசாஜை ஆரம்பித்து, பேச்சுக் கொடுக்க ஆரம்பித்தாள். என்ன வேலை செய்கிறீர்கள், இங்க இதுதான் முதல் முறையா என்பது போலச் சில கேள்விகளைக் கேட்டு, மசாஜ் முடிந்ததும் ஃபுல் ரிலாக்ஸ் வேண்டும் எனில் 1, 000 ரூபாய் என்றாள். இவன் தனியே, ஹாய் சொல்லி தனி ரூட்டில் பேசிக் காதலித்துக்கொண்டு இருந்தான்.

‘1000 ரூபாய் என்றதும், ஃபுல் ரிலாகஸ்னா என்ன’ என்றான். அவனுடைய ஆண்குறியை ஆட்டிக்காண்பித்து, சிரித்துக்கொண்டே ‘இதான் ஃபுல் ரிலாக்ஸ், தெரியதா’ என்றாள். சிரித்தான். வெட்கத்துடன் தலை ஆட்டினான். ‘ஃபுல் சேட்டிஸ்பேக்ஷன் வேணுமா? 2000 ரூபாய்’ என்றாள். ‘ஃபுல் சேட்டிஸ்பேக்ஷன்னா?’ என்றான். அவன் மேல் படுத்து, முன்னும் பின்னும் ஆடினாள்.

‘நாட்டி’ என்றாள்.

‘உன் பேர் என்ன’ என்றான். ‘சம்பவி’ என்றாள். ‘சம்பவி, உன்னைப் பாத்ததுமே முடிவு பண்ணிட்டேன். நீதான் என் தேவி’ என்றான்.

‘ம்ம்ம்’என முனகினாள். ‘ஐ லவ் யூ மை டியர் சம்பவி’ என்று கூறியபடியே அவளின் கால்களுக்குச் சொடுக்கு எடுக்க ஆரம்பித்தான். அவள் ஆழ்ந்து அனுபவித்தாள். ‘என் உயிர் உள்ளுக்குள்ளேயே செத்து, இப்ப... இப்ப புதுசா பொறந்துடிச்சி’ என்றான். அவள் கைகளைச் சொடுக்கு எடுத்து மிருதுவாக வருடிக்கொடுத்தான். அவளை அள்ளி மடியில் போட்டுக்கொண்டு, ‘என் செல்ல சம்பவி, உன்னை அணு அணுவா காதலிக்கிறேன். நம் காதல்தான் உலகின் உண்மையான காதல்’ என்றான். ‘ஐ டூ லவ் யூ சோ மச் ஹனி’ என்றாள் சம்பவி. ‘இனிமே நீ இல்லாம ஒரு செகண்ட் கூட இருக்க முடியாது. உன்னையும் என்னையும் வச்சி கட்டிக்க போறேன்’ என்றான். ‘ம்ம்ம். என் செல்ல தங்கம்’ என முனகினாள். ‘மை பியூட்டி, நாம கல்யாணம் பண்ணிக்கலாம். எப்பன்னு சொல்லு’ என்றான். ‘லவ் யூ சோ மச் மை பேபி, எப்ப வேணாடா செல்லம்’ என்று அவனைக்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

கட்டிக்கொண்டு படுக்க வைத்தாள். ‘நான் உனக்குத்தான், நீ என்னை என்ன வேண்டுமானாலும் செய், டிரைவ் மீ’ என்றான் ஓங்காரன். அவள் சடுதியில் அவன் மேலமர்ந்து, ஒரு தெய்வீகப் புணர்ச்சியை முடித்து அவன் மேல் கவிழ்ந்தாள். இருவரும் அப்படியே கட்டியணைத்தபடிச் சில நொடிகள்.

அவள் ஒயிலாக எழுந்து ரெஸ்ட் ரூம் போனாள். இருவரும் உடை மாற்றிக்கொண்டு, அவளின் மொபைல் நம்பர் வாங்கிக்கொண்டு, திரும்பவும் அவளை மனதாரக் கட்டி அணைத்தான். ‘பைடா சம்பவி’ எனக் கூறி கதவைத் திறக்க முற்படுகையில், சட்டையைப் பிடித்து இழுத்தாள். ‘என்னடா செல்லம்’ என்றான். ‘யோவ் பேசின ரெண்டாயிரம் குடுக்காம போறியே? உனக்கு ஏத்தமாதிரி எவ்ளோ கம்பனி குடுத்தேன். அதனாலதான் யார் கூட போனாலும் சம்பவி செம கோ ஆபரேடிவ்னு சொல்லுவாங்க. மேல போட்டு குடுக்கலைன்னாலும் பரவால்ல, ரெண்டாயிரத்த எடுத்து வச்சிட்டு போ’ என்றாள்.

ஓங்காரனின் முதல் ரியல் பிரேக் அப் இவ்வாறாக நடந்தது.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 6. பிரேக் அப்
## பேமிலி ப்ரண்ட்ஸ்

இந்தக்கதை நம்ப முடியாததாக இருக்கும். ஒரு லாஜிக்கும் பிடிபடாது. மொத்தமும் ஃபேக் எனத் தோன்றும். இது உண்மைக்கதைதான். உண்மைக்குப் பல்வேறு வடிவங்கள் உள்ளன. நாம் உண்மையையும் ஒரு டெம்ப்ளேட்டாக ஆக்கி விட்டோம். அந்த டெம்ப்ளேட்டுக்குள் செட்டானால்தான் உண்மை என நம்புவோம். உண்மையையே உண்மை என நம்பவைக்க கொஞ்சம் பொய்யையும், அலங்காரத்தையும் கலந்து சொல்ல வேண்டியுள்ளது. எழுதும் எனக்கே இந்தக் கதையை ஒழுங்காக எழுத முடியுமா எனத் தெரியவில்லை. கதையின் முடிவு குழப்பமாக மட்டும் அல்ல, என்னாங்கடா இது என்று இருக்கிறது. காசா பணமா, நானும் எழுதிடறேன், நீங்களும் படிச்சிடுங்க.

இந்த மதத்தைச் சேர்ந்தவனும் அந்த மதத்தைச் சேர்ந்தவளும் காதலித்தனர். சின்ன சின்ன ஊடல்கள் மற்றும் பெரிய பெரிய கூடல்களுமாக அவர்கள் காதல் செழித்தோங்கியது. காதலனின் நண்பன் இப்போது கதையில் எண்ட்ரி கொடுக்க வேண்டும். அதனாலோ என்னவோ காதலனுக்கு பைக் ஆக்சிடண்ட் ஆகி மருத்துவமனையில் அட்மிட் ஆனான். காதலனுக்கு மூன்று நாட்கள் சுயநினைவில்லை.

காதலனின் நண்பன் மருத்துவமனைக்கு வந்து காதலனைக் கவனித்துக்கொண்டான். காதலி, காதலனுக்கு போன் செய்யும்போதெல்லாம் நண்பன் எடுத்துப் பேசி, காதலனின் நிலைமையை அப்டேட் செய்தபடி இருந்தான்.

கலி கால நாகரீகத்தின்படி இருவரும் தத்தமது மொபைல் நம்பர்களைப்பரிமாறிக்கொண்டனர். காதலியின் குரல் நண்பனுக்கு ரொம்பப் பிடித்துப்போயிற்று. ‘அண்ணா, அவருக்கு இப்ப எப்படி

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

இருக்கு' என்று நண்பனிடம் பரிதவிப்போடு கேட்கையில், காதலனின் மீதான அந்தப் பெண்ணின் காதலும் நண்பனுக்கு ரொம்ப ரொம்பப் பிடித்துப்போயிற்று.

மருத்துவமனையில் இருந்து டிஸ்சார்ஜ் ஆகி காதலன் வீட்டுக்குப் போனதும், அம்மா பேச்சைக் கேட்டு அந்தப் பெண்ணை வெறுக்க ஆரம்பித்தான் அல்லது அம்மா பேச்சு அவனுக்கு அப்போதைக்கு வசதியாக இருந்தது. காதலி கர்ப்பமாகி இருந்தாள். சீட்டுக்கட்டைக் கலைப்பது போல குழந்தையைக் கலைப்பது சென்னையில் சுலபம்தான் எனினும், ஆள் தெரிய வேண்டும். நண்பனுக்குத் தெரிந்த மருத்துவமனையில் காதலியை அழைத்துக்கொண்டு போய்க் குழந்தையைக் கலைத்துவிட்டு, காதலிக்கு ஆதரவாக இருந்தான் நண்பன்.

நண்பன் இப்போது கதையின் ஹீரோ ஆகிவிட்டதால், இனி நண்பனை ஹீரோ என்றும், காதலனை வில்லன் என்றும் அழைக்கலாம்.

உறவு மாறினாலும், கர்ப்பமே கலைந்தாலும், காதலி கதையில் காதலியாகவே தொடர்கிறாள். வில்லன் மீதான வெறுப்பு ஹீரோ மேல் காதலாக மாற, ஹீரோவும் காய்ந்து போய்க் கிடந்ததால் (ஹீரோவே என்னிடம் இப்படித்தான் சொன்னார்) காதலை ஒத்துக்கொண்டார். இருவரும் கோயம்பேடு காய்கறி மார்க்கெட், மண்ணடி, வால்டாக்ஸ் ரோடு, ரிச்சி ஸ்ட்ரீட், போர்ட் டிரஸ்ட் ஆஃப் இந்தியாஎன சுற்றித் திரிந்தனர். பார்க் பீச் என சுற்றித் திரிந்தனர் என எழுதுவதற்கு விரல்களுக்குக் கூச்சமாகவும் போரிங்காகவும் உள்ளது.

செக்ஸியாகப் பேசிக்கொண்டனர். இவர்களும் கட்டிப்பிடித்துக்கொண்டனர், முத்தமிட்டுக்கொண்டனர். காதலிக்கு வைன் பிடிக்குமாம். அது என்னவோ எல்லாப் பெண்களுக்கும் வைன் பிடிக்கிறது! அப்பத்தாக்கள்தான் பிராந்தி, ரம், விஸ்கி என வஞ்சனை இல்லாமல் அடிக்கின்றனர். வைன் வாங்கிக்கொடுத்தான் ஹீரோ!

காதலி வைன் அடித்தால் என்ன நடக்கும்? அதுவே நடந்தது. அதுக்குத்தானே ஒயின்! கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன்தோன்றிய தமிழ்க் காதலி பேசிய அதே டயலாக்கை இவளும் பேசினாள். 'நீயும் என்னை ஏமாத்திட மாட்டியே?' 'ச்சே ச்சே... ஏமாத்த மாட்டேன்' என்றான் ஹீரோ!

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

இதற்குப்பிறகு ஹீரோ என்னிடம் சொன்ன கதைதான் எனக்குப் புரியவில்லை. என்னால் அதை சுமாராகக் கூட எழுத முடியும் எனத் தோன்றவில்லை. அதனால் ஹீரோ எனக்கு எழுதி இன்பாக்ஸில் அனுப்பியதை அப்படியே இங்கே கொடுக்கிறேன். நீங்களாச்சி, ஹீரோவாச்சி.

ஹீரோவின் இன்பாக்ஸ் மெசேஜ்:

அப்ப ஃப்ரண்ட் போன் பண்ணான், வீட்டுக்கு வா சீக்கிரம்னு... (அவனுக்கு தெரியாது என் காதல். )போனா அந்தப் பெண்ணு தற்கொலை பண்ணிக்கப்போறதா இவனுக்குச் சொல்லிச்சாம், என்னைப் போய் அவங்க வீட்ல சமாதனம் செய்யச்சொன்னான். எனக்கு பயம். போன் நம்பர் காட்டினான். சரினு போனேன். அவங்க அப்பாகிட்ட பேசினேன். (அந்தப் பொண்ணோட டீச்சரின் பைய்யனு...) பொண்ண பத்தி கேட்டா அவர் உசார் ஆகிடுவார்னு. நான் பேசுனுதக்கு அப்புறம் என் ஃப்ரண்டோட அம்மாவும் அவங்க அண்ணணும் அங்க போய் என்னைப் பத்தி தப்பா சொல்லி, பொண்ணோட அப்பா என்னை எச்சரிக்க, நான் கல்யாணம் பண்ணிக்கிறேன்னு சொல்ல, செம அடி எனக்கு. அந்தப் பொண்ணுக்கும் கல்யாணம் ஆகிடுச்சு, நண்பனுக்கும் கல்யாணம் ஆகிடுச்சி. இப்ப இரண்டு பேரும் பேமலி பிரண்ட்ஸ்ஸ்ஸ்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 7. பிரேக் அப்

## சிறுவர்கள் கதை

மலைக் கிராமம். மலைக் கிராமம் என்றால் பழங்குடியினர், அடிப்படை வசதிகள் இல்லாத பாவப்பட்டவர்கள் வாழும் பகுதியில் நடக்கும் காதல் கதை என கிக்காக நிமிர்ந்து உட்கார வேண்டாம். கிட்டத்தட்ட நகரத்தில் இருக்கும் அனைத்து வசதிகளும் கொண்ட மலைக்கிராமம். நடுத்தர மக்கள் மற்றும் பணக்காரர்கள் வாழும் மலைக்கிராமம்.

கல்லூரியில் இரண்டாம் ஆண்டு படித்து வந்தான்வெற்றி. கிராமத்தில் இருந்து பேருந்து பிடித்து டவுனுக்குப் போய் அங்கேயிருந்து பேருந்து பிடித்து நகரத்துக்குப் போய் பயணப்பட்டு பயணப்பட்டு கல்வியறிவை ஏற்றிக்கொண்டு இருந்தான். கல்லூரியில் சேர்ந்த இந்த இரண்டாண்டுகளும் நரகமாகக் கழிந்தன வெற்றிக்கு. ஏனைய தோழர்கள் அனைவரும், கல்லூரியில் சொற்ப அளவில் படித்துக்கொண்டு இருந்த அனைத்து நங்கைகளையும் எமர்ஜென்ஸி கோட்டாவில் லவ் செய்து கொண்டிருந்தனர். வெற்றிக்கு அவர்களை சைட் அடிக்கக் கூடப் பிடிக்கவில்லை. காதலி கிடைக்காத தோழர்கள், பெண்கள் கல்லூரி வாசல், தியேட்டர் வாசல் என டாப் அடித்து பேண்ட் பாக்கெட்டில் கைவிட்டுச் சொறிந்துகொண்டு நிற்க, வெற்றி மட்டும் இந்தச் சடங்கு சம்பிரதாயங்களில் கலந்து கொள்ளாமல், ஊருக்கு பஸ் பிடிப்பதிலேயே குறியாக இருந்தான்.

நந்தனா!நந்தனாதான் காரணம். நந்தனாவும் வெற்றியும் ஒரே பள்ளியில் படித்து வந்தனர். நந்தனா வெற்றியைவிட இரண்டு வருடம் தாமதமாகப் பிறந்ததனால், இரண்டு வகுப்பு கீழே படித்து வந்தாள். வெற்றி ஏறும் பேருந்தில் அடுத்த ஸ்டாப்பில் நந்தனாவும் ஏறுவாள். நந்தனாவைப் பார்த்ததுமே 8வது படித்துக்கொண்டிருந்த வெற்றிக்குப் பிடித்துப் போனது.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

நந்தனாவை இப்போது வர்ணிக்க இடமில்லை. சிறுமியை எப்படி வர்ணிப்பது? நாம் என்ன வக்கிர சினிமாவுக்கு ஸ்க்ரிப்டா எழுதிக்கொண்டு இருக்கிறோம்? சிறுவர் கதைகளில் வருவது போலவே சொல்லிவிடலாம். நன்கு அழகாக துறுதுறுவென இருப்பாள். துறுதுறுவென்று இருந்த நந்தனாவை சிறுவன் வெற்றிக்குப் பிடித்துப் போனதில் ஆச்சரியமில்லை. இரண்டு வருடங்கள் தொடர்ந்து சிறுமியை ஆர்வமாகப்பார்த்துக்கொண்டேயிருந்தான் வெற்றி. அஜளைப் பார்த்துக்கொண்டு இருப்பது குதூகலமாக இருந்தது.

முதல் வருடம் சிறுமிக்கு தன்னை யார் யார் பார்க்கிறார்கள் என்பதே தெரியவில்லை. இரண்டாவது வருடம் ஒரே முகத்தைத் தினமும்பார்த்துப் பழகியதால் மென்சிரிப்பு சிரிக்க ஆரம்பித்தாள். இரண்டாம் வருடம் என்பதால் சரியாக 366 வது நாள் சிரிக்க ஆரம்பித்தாளா எனக் கேட்கக்கூடாது. குத்து மதிப்பாக 17ம் மாதம் 22 வது நாள் சிரிக்க ஆரம்பித்தாள் என வைத்துக்கொள்ளுங்கள்.

தினமும் சிரிப்பது இல்லை. எப்போதாவது வெற்றியின் முகத்தை செகண்டில் கடக்கையில் ஒரு சிநேகிதமான சிரிப்பு, அவ்வளவுதான். இதைக் காதல் கத்திரிக்காய் என்றெல்லாம் பினாத்தக்கூடாது. தினமும் ஒரே பேருந்தில் வருவதால் வந்த ஒரு ஸ்நேக உணர்வு. இப்படியே போய்க்கொண்டு இருக்க இது என்ன சிறுவர் கதையா? கதையின் கியரை மாற்றுவதற்கு ஏதுவாக நந்தனா பெரிய மனுஷி ஆனாள். சில நாட்கள் நந்தனாவைப் பார்க்க முடியாமல் வெற்றி குழம்பிப் போனான்.

பெரிய மனுஷி ஆவது என்பதை பயன்பாட்டுச் சொல்லாகத்தான் கதையில் பாய்ச்சி இருக்கிறேனே ஒழிய, நந்தனா இன்னும் சிறுமியாகத்தான் இருந்தாள். ஒரு சிறிய உடல் மாறுதல் ஓவர் நைட்டில் ஒரு சிறுமியை பெரிய மனுஷி ஆக்க முடியுமா என்ன? எப்போதும் போல மீண்டும் அதே ரெட்டைச் சடையோடு, அதிகாலை வேளையில் துள்ளலோடு பேருந்தில் ஏறுவது, கலகலப்பாகப் பேசிக்கொண்டு தோழிகளுடன் சிரித்துத் தள்ளுவது என வெற்றிக்கு ரசிக்க தீனி போட்டுக்கொண்டு இருந்தாள். வெற்றியும் தினமும் நந்தனாவை யாரும் பார்க்காத போது பார்ப்பது, உடனே தலையைத் திருப்பி ஒரு கிழவியைக் கண்களோடு கண்கள் சந்திப்பது, பிறகு மலை உச்சியில் இருக்கும் ஒரு தனித்த மரத்தை

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

ஆராய்ச்சிக்கண்ணோட்டத்தோடு பார்ப்பது என இந்தப் பாழாய்ப்போன சமுதாயத்தோடு மல்லுக்கட்டிக்கொண்டு இருந்தான்.

வெற்றிக்கு பன்னிரண்டாம் வகுப்பு வந்ததும் எல்லோருக்கும் பிடிக்கும் கிறுக்கு பிடித்தது. தன் பேருந்து நிறுத்தத்தில் ஏறாமல் நந்தனா நிற்கும் பேருந்து நிறுத்ததிற்கு வந்து நிற்க ஆரம்பித்தான். நந்தனாவும் 10வது படித்துக்கொண்டு இருந்ததால் முகத்தில் லேசாக வெட்கம் துளிர்த்து, விதவிதமான புன்னகையும், பலதரப்பட்ட முக பாவங்களும் தோன்றி மறைந்தன.

இப்படி ஓடிக்கொண்டு இருந்த வெற்றியின் வாழ்க்கை, கல்லூரி என்ற வில்லன் மூலம் முடிவுக்கு வந்தது. தினமும் நந்தனாவை சந்திக்க முடியாமல் போனது. விடுமுறை தினங்களில் நந்தனாவின் கிராமத்துக்கு பைக்கில் சென்று பார்ப்பான். பத்து முறை சென்றால், ஒரு முறை நந்தனாவின் முகத்தை காணலாம். அதுவும் ஒரு செகண்ட்தான். நந்தனா இவனைப் பார்த்தாளா இல்லையா என்று ஏதும் தெரியாது. கோவில் திருவிழா, உறவினர்களின் விசேஷம் என அவ்வப்போது இருவரும் பார்வையால் சந்தித்துக்கொண்டனர். வெற்றி கல்லூரி முடிந்து வேலை தேடும் படலத்தில் பிசியானாலும் நேரம் கிடைக்கும்போதெல்லாம் கேஷுவலாகப் பார்த்துக்கொள்வது போன்ற சந்தர்ப்பங்களுக்காக மெனக்கெட்டபடியே இருந்தான்.

வெற்றியின் அம்மா ஒருநாள் வெற்றியை அழைத்து, ‘முக்கியமான உறவுக்காரங்க கல்யாணம், நானும் அப்பாவும் போகணும். பக்கத்து கிராமத்துல நந்தனாவுக்கும் கல்யாணமாம், நீ போய் மொய் எழுதிட்டு வந்திடு’ என்றார். கையில் மொய்ப்பணம் மற்றும் டெலிவரி சார்ஜஸையும் திணித்தார். வெற்றிக்குத் தோன்றிய உணர்ச்சிகளையெல்லாம் விளக்கத் தேவையில்லை. இந்த உணர்ச்சி தமிழகத்தில் அனைவருக்கும் பழக்கப்பட்ட உணர்ச்சிதானே, நீங்களே அப்படி மருகி உருகி வெந்து வெம்பி தேம்பி ததும்பி பொங்கிப் பார்த்துக்கொள்ளுங்கள்.

நந்தனா கிராமத்துக்கு பைக்கில் சென்று நந்தனா வீட்டுக்கருகே இருக்கும் உறவுக்காரர் வீட்டை மாலையில் அடைந்தான். அனைத்து வீட்டு மக்களும், நந்தனாவின் வீட்டில் குழுமி இருந்தார்கள். நந்தனாவின் வீட்டிலேயே பெரிய பந்தல் போட்டு நாளை திருமணம். வெற்றியின் உறவினரும், ‘ரெடியாயிட்டு அங்க வந்துடுங்க’ என்று சொல்லிச்சென்றார். யாரோ ஒரு உறவுக்காரப் பெண் அவசரமாக

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

வெற்றிக்கு காபி கொடுத்துவிட்டுச் சென்றாள். பக்கத்து அறையில் கதவிலும் கொடியிலும் உள் பாவாடைகளும் பிரேசியர்களும் மங்களமாகத் தொங்கி மங்கள நிகழ்ச்சிக்கு வலு சேர்த்துக்கொண்டு இருந்தன. காய்ந்து போன மல்லிகைப் பூக்கள் உதிர்ந்து கிடந்தன. வாத்திய இசை நாராசமாக ஒலித்தபடி இருந்தது. காபியை வெறிக்க குடித்துக்கொண்டு இருந்தான் வெற்றி. ‘உள்ள போ... உள்ள போடி. உள்ளதான் இருக்கார்’ எனக் குரல் கேட்டது. நந்தனா பின்பக்க வழியாக உள்ளே நுழைந்தாள். பின்னாலேயேநந்தனாவின் அக்கா, ‘நீங்க பேசிட்டு இருங்க வந்துடறேன்’ என்றபடி வெளியே போனார்.

வெற்றி காபியை கீழே வைத்தபடி நாற்காலியில் இருந்து எழுந்து கொண்டான். நிற்க பலமில்லாதது போலத் தோன்றவேநந்தனா தூணில் சாய்ந்து கொண்டாள். ‘நல்லா இருக்கீங்களா?’ இது வெற்றி. முதல் முறையாக நந்தனாவிடம் பேபசுகிறான்!

‘நீங்க நல்லா இருக்கீங்களா?’ கேள்வி கூட முழுதாகக் கேட்க முடியவில்லை நந்தனாவுக்கு. அழுகை வருகிறது. தேம்பிக்கொண்டே துடைத்துக்கொள்கிறாள். இருவரும் பேசமுடியாமல் ஒருவரை ஒருவர் பார்த்தபடி துவண்டு போய் நிற்கின்றனர். நந்தனா கொஞ்சம் அழுகையைக் கட்டுப்படுத்திக்கொண்டே, ‘உங்களைத் தொடர்பு கொள்ள எவ்வளவோ முயற்சி பண்ணேன். முடியலை என்னால’ என விசும்பிக்கொண்டே சொல்கிறாள்.

வெற்றி ஏதோ சொல்ல வாயெடுக்க முயற்சிக்கையில், உறவுக்கார அம்மா எதற்கோ திடீரென உள்ளே நுழைந்து இவர்கள் இருப்பதை பார்த்து ஒருகணம் அதிர்ச்சியாகி, பின்பு சமாளித்துக்கொண்டு, ‘பாப்பா, இங்க என்னாம்மா பண்ணிட்டு இருக்க. அங்க உன்னை தேடிட்டு இருக்காங்க பாரு, சீக்கிரம் வா’ என இழுத்துக்கொண்டு செல்கிறார்.

காதல் முடிவுக்கு வரும் வேளையில்தான் இருவரும் முதன்முதலில் பேசிக்கொள்கின்றனர் மற்றும் தங்கள் காதலை உறுதிப்படுத்திக்கொள்கின்றனர்.

காதலும் பிரேக் அப்பும் ஒரே கணத்திலேயே நடந்து முடிந்து விட்டது.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 8. பிரேக் அப்
## டெக்ஸ்ட் முத்தம்

ஆன்சைட். வெளிநாட்டு உற்சாகம் இவ்வளவு சீக்கிரம் வடியும் என மன்மதா நினைக்கவேயில்லை. ஆன்சைட்டுக்கு கிளம்பும்போது அவ்வளவு உற்சாகம். ‘என்னாடி, புருஷனைப் பிரியப்போறோம்கிற வருத்தம் கொஞ்சம் கூட இல்லை, அட்லீஸ்ட் நடிக்கலாம் இல்ல?’ என்று நக்கலாகக் கேட்டுக் கிண்டல் செய்திருந்தான் காதல் கணவன் சந்திரசேகர். உறவினர்கள், நண்பர்கள் சிலர் ஆன்சைட்டில் இருந்து அள்ளி விடும் கதைகளைக் கேட்டு கேட்டு ஆன்சைட்டுக்குப் போயே தீர வேண்டும் என்ற வெறி மண்டைக்குள் ஏறி அதுவே லட்சியமாகி விட்டது மன்மதாவுக்கு.

ஆன்சைட் வந்த சில நாட்களிலேயே கண்கள் விரிய பிரமித்துப் பார்ப்பது முடிந்து விட்டது. ஊர் சுற்றவும் அலுத்து விட்டது. சரியான தோழமையும் செட் ஆகவில்லை. அறை தோழியும் எப்போது பார்த்தாலும் ஐ போனில் பாட்டு கேட்டுக்கொண்டும், ஆன்லைனை நோண்டிக்கொண்டும், எதையாவது வாயில்போட்டு அரைத்துக்கொண்டும் இருந்தாள். அவளிடம் ஏதேனும் கேட்டால், இரு இரு என்பது போல இடது கையால் ஆசீர்வாதம் வழங்கிவிட்டு, ஐ போனை சர்வீஸ் செய்வது போல சீரியஸாக ஏதோ செய்து கொண்டிருப்பாள். அரை மணி நேரம் கழித்து ஹெட்போனை எடுத்துவிட்டு, ‘என்ன கேட்ட’ என்பாள். மன்மதாவுக்கு என்ன கேட்டோம் என்பதே மறந்து விடும். கால நேரக் குழப்பத்தால் கணவனிடம் போனில் பேசுவதும் குறைந்து போனது.

அலுவலகத்தில் சாதாரணமாகப் பழக ஆரம்பித்த நந்தகுமார், மெதுவாக மெசேஜ் அனுப்ப ஆரம்பித்தான். போரடித்துக்கொண்டு வெறுமையாக இருந்த மன்மதாவுக்கு அந்த மெசேஜ்கள் தேவையாக இருந்தன. மெசேஜ்கள் இருபுறமும் வேகம் பிடிக்க ஆரம்பித்தன.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

கொஞ்சம் கொஞ்சமாக மெசேஜில் ஏற்பட்ட நெருக்கத்தை மன்மதா தெரிந்தே அனுமதித்த வண்ணம் இருந்தாள். கிண்டல் கேலியாகத் தொடர்ந்த மெசேஜ்கள், திடீரென அன்பொழுக மாறும். மன்மதாவின் அழகைப்பற்றிப் பேசும். ஒரு கட்டத்தில் மெசேஜ் அடிக்ட் ஆகிப் போனாள் மன்மதா.

ஒருநாள் நள்ளிரவில், ‘எனக்கு தூக்கமே வரவில்லை. உன்னுடன் பேசிக்கொண்டே இருக்க வேண்டும் போல இருக்கிறது’ என நந்தாவிடம் இருந்து மெசேஜ் வந்தது. ‘எனக்கும்தான். ஆனால் தூங்க வேண்டுமே! நாளை வேலை இருக்கிறதே. தூங்குடா மை டியர்’ என பதில் அனுப்பினாள். ‘ஒரே ஒரு முத்தம் கொடுக்க முடியுமா’ என்றது நந்தாவின் மெசேஜ். ஒரு செகண்ட் திணறினாள் மன்மதா. ‘மெசேஜில் மட்டும்தான், ஓகேவா’ என அனுப்பினாள்.

‘ஓகே!’ ‘ம்ம்ம்மா! உம்ம்ம்மா!’ ‘ஹக் யூ மை டியர்...கிஸ் யூ. ஹக் யூ டைட்... கிஸ் யூ எவ்ரிவேர் ஆன் யூர் பாடி.’ இப்படி ஆரம்பித்த மெசேஜ்கள் விடிய விடிய ஓடி... மன்மதாவின் யோனியில் அவன் டெக்ஸ்ட் முத்தமிட்டபோது விடிந்து விட்டது.

இருவருக்கும் வடிந்து விட்டது.

அதற்குப்பிறகு நேரில் சந்திக்கையில் பல நாள் பழகியவர்களைப்போல எந்தத் தயக்கமும் இல்லாமல் கட்டியணைத்துக்கொண்டனர், முத்தமிட்டுக்கொண்டனர். பேண்டியை அவிழ்க்க மட்டும் மன்மதாவுக்கு மனசாட்சி குத்தியது.

குத்திய மனசாட்சியின் மீதே அழுந்த முத்தமிட்டு பேண்டியை கழட்டி விட்டான் நந்தா. இருவரும் தனியாக ஒரு வீடெடுத்து தங்கினர். பொற்காலம், வசந்தகாலம், இளமைக்காலம் என அனைத்தும் ஒருங்கே திரண்டு வந்தது போல இருந்தது மன்மதாவுக்கு. கணவன் போன் வந்தால் கசந்தது. கணவனுக்கு போன் செய்யவே பிடிக்கவில்லை. கணவனைவிட நெருக்கமாக நந்தாவுடன் இருந்தாள். வெளியே சென்றால் கை கோர்த்துக்கொள்ளாமல் போவதே இல்லை. எப்போதும் ஒட்டிக்கொண்டே இருப்பது, அவன் மடியில் படுப்பது, அவன் இவளுக்கு மசாஜ் செய்து விடுவது, ஒருவருக்கொருவர் ஊட்டிவிட்டுக்கொள்வது என கசிந்துருகிக் கலந்து கிடந்தனர்.

மன்மதா ஆன்சைட் முடிந்து ஊர் திரும்பும் வேளை வந்தது. இரவு முழுக்க அழுது அழுது மன்மதாவுக்கு முகமே வீங்கி விட்டது. மன

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

உளைச்சலோடும், கடும் வேதனையோடும் விமானப் பயணத்தைச் சிரமப்பட்டு முடித்து வீடு வந்து சேர்ந்தாள். ஆசையோடு அணைத்த கணவனை கடமைக்கு முத்தமிட்டு விலக்கிவிட்டு, கட்டிலில் தஞ்சமடைந்தாள். திரும்பவும் வேலைக்குச் செல்ல ஆரம்பித்தாள்.

கணவன் நெருங்கும்போதெல்லாம் அசூயையாக உணர்ந்தாள். உடலும் மனமும் கணவனுக்காக மலரவே இல்லை. ஏதோ வேலைப் பளு எனப் பெரிதாக தொந்தரவு செய்யாமல், பீர் அடித்துவிட்டுத் தூங்கும் மன்மதாவைப் பாசமாகத் தலையைத் தடவி விட்டபடித்தூங்கிப் போனான் கணவன். நந்தாவுடன் மெசேஜ் தொடர்ந்து கொண்டிருந்தது. கொஞ்சம் கொஞ்சமாக சொந்த ஊர் மீண்டும் பழக ஆரம்பித்தது. நட்பு விரிவடைந்தது. கணவனின் உண்மையான அன்பால், பாசத்தால், காதலால், மனமும் உடலும் மீண்டும் கணவனுக்காக மலரத் தொடங்கின. ஒரு நாள் வெறியுடன் கணவனைத் தள்ளி அள்ளி அள்ளி முத்தமிட்டாள். கணவன் திணறத் திணற அவன் மேலமர்ந்து இயங்கிச் சரிந்து வெடித்து அழுது அவனைக் கட்டிக்கொண்டாள். நந்தாவுடனான உறவை நினைத்துப்பார்த்தாள். ஜஸ்ட் காமம் மட்டுமே தூக்கலாக இருந்தது புரிந்தது. உரிமையாக ஒருவருக்கொருவர் ஏதும் செய்து கொள்ளவில்லையென உறைத்தது. நந்தாவுடனான உறவைத் தொடர்வது நல்லதில்லை எனப் புரிந்தது. சொசைட்டியில் பெயர் கெடும். அம்மா அப்பாவே கை கழுவி விடுவார்கள் என நினைத்தாள். அந்த உறவு இப்போது தேவைப்படவும் இல்லை.

சினிமா இடைவேளையில் பாப்கார்ன் சாப்பிடுவது போலானது நந்தாவுடனான உறவு. மெசேஜைக் குறைத்தாள். ஒரு கட்டத்தில் நிறுத்தினாள். நந்தா ஆன்சைட் முடிந்து வந்தான். இருவரும் ஒரே கம்பெனி என்பதால் சுலபமாகச் சந்தித்தான். ‘ஏண்டீ என்கிட்ட பேசறதில்ல’ எனக் குமுறினான். மன்மதா தெளிவாக அனைத்தையும் எடுத்துக் கூறினாள். இது சரி வராது என விளக்கினாள். கணவன் மீதான தன் உண்மையான காதலையும் தன் வாழ்க்கையையும் எடுத்துச் சொல்லி, ‘தயவு செய்து பிரிந்து விடு, தொந்தரவு செய்யாதே’ என மன்றாடினாள். ருசி கண்ட பூனை சும்மா இருக்குமா? ‘ஜஸ்ட் கிஸ் மட்டும் குடு, சினிமா பார்க்க வா’ எனத் தொந்தரவு வந்து கொண்டேயிருந்தது. ‘இன்னிக்கிநைட் மட்டும் வந்துட்டுப் போயிடு’ எனக் கெஞ்சிய மெசேஜ்கள் ஒரு கட்டத்தில் மிரட்ட ஆரம்பித்தன.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

வேறு வழியில்லாமல் ஒரு நாள் சென்று அவனுடன் படுத்துவிட்டு வந்தாள். 'இனிமே கூப்பிடாதே, இதான் லாஸ்ட்னு சொன்னதால வந்தேன்' எனச் சொல்லிவிட்டு வந்தாள். மீண்டும் அழைப்புகள், மிரட்டல்கள். இருவரும் நெருக்கமாக எடுத்துக்கொண்ட படங்கள் மிரட்டலாக இவளுக்கே வந்தன. இதைத் தொடரவிடக்கூடாது என கம்பனி ஹெச் ஆரிடம் புகார் அளித்தாள். நந்தா தொந்தரவு செய்த்தற்குப் பல ஆதாரங்கள் இருந்ததால், நந்தா வேலையைவிட்டு டிஸ்மிஸ் செய்யப்பட்டான்.

அன்று இரவு கணவனுடன் நிம்மதியாக மடியில் படுத்துப் பேசிக்கொண்டு இருக்க, தரைத்தளத்தில் கூச்சல். எட்டிப்பார்த்தால் சிறிய அளவில் கூட்டம். நந்தாதான் குடித்துவிட்டு கத்திக்கொண்டு இருந்தான். 'என் கூடப் படுத்துட்டு, இப்ப கழட்டி வுட்டுட்டு அவன் கூட ஜல்ஸாவா? என்னை வேலையைவிட்டு தூக்கறியா? தேவடியா, வெளில வாடி' எனக் கத்திக்கொண்டு இருந்தான்.

மலையுச்சியில் ராட்டினம் சுத்துவது போல இருந்தது மன்மதாவுக்கு. 'என்னா மன்மதா? இவனை உனக்கு தெரியுமா' எனக் கேட்டான் சந்திரசேகர். அரை மயக்கத்தில், அழுது கொண்டே கணவன் மார்பில் சரிந்தாள். அதற்குள் அபார்ட்மெண்டில் யாரோ போலீஸுக்கு சொல்லிவிட, போலீஸ் வந்து நந்தாவைக் கொத்தாக அள்ளிக்கொண்டு போனது. சற்று நேரத்தில் மன்மதாவுக்கு கால் வந்தது, போலீஸ் ஸ்டேஷன் வரச் சொல்லி. போலீஸ் ஸ்டேஷன் சென்று, அவமானங்களைச் சந்தித்து, நள்ளிரவு வீடு திரும்பிய சந்திரசேகர் மன்மதாவுடன்பேசிக்கொள்ளவில்லை.

மன்மதா, 'என்னை மன்னிச்சிடுங்க. என்னை மன்னிச்சிடுங்க' என்று சொல்லிக்கொண்டேயிருந்தாள். இரவு முழுக்க சந்திரசேகர் புகைத்துக்கொண்டேயிருந்தான். வாந்தி வந்தது அவனுக்கு. எடுத்தால் வாந்தியும் வெளியே வர மறுத்தது. காலையில், காஃபி குடித்துவிட்டு, மன்மதாவை அழைத்து, தீர்க்கமாகச் சொன்னான். 'நாம பிரிஞ்சிடலாம்.'

மன்மதா அழுதாள். 'எனக்கு நீங்கதாங்க எல்லாம். ஏதோ மயக்கத்துல புத்தி கெட்டுப் போயி பண்ணிட்டேன். தப்பை உணர்ந்து உங்ககிட்டயே வந்துட்டேன். அவன்தான் விடாம துரத்திட்டே இருந்தான்' எனக் கணவன் அருகில் வந்து அவன் தோளைப்பிடித்து சாய்ந்து கொண்டே கூறினாள். 'தப்பு பண்றது சகஜம்தான். ஒரு

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

தடவை ரெண்டு தடவைன்னா பரவால்ல. அவன் கூட குடும்பமே நடத்தி இருக்க. அவன் காட்டும் மெசேஜ் எல்லாம் பாத்தா குமட்டிகிட்டு வருது. என் கிட்ட கூட இவ்ளோ இண்டிமேட்டா இருந்தது இல்ல. எல்லத்துக்கும் மேல என் கிட்ட நீயா சொல்லல. இங்க வந்தும் அவன் கூட போயி கூத்தடிச்சி இருக்க. இனிமே உன்னை நம்ப முடியாது மன்மதா. என்னால முழு மனசோட உன் கூட வாழ முடியாது. ‘ப்ளீஸ்ங்க... கொஞ்ச நாள்ல சரியாயிடுங்க.’ ‘இல்ல... உன்னை கட்டிப்பிடிச்சாலோ, முத்தம் கொடுத்தாலோ எனக்கு அவன் நினைப்புதான் வரும். எல்லாமே அருவருப்பா ஆயிடிச்சி. உன்னை எனக்கு ஒரு ஃபிரண்டு போல கூடப் பாக்க பிடிக்கலை. என்னைத் தொந்தரவு செய்யாதே. பிரிஞ்சிடலாம். காசு எவ்ளோ வேணா வாங்கிக்க, ஆளை விடு.’

‘வேணாங்க... கோவத்துல இப்ப அப்படித்தான் தோணும். நான் இல்லாம உங்களால வாழ முடியாதுங்க. என் நினைப்பு வந்துகிட்டே இருக்கும்.’

‘வந்தா பாத்துக்கலாம். அப்ப வந்து சேந்துக்கறேன். இந்த வீட்டை வக்கேட் பண்ணிடுவோம். நான் இப்ப வெளியூர் போறேன். உன் பொருட்களை எல்லாம் பேக் பண்ணிட்டு சொல்லு. வக்கேட் பண்ணிடலாம்.’

சந்திரசேகர் டிராவல் பையை எடுத்துக்கொண்டு வெளியேறினான். மன்மதா வலுவிழந்து சோஃபாவில் சரிந்தாள். மன்மதா கர்ப்பமாக இருந்தாள்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 9. பிரேக் அப்

## சர்ப்ரைஸ் விசிட் (ரா...ராம்... ராம்கி)

ஏர்ப்போர்ட்டில் இருந்து வீட்டுக்கு வரும்போதே, மிட்நைட் கடையில் நிறுத்தி பிரியாணி வாங்கிக்கொண்டான் ராமகிருஷ்ணன். சிலருக்கு ராம், ராம்கி, கிருஷ். லலிதாவுக்கு ரா. ஜஸ்ட் ரா. நீ ராவான ஆள்டா எனக் கொஞ்சுவாள்.

வீட்டை நெருங்குவதற்கு முன்பே கால் டாக்சியை கட் செய்துவிட்டு, மெதுவாக கேட்டைத் திறந்து உள்ளே நுழைந்தான். வீட்டைத் திறந்து லைட்டை ஆன் செய்யாமல், பெட்ரூமுக்குள் நுழையப்பார்த்தான். பெட் ரூம் மூடி இருந்தது. ச்சே. திட்டம் எல்லாம் பாழ். அடுத்த வாரம் வருவதாகச் சொல்லி, சர்ப்ரைஸாக இப்போதே வந்திருக்கிறான். அவளுக்குப் பிடித்த பிரியாணி வேறு வாங்கிக்கொண்டு. நைஸாக நுழைந்து தூங்கிக்கொண்டு இருக்கும் லலிதா மேல் பாய்ந்து இறுக்க அணைத்து அவளை அலற விடலாம் என பிளான். பின் அவளைச் சமாதானப்படுத்தி, பிரியாணி ஊட்டிவிட்டு, கொஞ்சம் வைன் சுவைத்துக்கொண்டே, அவளையும் பிட்பிட்டாகச் சுவைக்கலாம் என்று திட்டம். விமானத்தில் வரும்போதே இந்தச் சம்பவங்களை மனதில் கிக்காக ஓட்டிப்பார்த்துக்கொண்டே வந்தான். இப்போது ராட்சஸி எல்லாவற்றையும் கெடுத்து விட்டாள். பெட்ரூம் சாவி இவனிடம் இல்லை. கதவைத் தட்டி அவளை எழுப்பித்தான் அழைக்க வேண்டும்.

பரவாயில்லை பாதி சர்ப்ரைஸாவது இருக்கட்டும் எனச் சமாதானப்படுத்திக்கொண்டு, கதவைத் தட்டினான். அரவம் இல்லை. இரண்டு மூன்று முறை தட்டிப்பார்த்தான், எந்தச் சலனமும் இல்லை. குழப்பத்தோடு போன் செய்தான். ரிங் போய்க்கொண்டே இருந்தது. மீண்டும் ஹாலுக்கு வந்தான். இவ்வளவு ஆழ்ந்த நித்திரைக்குப் போக மாட்டாளே என நினைத்துக்கொண்டே பார்வையை ஓட்டியதில்,

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

லலிதா வழக்கமாக வெளியே போட்டுக்கொண்டு செல்லும் செருப்பு கிடந்தது. அப்படியே மேலே பார்த்தான். பெட் ரூம் சாவி தொங்கிக்கொண்டு இருந்தது.

அப்பாடா என நிம்மதியோடுசாவியை எடுத்துக்கொண்டு நைஸாக நடந்து பெட்ரூம் கதவைத் திறந்தான். லைட்டைப் போடாமல் கண்களைப் பழக்கிக்கொண்டு பார்த்தான். கட்டில் காலியாக இருந்தது. குளியலறைக்குச் சென்று பார்த்தான். யாரும் இல்லை. என்னடா இது குழப்பமாக உள்ளதே! வெளியே எங்கோ சென்றிருக்கிறாள்... எங்கே சென்றிருப்பாள்? இந்த நேரத்துக்கு அடிக்கலாமா வேண்டாமா என்ற யோசனையுடன் மாமியாருக்கு அடித்தான். பகலில் கூட உடனே எடுக்காத மாமியார் நள்ளிரவில் இரண்டு ரிங்கில் எடுத்தார்.

‘லலிதா அங்க வந்திருக்காளா ஆன்ட்டி’ என்றான். ‘இல்லீங்களே மாப்ள, நீங்க எப்ப ஊருக்கு வறீங்க’ என்றார் ஆண்ட்டி. ‘இல்ல. நான் வந்துட்டேன். லலிதா வீட்ல இல்ல, உங்க கிட்ட எதாவது சொல்லிட்டுப் போனாளா? எங்க போயிருப்பான்னு தெரியுமா?’ ‘இல்ல மாப்ள...’ என்ற மாமியார் சற்றே சுதாரித்துக்கொண்டு, ‘பிரேமா வீட்ல சடங்கு. அதுக்குப் போயிருந்தாலும் போயிருப்பா. நான் விசாரிச்சிட்டுச் சொல்றேன். நீங்க படுத்துத் தூங்குங்க மாப்ள, காலையில பாத்துக்கலாம்’ என்று கூறினார். அவர் குரல் லேசாக நடுங்கியது.

குழப்பத்துடன் சிகரட் எடுத்துக்கொண்டு முதல் மாடிக்குப் போய், மொட்டை மாடிக்குப் படியேறினான். மொட்டை மாடிக்கு வளைந்து திரும்புகையில்... தண்ணீர் டேங்க் பக்கத்தில் இருக்கும் கட்டை சுவரில் மகேஷ் சரிந்து அமர்ந்து இருக்க, லலிதா முட்டி போட்டுக்கொண்டு, அவனது ஆண்குறியை வேக வேகமாகச் சுவைத்தபடி இருந்தாள். அவளுக்கு அடிவயிற்றில் இருந்து குரல் எழுந்தபடி இருந்தது.

மகேஷ் கண்களை மூடியபடி தலையைப் பின்பக்கமாகச் சாய்த்துக்கொண்டு, ‘ம்ம்ம்... இன்னும் நல்லா நல்லா’ என முனகிக்கொண்டு இருந்தான். சரேலென அவளது வாயில் இருந்து விடுவித்துக்கொண்டு அவளைப் படுக்க வைத்து மேலே படர்ந்தான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

‘என்னா பெனிஸ்டா உன்னுது? ஐயோ கொல்லுதுடா என்னை’ என்றாள். ராமகிருஷ்ணனுக்குமண்டையில் தவுசண்ட் வாலா வெடித்துக்கொண்டு இருந்தது. லேசாக முன்னேறினான். புணர ஆரம்பிக்கையில் லலிதாதான் முதலில் ரா வைப் பார்த்தாள். அடுத்த செகண்ட், புணர்ந்து கொண்டிருந்த மகேஷைத் தள்ளிவிட்டு எழுந்து ஆடை எடுக்க ஓடினாள். விரைத்த குறியோடு, என்ன நடந்தது எனத் தெரியாமல் அம்மணமாக எழுந்து நின்றான் மகேஷ்.

‘ஏண்டி துணி எடுக்க ஓட்ற? என் கிட்ட வெக்கமா? மகேஷ் கிட்ட வெக்கமா?’ என்றான் ராம்கி. பேன்ட்டையும் டி ஷர்ட்டையும் மாட்டிக்கொண்டே, ‘சாரி மச்சான், எதா இருந்தாலும் காலைல பேசிக்கலாம். பிரச்சனை பண்ணாதே. நீ என்னா சொன்னாலும் கேட்டுக்கறேன்’ எனக் கூறியபடி வேகமாக வெளியேறினான் மகேஷ்.

கீழே இறங்கும்போது, ‘என்னை மன்னிச்சிடுடா. ஆனா, தப்பு எம்மேல மட்டும் இல்லடா’ என்றபடி ஓடிப்போனான்.

துணியைப் போர்த்திக்கொண்டு குத்துக்காலிட்டு அமர்ந்து குலுங்கி அழுது கொண்டிருந்தாள் லலிதா. மாமியார் போன் அடித்தார். எடுத்து, ‘தேவடியாள எனக்கு கட்டி வச்சி கழுத்தறுத்துட்டீங்களே’ என்றான்.

‘நான் பண்ணது தப்புதான். ஆனா நீங்க என் தங்கச்சிக்கு அனுப்பின மெசேஜ் எல்லாம் நான் அவ போன்ல பாத்துட்டேன். நீங்க ரெண்டு பேரும் கிஸ் அடிச்சிக்குற போட்டோவையும் நான் பாத்துட்டேன். நீங்களும் மகேஷும் பேச்சிலரா இருந்தப்ப அடிச்ச கூத்தையெல்லாம் மகேஷ் என்கிட்ட சொல்லிட்டார்’ என அழுது கொண்டே வெடித்தாள். ‘நான் 100 பேரை ஒழுத்தேன். நீயும் நூறு பேரை போய் ஒழு... போ’ என்று கத்தியபடியே செவிளில் ஒன்று விட்டான். சுருண்டு கீழே விழுந்தாள். அடி இன்னும் விழும் என்று பயந்துகொண்டு, கொஞ்சம் வலிப்பு வந்தது போல நடித்தாள்.

மகேஷின் மனைவியிடம் மொத்தத்தையும் போட்டுக்கொடுத்தான் ராம்கி.

மகேஷின் மனைவி அம்மா வீட்டுக்குச் சென்று டிவேர்ஸ் நோட்டீஸ் அனுப்பினாள்.

லலிதாவின் தங்கச்சியைக் கல்யாணம் செய்துகொண்டு ஜாலியாகவாழ்ந்தான் ராமகிருஷ்ணன். மகேஷ் அதற்குப்பிறகு

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

லலிதாவின் போனையே எடுப்பதில்லை.

இந்தக்கதையில் பிரகாஷ் என்ற ஒரு கேரக்டர் இருப்பது லலிதாவைத் தவிர யாருக்கும் தெரியாது.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 10. பிரேக் அப்

## ஸ்வப்னா...ஸ்வப்னா...ஸ்வப்னா...

ரமணீயன் அசிஸ்டெண்ட் போன் எடுத்து ‘சார் ஷூட்ல இருக்கார் மேடம். முடிஞ்சதும் அவசியம் பேச சொல்றேன் மேடம்’ என்றார். ஸ்வப்னா... ஸ்வப்னா என இருமுறை சொல்லிப்பார்த்துக்கொண்டார். காலங்கருக்கலிலேயே சரக்கு நாத்தத்துடன் இருக்கும் ஹீரோவுடன் மாரடித்துக்கொண்டு இருந்தார் ரமணீயன்.

‘எனக்கு என் லட்சியம்தான் முக்கியம். லட்சியத்துக்கு முன்னால் காதல் கீதல் எல்லாம் ஒண்ணுமேயில்லை. நான் சினிமா இயக்குநர் ஆயிட்டுதான் கல்யாணம் பண்ணிப்பேன்.’ இந்த வசனத்தை டிரெயினில் முறுக்கு பிஸ்கட் விற்பவன் போலச் சொல்லி வெறுப்பேற்றிக்கொண்டிருந்தான் ஹீரோ. ஹீரோயினுக்குச் சிரிப்பாக இருந்தாலும், காத்திருந்து காத்திருந்து அக்குளில் வேர்ப்பது எரிச்சலாக இருந்தது. ‘நல்ல மசிரு லட்சியம்’ என மனதில் நினைத்துக்கொண்டது போல அவளது முகபாவம் இருந்தது.

இந்த வசனம் இன்றைய காலத்தில் தியேட்டரில் கைதட்டல் வாங்குமா என்பது சந்தேகம்தான். ‘லச்சியம் இருக்குறவன் இன்னாத்துக்கு லவ் பண்ணோனும், அந்தப் புள்ளை கூடப் படுக்கோணும்’ என கருத்து பொழிந்தார் துணை நடிகை ஒருவர். ‘அந்தப் புள்ளை கூடப் படுத்ததா எல்லாம் வசனம் இல்ல, சீனும் இல்ல, நீயா ஏங்க்கா ஓவரா பேசற’ என்றார் இன்னொரு துணை நடிகை. ‘இவனுவ அப்டில்லாம் சீன் வக்க மாட்டாங்கோ. ரொம்ப உத்தமனுங்க மாதிரி புதுசா வசனம் எழுதுவானுங்கோ. இப்பல்லாம் காதலிக்கிறவன் எவன் படுக்காம இருக்கான் சொல்லு? படுக்கத்தான் காதலிக்கிறானுங்களே. மேட்டர் முடிஞ்சதும் லட்சியமாம் மசிராம்’ எனப் பொரிந்து தள்ளினார். ‘இந்தக் கதை கூட எதாச்சும் உண்மைக் கதையா இருக்கும். ஹீரோதான் வில்லன் வேலை பாத்திருப்பான். படத்துல பாரு,

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

ஹீரோயினை வில்லியாக்கி, ஹீரோவை ஒசரத்துல கொண்டு ஒக்கார வச்சி கைதட்டல் வாங்கி குடுத்துடுவாங்க.' இன்னும் என்னென்னவோ தொடர்ந்து பேசிக்கொண்டிருந்தார் அவர்.

சரக்கு வாய் ஹீரோ ஒரு வழியாக வசனம் பேசி முடித்ததும், ஹீரோயின் டேர்ன் வந்தது. 'எங்க வீட்ல என்னைக் கட்டாயப்படுத்தறாங்க, என்னால ரொம்ப நாள் காத்திருக்க முடியாது.' இரண்டுடேக்கில் ஓகே செய்தாள். 'உன்னால காத்திருக்க முடியலைன்னா... போ! சினிமாதான் இனிமே என் காதலி'என்ற வசனத்தை மனப்பாடம் செய்ய ஆரம்பித்தான் ஹீரோ!

பிரேக்கில், 'ஸ்வப்னா மேடம் கால் பண்ணி இருந்தாங்க சார்' என்றார் அசிஸ்டெண்ட் ரமணீயனிடம். 'பேசறேங்க' என்றவர், ஹீரோயினை அழைத்தார். 'ஸ்வப்னா, டைட்டில் கேரக்டர் பண்ற, இன்னும் டெடிகேஷனா பண்ணனும், உன்னை நம்பித்தான் படமே இருக்கு' என்றார். படத்தின் பெயரும் ஸ்வப்னா. புது ஹீரோயினுக்கும் ஸ்வப்னா என்று பெயர் சூட்டினார். படத்தில் அவளின் கேரக்டர் பெயரும் ஸ்வப்னா. இனிமேல்தான் காதல் முறிந்ததும் ஹீரோ எப்படியெல்லாம் கஷ்டப்பட்டு முன்னேறி இயக்குநர் ஆகிறான் என்ற போர்ஷன் எடுக்க வேண்டும். பேச்சிலர் ரூம், டாஸ்மாக், மொட்டை மாடி டிஸ்கஷன், வாய்ப்பு கேட்டுப் போய் அவமானப்படுவது, உலகத் திரைப்படங்கள் பார்ப்பது என ஸ்க்ரிப்ட் பக்காவாக இருக்கிறது. இடையிடையே ஸ்வப்னாவுடன் இருந்த காலத்தை இருண்ட காலத்தில் நினைத்துப் பார்த்து வெம்புவது என சோக பிட் பின்னணியில் சில மாண்டேஜ்கள்.

ரமணீயனின் சொந்தக் கதைதான் இது. முதல் படம் கமர்ஷியல் ஹிட் கொடுத்துவிட்டு, இரண்டாம் படமாகத் தன் கதையையே எடுக்கிறார். பள்ளி வாழ்க்கையிலேயே ஸ்வப்னாவை துரத்தி துரத்திக் காதலித்தது, அவள் காதலை ஒத்துக்கொண்ட பின் உலகிலேயே சந்தோஷமான ஜோடியெனப் பறந்து திரிந்தது எல்லாம் ஷூட்டிங் எடுத்தாகி விட்டது. ஸ்வப்னாவை பீச் இருட்டில் முத்தமிட்டது, அவளுடன் உறவு கொண்டது எல்லாம் ரொம்ப பர்சனல். ஸோ... ஸ்க்ரிப்டில்எடிட்டட்.

தமிழ்ப் பட ஹீரோவாவது காதலிக்கும்போதே செக்ஸ் வைத்துக்கொள்வதாவது? அவளுடனான ஆறு வருடக் காதலை ஸ்க்ரிப்டில் சுருக்கி விட்டார். கல்லூரி முடித்து, ஸ்வப்னாவுக்கு

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

வேலை கிடைத்து வேலைக்குப் போய்க்கொண்டு இருக்க, ரமணீயனுக்கு எப்போது சினிமா இயக்குநராகும் கனவோ லட்சியமோ உருவானது எனத் தெரியவில்லை. வேலை தேடாமல் சினிமா சினிமா என அலைய ஆரம்பித்தான் வெங்கட் ரமணி என்ற இப்போதைய ரமணீயன்.

சில வருடங்கள் இப்படியே ஓடி, ஸ்வப்னாவிற்குத் திருமணம் செய்ய வேண்டிய கால கட்டம் வந்தது. ஸ்வப்னா தன் காதலை வீட்டில் தெளிவாக எடுத்துக் கூறினாள். அவள் வீட்டில் எந்த எதிர்ப்பும் தெரிவிக்காமல், ‘பையனுக்கு ஏதாவது வேலை இருந்தா கட்டிக் குடுத்துடலாம்’ என்று முடிவு சொன்னார்கள். ஸ்வப்னா, வெங்கட் ரமணியிடம் ‘டேய், சும்மா ஏதாச்சும் வேலை வாங்கிக்கோ. கல்யாணம் பண்ணிக்கலாம். அப்புறமா நீ இயக்குநரா ஆக முயற்சி செய். அதுக்கு அப்பறம் நம்மளை யாராலும் பிரிக்க முடியாது’ என்றாள். இதைவிட ஒரு காதலி என்ன செய்ய முடியும்? அருமையான ஐடியா தானே! வெங்கட் ரமணி மறுத்தான். ‘என்னால அப்படியெல்லாம் செய்ய முடியாது’ எனப் பிடிவாதமாக மறுத்தான். ஸ்வப்னாவுக்குக் கோபம் வந்தது. பெற்றோர்கள் எதிர்பார்ப்பு நியாயமானது. ‘சும்மா நடிக்க கூட முடியாதுன்னா எப்பிடி’ என அலுத்துக்கொண்டாள். வெங்கட் ரமணிக்கு அவள் அலுப்பு கோபத்தை வரவழைத்தது. வார்த்தை தடித்தது. சண்டை ஆரம்பமானது. ஸ்வப்னா தற்கொலை முயற்சியில் ஈடுபட்டாள். அவளுடைய அப்பா, வெஙக்ட் ரமணியிடம் வந்து பேசிப்பார்த்தார். மீண்டும் பிடிவாதமாக முடியாது என்றான். அவளுடைய அப்பாவும் மருத்துவமனையில் அட்மிட் ஆனார்.

வெங்கட் ரமணிக்கு நிறைய தமிழ்ப்படம் பார்த்ததாலோ என்னவோ, சினிமாட்டிக்காக யோசித்தான். மனதிற்குள் தன்னை ஒரு தியாக புருஷனாக உருவகித்துக்கொண்டான். ஸ்வப்னாவை சந்தித்தான். தான் உதவி இயக்குநராக வேலை செய்யும் படத்தில் ஒரு பெண்ணுடன் காதலில் இருப்பதாக சீரியஸாக கூறினான். ஸ்வப்னா அதிர்ச்சி அடைந்தாள். ‘சினிமாவில் இதெல்லாம் சர்வ சாதாரணம். இன்னும் கூடப் பல பெண்களிடம் உறவு கொள்ள நேரிடும். ஒருவனுக்கு ஒருத்தி எல்லாம் பிராக்டிக்கல் இல்லை, நீதான் அட்ஜஸ்ட் செஞ்சி போய்க்கணும்’ என்றான். செம எரிச்சலாகி, ‘ச்சீ த்தூ’ என்றபடி ஸ்வப்னா கிளம்பிப் போய்விட்டாள்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

தியாக புருஷனாக உயர்ந்து நிற்பது போல இருந்தது வெங்கட் ரமணிக்கு. ஆறு வருடம் காதலால் கசிந்துருகி, ஈருடல் ஓருயிராக இருந்திருக்கிறார்கள். காதலன் பொய் சொன்னாலோ, நடித்தாலோ காதலிக்குக் கண்டுபிடிக்கத் தெரியாதா? ஸ்வப்னாவுக்குத் தெரியவில்லையா அல்லது அந்த இடத்தில் மூளை செயல்படாமல் இருப்பதே நல்லது என்ற முடிவுக்கு வந்தாளா?

தற்கொலை முயற்சி மற்றும் அப்பாவின் மருத்துவமனை அட்மிஷன் போன்ற மன உளைச்சல்களுக்கு இடையில் வெங்கட் ரமணி சொல்வதைநம்புவதே நல்லது என்ற முடிவுக்குக் கூட வந்திருக்கக்கூடும். எப்படியோ ஆறு வருடக் காதல் ஐந்து நிமிடத்தில் முடிவுக்கு வந்தது. படத்தில் இதெல்லாம் வராது. படம் ஷூட்டிங் முடிந்து, மென்சோக படமாகப் பிய்த்துக்கொண்டு ஓடியது. படத்தின் ஹீரோயினையே ரமணீயன் காதலித்துத் திருமணம் செய்து கொண்டார். தன் காதல் கதையைஹானஸ்டாக இந்த ஸ்வப்னாவிடம் சொல்லி விட்டார். இந்த ஸ்வப்னாவுக்கும் அல்ரெடி இதே போல ஒரு மொக்கையனிடம் இருந்து பிரேக் அப் கிடைத்திருந்ததால், அவளால் இதை, ஆண்களைப் புரிந்து கொள்ள முடிந்தது.

முதலிரவின்போது இந்த ஸ்வப்னா, ரமணீயனிடம் கேட்டாள். ‘டியர் எனக்கு ஒரு ஆசை.’ ‘என்னடா குட்டிமா?’ ‘உங்க கதையைப் படமா எடுத்தீங்களே, அதே போல அந்த ஸ்வப்னா கதையைப் படமா எடுக்கலாமா’ என்றாள்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 11. பிரேக் அப்

## மேல் நடவடிக்கை

சுமதி, ஹாஸ்டலுக்கு வழக்கமாக இரவு ஒன்பது மணிக்கு வரச்சொல்லுவாள். சண்முகமும் நேரம் தவறாமல் ஒன்பது மணிக்குச் செல்வான். பைக்கில் பின்னால் ஏறி அமர்ந்து கொள்வாள். சீக்கிரம் போ போ என அவசரப்படுத்துவாள். பைக் குறிக்கோள் இல்லாமல் எங்கோ செல்லும். 45 நிமிடத்திற்குள் ரவுண்ட் அடித்துவிட்டு, மீண்டும் ஹாஸ்டலில் கொண்டு வந்து விட்டுவிட வேண்டும்.

அந்த 45 நிமிடமும் சுமதி, சண்முகம் முதுகில் தன் மார்பை பதமாகப் பதித்து உற்சாகமூட்டுவாள். கன்னத்தோடு கன்னம் உரசுவாள். காதில் கிசுகிசுப்பாக லவ் யூ சொல்வாள். தன் இரு கைகளையும் சண்முகத்தின் மடியில் பிணைத்து இறுக்கிக்கொள்வாள்.

இப்படியே கிட்டத்தட்ட 2 மாதமாக பைக் ஓட்டிக்கொண்டு இருக்கிறான் சண்முகம். விடுமுறை நாட்களில் ஊருக்குப் போகிறேன் எனக் கூறிப் போய் விடுவாள். சண்முகமும் எவ்வளவோ போராடி, தன் அறைக்கு, வெளியூர் சுற்றுலா என அழைத்திருக்கிறான். கெஞ்சி கொஞ்சி மறுத்து விடுவாள். சண்முகத்துக்கு அலுப்பாக இருந்தது.

வெறும் முத்தம், கட்டிப்பிடித்தல்களுடன் எவ்வளவு நாட்கள்தான் அடக்கிக்கொண்டு இருப்பது? இன்று அதிசயமாக இரவு பத்து மணிக்கு வரச்சொன்னாள். சண்முகமும் குழப்பத்தோடு சென்றான். ஊருக்குப் போகிறாளாம். பேருந்து ஏற்ற வேண்டி 10 மணிக்கு வரச் சொல்லி இருக்கிறாள். இருவரும் உணவு விடுதி சென்று உணவருந்தி, வேண்டுமென்றே சண்முகம் அங்கிங்கே ஒத்தடம் வாங்கிக்கொண்டே சுற்றி சுற்றிப் பேருந்து நிலையம் வருவதற்குள் கடைசிப் பேருந்து சென்று விட்டது. வேறு வழியில்லாமல் சண்முகத்தின் அறைக்கு வருவதற்கு ஒப்புக்கொண்டாள் சுமதி. சண்முகத்திற்கு உள்ளம் கொண்டாட்டம் போட்டது.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

இன்றைக்கு மேட்டர் முடித்துவிடலாம். எத்தனை நாட்கள் வெறும் மேல் நடவடிக்கையிலேயே ஓட்டிக்கொண்டு இருக்கிறாள்? அறைக்கு வந்து இருவரும் ஒரே கட்டிலில் படுத்தனர்.

சண்முகம் மெதுவாக சுமதி மீது கையைப் போட்டான். சுமதி கையை எடுத்துக் கீழே போட்டாள். லேசாக அணைத்தான். தள்ளி விட்டாள். உதட்டில் முத்தமிட முயன்றான். உதட்டை மூடிக்கொண்டாள். கடுப்பாகி, அவள் மேலே படுத்து அவள் இரு கைகளையும் பற்றி, மார்பில் மாறி மாறி முத்தமிட்டான். சுமதி லேசாக விசும்புவது கேட்டது.

பதறிப் பக்கவாட்டில் சரிந்தான். ‘ஏய்... ஏன் அழுவுற?’ ‘இல்ல, இதல்லாம் வேணாம். ப்ளீஸ்!’ ‘ஏண்டி? எவ்ளோ நாள்டீ வெறும் முத்தத்திலேயும், கட்டிப்பிடிக்கிறதிலேயும் ஓட்டறது? எனக்கு ஒரு மாதிரி இருக்குடீ. ஓப்பனா சொல்றேனே... டெய்லி எரக்ட் ஆகி ஆகிப் பைத்தியம் புடிக்கிற மாதிரி இருக்குடீ. ப்ளீஸ் டீ... என்னைத் தடுக்காதே’ என்றபடி, மீண்டும் அவள் மேல் ஏறிப் படுத்தான். ‘ப்ளீஸ்டா, புரிஞ்சிக்கோடா’ என்றபடி அவனைத் தள்ளி விட்டாள். ‘நீ என்ன லூஸாடீ? என்னடீ பிரச்சனை?’ ‘இல்லடா, சுரேஷ் என் மேல பயங்கர நம்பிக்கை வச்சிருக்கான். அவன் இதுவரைக்கும் என்னை கிஸ் மட்டும்தான் பண்ணியிருக்கான். கல்யாணத்துக்கு அப்புறம்தான் மத்ததெல்லாம்னு சொல்லிட்டேன். அவன நினைச்சா பாவமா இருக்குடா. அவனே அனுபவிக்காம எப்பிடி உன்னை அலோ பண்றது? அதான்டா. சாரிடா!’ ‘என்னால இந்த டார்ச்சரை அனுபவிக்க முடியாது. கெளம்பு. போய் பஸ்டாண்ட்ல ஒக்காந்து இருக்கலாம். மொதல் பஸ்ஸைப் பிடிச்சி ஊருபோய்ச் சேரு’ என அவளைக் கிளப்பி, நள்ளிரவில் பேருந்து நிலையம் வந்தடைந்தான்.

விடிய விடிய தூங்காமல் அமர்ந்திருந்து, முதல் பேருந்தில் ஏற்றிவிட்டு, பை பை சொன்னான், மொத்தமாக!

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 12. பிரேக் அப்
## மருண், சாந்தவி மற்றும் ஐயா

12வது கணக்குப் பாடம் மட்டும் பிடி கொடுக்கவில்லை புத்திசாலி கொக்கான மருண் மரீனுக்கு. மருண் 10வது கணக்கில் 100 மார்க் வாங்கியிருந்தான். 11 ம் வகுப்பில் முதல் 4 மாதங்கள் ஆசிரியர் யாரும் வராததாலும் 11ம் வகுப்புத் தேர்வே கண் துடைப்பு என்பதாலும் 11ம் வகுப்புக் கணக்குப் புத்தகத்தைத் தடவி மட்டும் கொடுத்துக்கொண்டே வந்தான். 11ம் வகுப்பு வந்தவுடன் திடீரென வேலையைத்தொடங்கும் ஹார்மோன்களுக்கு எப்படி ஈடு கொடுப்பது எனத் தெரியாமல், பலான புத்தகங்களையும், செக்ஸ் உணர்ச்சிகளை மழுங்கடித்து அருவருப்பின் உச்சத்துக்குக் கூட்டிச்செல்லும் மலையாள பிட் படங்களையும் பார்க்கத் தொடங்கினான். படத்தில் அவ்வப்போது காட்டப்படும்பெருந்தொப்பைகளையும், அழுகிய சுரைக்காய் போன்ற முலைகளையும் பார்த்து, அடி வயிற்றில் திகில் கால்பந்து சுழலும் மருணுக்கு.

புண்கள் விட்டுப்போன தழும்புகளோடும், கருப்பு நிற மருக்களோடும் இருக்கும் சதைக்கோளத் தொடைகளை, திலகன் போன்ற ஆட்களும், நெடுமுடி வேணு கணக்கான வயோதிகர்களும் கட்டிக்கொண்டு படாத பாடு பட்டுக்கொண்டு இருப்பதைப் பார்த்து மருணின் ஆண் குறி பயத்தில் உள் வாங்கிக்கொள்ளும்.

நன்கு பழகிக்கொண்டு (!) இருந்த பக்கத்து வீட்டு, எதிர் வீட்டு அக்கா, அத்தை, மாமி, அண்ணி எல்லாரையும் வேறு மாதிரி பார்க்க ஆரம்பித்தான். அவர்களிடம் தவறாக நடக்க அதிகம் வாய்ப்பிருந்தது. அவனை மீறி அவர்களின் வயிறு, மார்பகங்களை தொட்டுக் கசக்கிவிட வேண்டும் என்ற வெறி ஏற்பட்டு கை நீண்டு

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

விடும் போதெல்லாம் அவன் 10வதில் கணக்கில் வாங்கிய 100 மதிப்பெண்கள் தடுத்து வந்தது.

பையன் 100 மதிப்பெண்கள் வாங்கிய தெனாவட்டில் இருந்த மருணின் தந்தையார் மகனைக் கவனிக்காமலேயே இருந்துவிட்டு, கணக்குப்புத்தக அட்டை மட்டும் தடவப்பட்டுக்கொண்டிருப்பதை ஒருநாள் யதேச்சையாகப் பார்த்து அன்புடன் வினவினார். ‘என்னடா கண்ணா படிப்பெல்லாம் எப்படி போய்ட்டு இருக்கு?’

‘எதோ போய்ட்டு இருக்குப்பா’ என்று தடதடக்கும் குரலில் சொன்னான். பொங்கும் செக்ஸ் உணர்வுக் குழப்பத்தோடு எதிர்காலத் திகிலும் அதில் கலந்திருந்தது.

‘கணக்கெல்லாம் நல்லா வருதாடா கண்ணா?’

‘இல்லப்பா, சார் யாரும் க்ளாஸுக்கு வர்றதில்ல. நானே பாத்தாலும் புரியலைப்பா. எல்லாம் வித்தியாசமா இருக்குப்பா.’

‘ஏண்டா கண்ணா இதை முன்னமே சொல்லலை? சரி, பயப்படாதே. நான் எதாச்சும் ஏற்பாடு பண்றேன்’ என்றபடி மருணின் தலையைத் தடவுவது போலத் தட்டிவிட்டுச் சென்றார். தன்னுடைய நண்பனின் சொந்தக்காரரின் நண்பனுடைய மகள் எம்எஸ்சி கணிதம் படித்து முடித்துவிட்டு, பீ எட்டும் படித்துவிட்டு, அரசாங்க வேலைக்கு... ஸாரி, சம்பளத்துக்குக் காத்திருக்கும் இடைவெளியில் + 2 மாணவ மாணவிகளுக்குக் காலையும் மாலையும் கணித டியூஷன் எடுப்பதை அறிந்தார். அவள் + 2 கணிதத்தில் 65 சதவீதம்தான் மதிப்பெண்எடுத்து இருந்ததை யாரும் அறியவில்லை.

பக்கத்தில் பொறியியல் கல்லூரி இல்லாததாலும், இயற்பியல் மற்றும் வேதியியல் பற்றி எந்த முடிவுக்கும் அவளால் வர முடியாததாலும் பிஎஸ்சி கணிதம் தேர்ந்தெடுத்து அதிலும் முக்கி முக்கி முதல் வகுப்பில் பாஸ் செய்து இருந்தாள். 60 சதவீதம்தானே முதல் வகுப்பு மதிப்பெண்? தமிழ்நாட்டில் 100 சதவீதத்திற்கு மட்டும்தானே இப்போது மதிப்பு? 99 சதவீதத்தைக் கூட இப்போதெல்லாம் யாராலும் பாராட்ட முடிவதில்லை.

இப்படிப்பட்ட வரலாற்றிற்குச் சொந்தக்காரியாக இருந்தாலும் ஆடி ஓடி கணக்கு வகுப்பு எடுத்துக்கொண்டு இருந்தாள். கரும்பலகையின் இடதுபுறம் ஆரம்பிக்கும் ஈக்குவேஷனை முழு உடலும் குலுங்க குலுங்கக் கரும்பலகையின் வலதுபுறம் முடிப்பதற்குள் வியர்த்து

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

ஊற்றி விடும் அவளுக்கு. அவளுக்குப் பெயர் வைக்க வேறு மறந்தாகி விட்டது. அய்யோ, இது உண்மைக்கதையல்லவா? அவளுக்கு ஏற்கெனவே பெயர் உள்ளது. சாந்தவி. என்னதான் பிளான் போட்டு எழுதினாலும் ஈக்குவேஷனை வலதுபுறப் கரும்பலகையில் சரியாக முடிக்க முடியாமல், மடக்கி அந்த வரிக்குக் கீழே சின்ன எழுத்தில் எழுதும் பழக்கம் உடையவளாக இருந்தாள்.

சிறுவன் சிறுநீரைக் கடைசியில் முடிக்கும் தருவாயில் உருவாகும் ஆர்க் போல இருந்த ஈக்குவேஷன், ஒரு வழியாக சிறுவனின் சிறுநீர் ஆரம்பிக்கும் தருவாயின் ஆர்க் போல ஆகி வந்தது.

இந்த டீட்டெயிலெல்லாம் எதற்கு என நீங்கள் எரிச்சலாகலாம். இதைப்போல நுட்பமான தகவல்களையெல்லாம் கொடுத்தால்தான் இப்போதெல்லாம் இதை ஒரு முற்போக்கான இலக்கியச் சிறுகதை என்று ஒத்துக்கொள்கிறார்கள். மேலும், மேற்குலகில் மொழிபெயர்க்கும்போது நேட்டிவிட்டி இருக்கிறது எனச் சிலாகிப்பார்கள். அதெல்லாம் முக்கியமில்லை, மேட்டருக்கு வாஎனக் கதறுவது புரிகிறது. இதான் மேட்டர். சாந்தவியிடம் மருணை ஒப்படைத்தார் தந்தையார். தந்தையார் இதோடு இந்தக் கதையில் இருந்து ஜகா வாங்கிக்கொள்ளப்போவதால் அவருக்குப் பெயர் வேண்டாம். மருண் மாலை வேளையைத் தேர்ந்தெடுத்திருந்தான். ஏற்கெனவே சில பாடங்கள் ஓடிவிட்டிருந்தபடியால், மருணை மட்டும் ஒரு மணி நேரம் தினமும் சீக்கிரம் வரச் சொன்னாள் சாந்தவி.

சாந்தவி தாவணி அணியும் வழக்கத்தை இன்னும் விட்டபாடில்லை. மருணுக்குத் தனியாக டியூஷன் எடுக்கையில் தாவணியும், மொத்தமாக எல்லோருக்கும் பாடம் எடுக்கையில் புடவையும் அணிந்து கொள்வாள். மருணுக்குத் தனியாக டியூஷன் எடுக்கையில் எந்த டென்ஷனும் இல்லாமல் இயல்பாக அமர்ந்துகொண்டு மும்முரமாகச் சொல்லிக்கொடுப்பாள். மருண் இயல்பிலேயே படிப்பில் கெட்டி என்பதால் சுலபமாக விரைவாக அனைத்தையும் விளங்கிக்கொண்டு கலக்கினான்.

கலக்க கலக்க மருணின்பால் பாசம் வந்தது சாந்தவிக்கு. சாந்தவி தனக்கு மட்டும் தனியாகச் சொல்லிக்கொடுப்பதால் மருணுக்கும் சாந்தவிபால் ஒரு பிடிப்பு வந்தது. ஒருவருக்கொருவர் பெரிதாக வெளிக்காட்டிக்கொள்ளாமல் அன்பு செலுத்த ஆரம்பித்தனர். மருணின் தலையில் சாந்தவி ஸ்பெஷலாகக் கொட்டுவது, மிஸ்ஸைப்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

பற்றி யாரேனும் கமெண்ட் அடித்தால் மருண் முறைப்பது என்ற அளவில் இருந்தது அந்த அன்பு. ‘நாளைக்கு டியூஷன் லீவ். நீ வர வேண்டாம்’ என மருணிடம் சாந்தவி கூறியதும், ‘ஏன் மிஸ்’ என்றான் மருண். ‘என்னைப் பொண்ணு பாக்க வராங்கடா.’ ‘ஓகே மிஸ்’ என்றபடி விருட்டெனக் கிளம்பி ஓடினான் மருண்.

அடுத்த நான்கு நாட்கள் தொடர்ச்சியாக மருண் டியூஷனுக்குச் செல்லவில்லை. செல்வக்கொழுந்து மூலம் மருணுக்குத் தாக்கீது வந்தது. செல்வக்கொழுந்து யாரென்று குழம்புகிறீர்களா? செல்வக்கொழுந்துதான் மருணின் தந்தையார். இனிமேல் கதையில் என்ட்ரி கொடுக்க மாட்டார் என்பதால் பெயர் வைக்காமல் விட்டு விட்டோம் இல்லையா? அந்தக் கடுப்பில் திரும்ப என்ட்ரி கொடுத்து பெயர் வாங்கிக்கொண்டு செல்கிறார்.

‘ஏண்டா நாலு நாளா டியூஷனுக்கு போகலையாம்?’

‘ஒண்ணும் புரியலைப்பா.’

‘டேய், கொஞ்ச நாள்தானே போயிருக்க? உனக்கு தனியா டியூஷன் எடுத்திருக்காடா! உன் மேல அவ்ளோ ஆசையா பேசினா. டக் டக்குன்னு புடிச்சிக்கிறியாம். உன்னைக் கொண்டு வந்துவிடச் சொன்னா. வா என் கூட’ என சைக்கிளில் வைத்து அழைத்துக்கொண்டுபோய் செல்வக்கொழுந்தே சாந்தவியிடம் விட்டு விட்டார்.

‘இவனை கொண்டாந்து ஒப்படைச்சிட்டேம்மா. கரை சேக்க வேண்டியது உன்பொறுப்பு’ என்று சொல்லிய, தானாகவே திருப்தியாகச் சிரித்தபடி வெளியேறினார் செல்வக்கொழுந்து. ‘ஏண்டா நாலு நாளா வரலை’ என்று கன்னத்தைக் கிள்ளினாள் சாந்தவி. ‘தலைவலி மிஸ்’ என்றான் மருண் எங்கோ பார்த்தபடி. ‘சொல்லுடா, ஏன்டா ஒரு மாதிரியா இருக்க?’ ‘ஒண்ணுமில்லை.’ ‘சொல்லுடா’ என மருணின் தலையைத் திருப்பினாள் சாந்தவி. மருணின் கண்கள் கலங்கி இருந்தன. ‘அய்யோ, என்னடா கண்ணு, ஏண்டா கண்ணு கலங்கி இருக்கு? என்கிட்ட சொல்லுடா மருண் குட்டி.’ ‘நீங்கதான் கல்யாணம் பண்ணிட்டுப் போகப்போறீங்களே! போங்க’ என்றான் மருண். எதிர்பார்த்ததைப்போல, திடுக்கிடவில்லை சாந்தவி. சந்தோஷமாக உணர்ந்தாள். ‘நான் போனா என்ன? மருண் குட்டிக்கு என்ன பிரச்சனை?’ ‘ஒண்ணுமில்லை, போங்க’ என்றபடி

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

முகத்தைத் திருப்பிக்கொண்டான். ‘என்னை உனக்கு ரொம்பப் பிடிக்குமாடா மருண்?’ ‘ம்ம்... ஆமாம்.’ ‘யாருகிட்டயாவது சொல்லியிருக்கியா?’ ‘ம்.’ ‘யாருகிட்ட?’ ‘எங்க அம்மா கிட்ட.’ ‘என்னன்னு சொன்ன?’ ‘சாந்தவி மிஸ்ஸை எனக்கு ரொம்ப பிடிக்கும். அவங்க செம அழகுன்னு.’ ‘நான் கல்யாணம் பண்ணிட்டு போனா, உனக்கு கஷ்டமா இருக்குமா?’ ‘ம். ம்.’ சாந்தவியின் கண்ணைப் பார்த்துச் சொன்னான். உதடுகள் துடித்துக்கொண்டு இருந்தன. ‘சரி, நான் கல்யாணம் பண்ணிகிட்டுப் போகலை, ஓகேவா? எங்க, என்னைப் பாத்துச் சிரி’என்றபடி மருண் முகத்தைத் திருப்புவது போல மருணைத் தன்னருகே லேசாக இழுத்தாள் சாந்தவி. மருண் கண் கலங்கியபடியே சிரித்தபடி சாந்தவியின் அருகில் வர, இழுத்து அணைத்துக்கொண்டாள்.

உண்மையில் இழுக்கத் தேவை இருக்கவில்லை. மருணுக்கு முதல் பெண்ணின் ஸ்பரிஸம். மனது திடுக்திடுக் என அடித்துக்கொள்ள, அதே சமயம் நிம்மதியாகவும் இருந்தது. அவள் மார்பில் முகத்தை நன்கு புதைத்துக்கொண்டு கண்ணை மூடிக்கொண்டான். மருணுக்குத் தன் வயதொத்த பெண்களைப் பார்க்க எரிச்சலாக இருந்தது. சப்பையாக தெரிந்தனர்.

சாந்தவி புடவை மட்டுமின்றி அனைத்து உடைகளும் அணியக்கூடியவள். சுஸுகி ஆக்ஸஸ் வைத்திருந்தாள். ஸ்கூட்டரில் செல்கையில் இளவட்டங்கள் அடிக்கும் கமென்ட்ஸ்களுக்கு மகிழ்ச்சி அடையும் சாந்தவிக்கு இப்போது கடுப்பாக வந்தது. அனைத்து வாலிப வயோதிக அன்பர்களும் முட்டாப்பசங்களாகத் தெரிந்தனர். முழுக்க ஷேவ் அடித்து ஜீன்ஸில் சட்டையை இன் செய்து அட்டென்ஷனில் விரைப்பாக நிற்கும் வாலிப மரத்தைப் பார்த்து அருவருப்பாக வந்தது. இவளுக்காக ஃபேர் அண்ட் லவ்லி மேல் பவுடர் பூசி, அதற்கு மேல் கேப்ஸ்யூல் சைசில் விபூதியும், அதன் நடுவில் டேப்லட் சைஸில்பொட்டும் வைத்துக்கொண்டு நிற்கும் அந்தப் புளிய மரத்தின் நெற்றியிலேயே புளிச் எனத் துப்ப வேண்டும் போல வந்தது.

ஒரு மணி நேரம் டியூஷனுக்கு முன்னதாகச் செல்ல வேண்டிய மருண் இரண்டு மணி நேரம் முன்னதாகச் செல்ல ஆரம்பித்தான். பக்கத்தில் அமர்ந்து கொள்வது, தலையைக் கோதி விடுவது, மடியில் சாய்ந்து கொள்வது, கன்னத்தைக் கிள்ளுவது போன்ற தூய அன்பொழுகும்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

செயலில் மட்டுமே இருவரும் ஈடுபட்டு வந்தனர். சமுதாயம் கூறும் பொருந்தும் காதலில் இருவரும் ஈடுபடவில்லையென்பதாலும், இது காதல் என இருவர் மனமும் குற்றவுணர்ச்சியால் ஒத்துக்கொள்ளவில்லை என்பதாலும் முத்தம் கூடக் கொடுத்துக்கொள்ள முடியாத அளவுக்கு ஸ்டார்ட்டிங் டிரபுள் இருந்தது.

சின்னச்சின்ன அன்பு நடவடிக்கைகள் வளர்ந்து வந்தாலும், டியூஷன் எடுக்கும் நேரத்தில் தெளிவாக டியூஷன் எடுத்தாள் சாந்தவி. அப்போது கண்டிப்பான டீச்சராக மாறி விடுவது அவளுக்கு இயல்பாகவே வந்தது. 30 பேர் அமர்ந்திருக்கும் டியூஷன் சென்டரில் அவள் ஆளுமையாக வகுப்பெடுப்பதைக் கண்டு மருணுக்கும் பூரிப்பாக இருந்தது. ‘இந்த டீச்சர்தான் என்னைத் தனியாக இருக்கும்போது மடியில் படுக்க வச்சிப்பாங்க. நான் டீச்சருக்கு ரொம்ப ஸ்பெஷல்’ எனப் புளகாங்கிதமாக இருக்கும்.

சாந்தவி ஒரு மைனர் ஆப்பரேஷனுக்காக மருத்துவமனையில் சேர்ந்தாள். பெற்றோர், அண்ணன், அக்கா என அனைவரும் சாந்தவியைக் கவனித்துக்கொண்டாலும் யாரும் தன்னைக் கவனித்துக்கொண்டு பாசமாக இல்லை என்பது போலப் பட்டது சாந்தவிக்கு. மருண் மாலை வேளைகளில் மருத்துவமனைக்கு வந்து சாந்தவியின் தலைமாட்டில் உட்கார்ந்து கொள்வான். அவ்வப்போது தலையை சொறிந்து விடுவது போலக் கோதி விடுவான். இதுவே ஆகச் சிறந்த பாசம் மற்றும் கவனிப்பாகப் பட்டது சாந்தவிக்கு.

எவ்வளவு நேரம்தான் தலையை கோதி விடுவது என்று போரடித்த உணர்வால் கழுத்தை வருடிக்கொடுக்கத் தொடங்கினான் மருண். கழுத்துக்கீழே புதையுண்டு கிடந்த உணர்வுகள் மேலெழுந்தன சாந்தவிக்கு. மருணின் கையை கழுத்துக்குக் கீழே சற்று நகர்த்தி அமுக்கி வைத்துக்கொண்டாள் சாந்தவி. சிறிது நேரத்தில் மருண் கையை லேசாக இழுக்கவும், அவன் கையை விடாமல், தன்னுடைய கையால் அவன் கழுத்தை தன்னருகே வளைத்து அழுந்த முத்தமிட்டாள் சாந்தவி. ஒரு நர்ஸ் தூரத்தில் இவர்களுக்கு முதுகும் முதுகு சார்ந்த பகுதிகளையும் காட்டியபடி வேலையாயிருந்தாள். மருத்துவமனையில் கொடுத்த முத்தத்திற்கு எந்த தப்பர்த்தமும் கற்பிக்க முடியாது. இபிகோ படியும், இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் படியும், ஸ்பெஷல் மேரெஜ் ஆக்டின் படியும் எந்தச்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

சிக்கலும் இந்த முத்தத்திற்கு உருவாக்க முடியாது. முத்தம் கன்னத்தில் கொடுக்கப்பட்டது என்பதறிக. மருத்துவமனையில் படுத்திருக்கும் நோயாளி முத்தமிடுவதற்கு அரசும், சட்டமும், அரசு இயந்திரங்களும், ஆன்றோர்களும், சான்றோர்களும், இந்தியாவையே தாங்கிப்பிடித்திருக்கும் மத அமைப்புக்களும், மதப் போர்வைக்குள் சுய இன்பம் அனுபவித்துக்கொண்டிருக்கும் தீவிரவாதக் குழுக்களும், மலடு தட்டிப்போன பண்பாட்டு அமைப்புக்களும், பேசிபேசித் தாங்களே செவிடாகிப்போன முற்போக்கு அமைப்புக்களும், பொறியாளர் ஐயா, வழக்குரைஞர் ஐயா, ஓட்டுநர் ஐயா, மருத்துவர் ஐயா, நடத்துநர் ஐயா, பேராசிரியர் ஐயா, வெறும் ஆசிரியர் ஐயா, கால்நடை மருத்துவர் ஐயா, தையல்கார ஐயா, வெளுக்கும் ஐயா, சமையல்கார ஐயா, பெரிய ஐயா, சின்ன ஐயா, நடு ஐயா, குட்டி ஐயா, அரசர் ஐயா, வேந்தர் ஐயா, தளபதி ஐயா, அந்தப்புரக் காவலர் ஐயா, மாமன்னர் ஐயா, வெறும் ஐயா, ஐயா அவர்கள், கொய்யா ஐயா என யாரும் தடை போட முடியாது. தடை போட்டதாக வரலாறும் சொல்லவில்லை. அனைத்துப் போராட்ட வரலாறுகளையும், எழுச்சி வரலாறுகளையும் சாந்தவி படித்துப் பார்த்து இந்த முடிவுக்கு வந்தாளா எனத் தெரியவில்லை. அவள் இந்த முடிவுக்கு வந்தது புத்திசாலித்தனமான முடிவுதான் என்றாலும்முத்தம் கொடுக்கப்பட்ட இடம் கன்னம் என்ற வரையறைக்கு மட்டுமே பொருந்தும். மேற்சொன்ன அமைப்புக்களும், ஐயாக்களும் உதடு வரை போனால் போகட்டும் எனச் சகிப்புத்தன்மை காட்டுவார்கள். அதற்குக் கீழே எல்லாம் சகிப்புத்தன்மை எதிர்பார்க்க முடியாது. மருத்துவமனையில் படுத்துக்கொண்டிருக்கும் நோயாளி அதற்குக் கீழே முத்தமிட இபிகோவும் இந்திய அரசியல் அமைப்புச் சட்டமுமே இடமளிக்கவில்லை.

உதாரணத்திற்கு சாந்தவி மருணின் மடியில்முத்தமிட்டு இருந்தால், செவிலியர் மூலமாக மடியில் முத்தமிட்டது ஆண்குறியெனமருத்துவர் ஐயாவுக்குச் சென்று, அவர் மூலமாக ஏட்டையாவுக்கு சென்று, சாதா முத்தம் ஓரல் செக்ஸ் என்பதாக கேஸ் பதிவு செய்யப்பட்டு, எஃப் ஐ ஆர் போடப்பட்டு, மத்திய சுகாதார அமைச்சரை எதிரே உட்கார வைத்து அர்னாப் நறுக் சுருக் எனக் குறிபார்த்துக் கேள்விகள் கேட்டு வாங்கு வாங்கென்று வாங்கிக்கொண்டு இருப்பார். அமைச்சரும் குறிப்பறிந்து பதில்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

சொல்லிக்கொண்டு இருப்பார். என் ஜி ஓக்கள், பலதரப்பட்ட அமைப்புகள் டெல்லி ஜந்தர் மந்தரில் ஆர்பாட்டம் நடத்தும். நோயாளி மருத்துவமனையில் ஓரல் செக்ஸில் ஈடுபடுவதைப்பற்றி மனம் திறந்த நாடுதழுவிய விவாதம் வேண்டும் என, ஆத்துல ஒருகால் சேத்துல ஒருகால் நடுவாந்திரக் கட்சி அறிக்கை விடும்.

'மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருக்கும் நோயாளி ஓரல் செக்ஸ் வைத்துக்கொள்வது சுகாதாரக் கேடு மட்டுமன்றி, தேக நலனுக்கும் எதிரானது. இதற்கென்று தனியாக சட்டம் இயற்ற வேண்டிய நேரம் வந்துவிட்டதாக நாங்கள் உணர்கிறோம். இந்தியாவின் நடிவடிக்கையை நாங்கள் உன்னிப்பாகப் பார்த்து வருகிறோம்' என வேர்ல்ட் ஹெல்த் ஆர்கனைசேஷன் பிடிஐக்கு பேட்டி கொடுக்கும். கடைசியில் பெண்களை மருத்துவமனையில் பார்க்க வரும் ஆண்களுக்கு ஸ்டீல் ஜட்டி கட்டாயமாக்கப்பட்டு சட்டம் இயற்றப்படும். பெண் நோயாளிக்கும் பார்க்க வரும் ஆணின் இடுப்புக்கும் 3 அடி இடைவெளி வேண்டும் என சுகாதாரத் துறைச் செயலர் அனைத்து மருத்துவமனைகளுக்கும் சுற்றறிக்கை அனுப்புவார்.

இப்படியெல்லாம் கூத்துக்கள் நடந்தாலும், படுக்கை வசதியில்லாமல் வராண்டாவிலேயே அட்மிட் ஆகி, இரவில் அங்கே கிடைக்கும் மங்கலான வெளிச்சத்தில் மூடாகி, இடைப்பட்ட ஏழெட்டு கொசுக்களை தேகசூட்டுக்கிடையே நசுக்கிய வண்ணம் மேட்டரை முடிக்கும் எமகாதகர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். இதய நோயாளியாக அனுமதிக்கப்பட்டு, மனைவியை நள்ளிரவில் இழுத்துப்போட்டு ஒரு காட்டுக்காட்டி நட்டுக்கொண்டே மேல்லோகம் போன கதை ஒரு மருத்துவமனையில் பரவலாக இன்றும் பேசப்பட்டுக்கொண்டுள்ளது. இதை ஒரு நல்ல சாவு என்பதைவிட உல்லாசச் சாவு என்றே சொல்ல வேண்டும். அந்த உல்லாசியின் போஸ்ட் மார்டம் ரிப்போர்ட் எப்படி இருந்திருக்கும் என்பதை அறிய அவா! கண்டிப்பாக ஆண் மருத்துவர் ஐயாதான் போஸ்ட்மார்ட்டம் பண்ணியிருப்பார். ஒரு பயம்தான்!

இவ்வளவு குழப்படிகளுக்கு வாய்ப்பிருந்தும் மற்ற இடங்களில் முத்தமிடுவதைவிட மருத்துவமனை பாதுகாப்பான இடமாக இருப்பதாலும், அதை மனதாரவும் உணர்ந்ததாலும் சாந்தவி மருணை முத்தமிட்டாள். பின் கொஞ்ச நேரம் கழித்து 'தப்பா நினைச்சிக்காதே'

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

என்று கூறினாள். 'ச்சே ச்சே… இல்ல இல்ல' என்றான் மருண். தான் சொன்னதை நிரூபிக்கும் பொருட்டு தானும் ஒரு முத்தமிட்டான். நோய்த்தன்மை முகத்தில் அப்பியிருக்க அதையும் மீறிய காதலோடு மருணைப் பார்த்துச் சிரித்தாள் சாந்தவி.

டிஸ்சார்ஜ் ஆகி வந்து சில நாட்கள், இந்த முத்தம் தொத்து வியாதி போலத் தொடர்ந்தது. முன்பே சொல்லிக்கொண்டதால் இருவரும் இதைத் தப்பாக நினைக்கவில்லை. உடலுக்கு இதைப்போன்ற தூய உறவுகளெல்லாம் தெரியவா போகிறது? இந்த உடலும் கலாசார அமைப்புக்களைப் போன்றதுதான். இந்த உடலுக்கு எல்லாமே காமம்தான். இருவரும் புனிதமாக முத்தமிட்டுக்கொள்கையில் கொஞ்சம் கூட அறிவே இல்லாமல் இருவருக்கும் வெட் ஆனது. இந்த உடலை இருவரும் வெறுத்தனர். குற்றவுணர்ச்சியில் தத்தளித்தனர். அன்பாக, பாசமாக முத்தமிட்டால் ஏன் இந்த உடல் புரிந்து கொள்ள மறுக்கிறது? ஏன் இந்த ஆண்குறி விரைக்கிறது எனக் கோபம் கொண்டான் மருண். ஏன் தனக்கு அந்தரங்க இடத்தில் நீர் சுரக்கிறது, ஏன் யோனி ஆக்டோபஸ் போல விரிந்து பிளந்து தவிக்கிறது என சாந்தவி விசனப்பட்டாள்.

ஒருநாள் டியூஷன் முடிந்ததும், 'மருண் கொஞ்சம் வெயிட் பண்ணு' என்றாள். அனைவரும் போனதும், 'மருண் இனிமே நாம கிஸ் பண்ணிக்க வேணாம், தப்புன்னு தோணுது. நீயும் நல்லா படிக்கணும். எனக்கு உன்னை ரொம்ப பிடிக்கும், என்னைப் புரிஞ்சிக்கிறியா? ப்ளீஸ்' என்றாள்.

கோபமாக, 'சரி' என்று சொல்லியபடி முகத்தைத் திருப்பிக்கொண்டான் மருண். சீரியஸாக கணக்குப் புத்தகத்தை எடுத்து நோண்டிக்கொண்டு இருந்தான். 'ப்ளீஸ் மருண், புரிஞ்சிக்கோ. கோவப்படாதே' என மருணைண் சமாதானப்படுத்திக்கொண்டே இருந்தாள். அன்று லிப் கிஸ்ஸில் வந்து முடிந்தது அவளது சமாதானம்.

இப்படியாக சாதா முத்தத்தில் இருந்து உதட்டு முத்தத்திற்குத் தாவிப்போனார்கள். மார்பகத்தை முத்தமிடுவது, இடுப்பைக் கிள்ளுவது, கெண்டைக்காலில் முயங்குவது, ஒன்று கலந்து புணர்ந்து திளைப்பது எல்லாம் அடுத்து படிப்படியாக விளக்கப்படும் என நாக்கைத் தொங்கப் போட்டு அமர்ந்து இருந்தால் சாரி! கதையின் ஸ்கோப் அது அல்ல!!

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

இது எல்லாம் இரண்டாண்டு கால இடைவெளியில் நடந்து முடிந்தது. ஒவ்வொரு கட்டமாக முன்னேறுவதற்கு முன்பும், இனிமே இது வேணாம் என்பதாக ஆரம்பித்து, சண்டை வந்து முறுக்கிக்கொண்டு, பின் கட்டி உருண்டு, ஒரு மாயக்கணத்தில் இருவரும் ஒன்று கலந்தார்கள். சாந்தவி மட்டுமே மருணின் உலகம் என்றானது. எந்நேரமும் சாந்தவி சாந்தவி சாந்தவிதான். எல்லாமுமாகிப்போனாள் சாந்தவி. சாந்தவியுடனேயே பெரும்பொழுதைக் கழித்தான். நண்பர்கள் சுற்றம் குறைந்து போனது.

அந்தக் கேள்வியை கேட்டே விட்டாள் சாந்தவி! ‘நாம கல்யாணம் பண்ணிக்கலாமா மருண்?’ மருண்டு போனான் மருண். அவனுக்கு என்ன சொல்வது என்றே தெரியவில்லை. வாழ்வின் எதிர்காலம் பற்றி எந்தத் தீர்மானமும் இல்லாதவனாக இருந்தான். இந்த விஷயத்தை வீட்டில் சொன்னால் அப்பா அடித்தே கொன்று விடுவார் என்று புரிந்தது. ஊர் மக்களின் வாய் மெகாசைஸ் முதலை வாய் போல தோன்றிப் பயமுறுத்தியது. சாந்தவியைத் திருமணம் செய்துகொண்டு அவளுடனேயே இருக்க ஆசைதான். ஆனால், சூழல் ஒத்துவராது எனத் தன் மனதைத் திடப்படுத்திக்கொண்டு, தன் குற்றவுணர்ச்சியைக் குறைக்க முயன்றான். ‘எனக்கும் ஆசைதான். ஆனா எப்படி?’ என்றான். ‘இந்த ஊர்ல பண்ணிக்க முடியாது, எங்காவது ஓடிப்போயிடலாம்’ என்றாள் சாந்தவி. முதல் முறையாக சாந்தவி முட்டாள் போலத் தெரிந்தாள். அவளை ஏறிட்டுப் பார்க்கவே அலுப்பும் பயமுமாக இருந்தது.

மருணுக்கு +2 முடிவு வந்தது. மிஸ் எடுத்த அளவிலேயே மார்க் எடுத்து, மிஸ்ஸின் ஆலோசனையான பிஎஸ்ஸி மேத்ஸ் சேராமல் பட்டிணத்தில் பொறியியல் சேர்ந்தான். சந்திப்பு மாதம் ஒருமுறை, இரண்டு மாதங்களுக்கு ஒருமுறை என்றானது. நடுநடுவே மிஸ்ஸுக்கு மாப்பிள்ளை பார்க்கும் படலமும் நடந்தது. மருண் மனதில் இருப்பதால் சாந்தவி அனைத்துச் சோளக்கொல்லை பொம்மைகளையும் தட்டிக்கழித்த வண்ணம் இருந்தாள். மருணுக்கு கல்லூரியில் இருக்கும் இளஞ்சிட்டுக்கள் மீது லேசாக ஆர்வம் துளிர்த்தது. தவறாக ஒன்றும் இல்லை, சும்மா அவர்கள் கூட ஊர் சுற்றுவது, சினிமா, ரெஸ்டாரண்ட் போவது, இதைப்போல மேட்டர்களில் ஆர்வம் வந்தது. குடிக்க ஆரம்பித்து இருந்தான். நண்பர்களுடனும், தோழிகளுடனும் இருக்கும்போது வரும் சாந்தவியின் போன்கால்கள் எரிச்சலை உண்டாக்கின. ஆனாலும்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

சாந்தவியின் மீதான காதல் குறையவில்லை. சந்திப்பும் தொடர்ந்து கொண்டிருந்தது.

இவனுக்காகப் பட்டிணத்தில் வேலை வாங்கிக்கொண்டு வந்தாள் சாந்தவி. கல்லூரி போக எஞ்சிய நேரங்களில் சாந்தவியின் அறைக்கு வந்து விடுவான் மருண். நன்கு சமைத்தும் போட்டாள் சாந்தவி. இதற்காகவே கல்லூரியில் மதிய உணவைப் புறக்கணித்து, பசியோடு மாலை வேளையில் சாந்தவியின் அறைக்குப் போவதை வழக்கமாக்கிக்கொண்டான். ஃபைனல் இயர் வரை இது தொடர்ந்தது. மீண்டும் திருமணப் பேச்சை எடுத்தாள் சாந்தவி. 'எங்க அக்காவுக்கு இன்னும் கல்யாணம் ஆகலை. தங்கச்சி வேற இருக்கா. அவங்களுக்கெல்லாம் கல்யாணம் பண்ணிட்டுதான் நான் கல்யாணம் பண்ணனும். அதுக்கு ரொம்ப நாள் ஆகும். உன்னால காத்திருக்க முடியாது' என்றான்.

'இல்ல நான் காத்திருப்பேன்.'

'இல்லடீ, முடியாது. ப்ராக்டிக்கலா கஷ்டம்.'

'ஏன்? நான் கிழவி ஆயிடுவேன்னு சொல்றியா?'

'சீ சீ... சத்தியமா இல்லை. இப்பவும் நீ 21 வயசுப் பொண்ணு போலத்தான் இருக்க.'

'பொய்யி... நான் அலுத்து போய்ட்டன் இல்ல உனக்கு?'

'அய்யோ நிஜமா இல்லை. ஏன்டீ இப்பிடி ப்ராக்டிக்கலா புரிஞ்சிக்காம டார்ச்சர் பண்ற?'

'என்ன ப்ராக்டிக்கலா பிராப்ளம்? உன் அக்கா கல்யாணம் முடியட்டும், உன் தங்கச்சி கல்யாணமும் முடியட்டும். அதுக்கு அப்புறம் நீ வேலை வாங்கு. நாம வேற எந்த ஊர்லயாவது போய் கல்யாணம் பண்ணிட்டு வாழலாம்.'

'உங்க வீட்ல உன்னைக் கேக்க மாட்டாங்களா சாந்து? தேட மாட்டாங்களா? ஏன் சாந்து இப்பிடி தியரட்டிக்கலா பேசிட்டு இருக்க?'

'ஆமாண்டா, நான் முட்டாள்தான். உனக்கு என்னை இப்ப பிடிக்கலை. அதைச் சொல்லாம ஏதேதோ வளத்தி வளத்தி பேசிட்டு இருக்க, சரி சாப்டுட்டு படு. காலைல நான் சீக்கிரம் வேலைக்கு போகணும்' என்றாள். அப்பாடா எனப் படுத்து விட்டான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

சாந்தவி தற்போது நன்கு சம்பாதித்துக்கொண்டு இருந்தாள். எக்கச்சக்கமாக மருணுக்கு கைச்செலவுக்குக் கொடுத்தபடி இருந்தாள். பெரும்பகுதி சம்பளமும் மருணுக்கே செல்வானது. அவனுக்கு உடைகள், செல்ஃபோன், லேப்டாப், பைக் என அள்ளி விட்டாள். மருண் வேலை கிடைத்து பெங்களூர் சென்றான். மாற்றல் வாங்கிக்கொண்டு அங்கே வந்து வீடு எடுத்து மருணுடன் தங்கினாள். நண்பனுடன் தண்ணி அடிக்கும்போது, மருண் பயந்து போய் பேசினான்.

‘மச்சி, இவளை நினைச்சா பயமா இருக்குடா. எங்க போனாலும் என்னைவிடமாட்டேங்குறா. வந்துடறா.’

‘ உனக்கு என்னடா பிரச்சனை? அவளை உனக்கு பிடிச்சிருக்கா? லவ் பண்றியா?’

‘ம்...பிடிக்கும். லவ் பண்றேன். நான்னா அவளுக்கு உசுரு.’

‘அப்புறம் என்னடா? கல்யாணம் பண்ணிக்க வேண்டியதுதானே?’

‘என்னன்னு தெரியலைடா கல்யாணம் பண்ணிக்க மட்டும் பிடிக்கலை. பயமா இருக்கு. ப்ராக்டிக்கலா சரி வராது மாப்ள. ரெண்டு பேர் வீட்லயும் ஒத்துக்க மாட்டாங்க.’

‘என்னவோ போடா. இவ்ளோ நாள் புருஷன் பொண்டாட்டி போலப் பழகிட்டு, கழட்டி உடுறது கஷ்டம் மச்சி’ என்றான். ‘உனக்கு அவ செமையா செலவு வேற பண்ணியிருக்கா, அவ்ளோ ஈசியா உன்னை விடமாட்டா’ என்று பயத்தை கிளாஸில் கலந்து கொண்டே பேசினான்.

சாந்தவியின் அம்மா மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார். நிலைமை ரொம்ப மோசமாக இருந்தது. சாந்தவியின் கைகளைப் பிடித்துக்கொண்டு, ‘உனக்கு கல்யாணம் பண்ணி வச்சிட்டா நிம்மதியா செத்துப்போயிடுவேன்’ என மன்றாடினார். சாந்திவிக்கு அம்மா மேல உள்ள பாசம் நீண்ட நாட்களுக்குப் பிறகு மடை உடைந்த வெள்ளமெனப் பொங்கிப் பிரவாகித்து அடித்துக்கொண்டு போனது. ‘அய்யோ அம்மா, நான் கண்டிப்பா கல்யாணம் பண்ணிக்கிறேன், நீயும் உயிரோட இருப்ப. உனக்கு ஒண்ணும் ஆகாது’ எனக் குழறி அழுதாள். அம்மாவுக்கு இந்த வார்த்தையே பலம் கொடுத்தது போலத் தெம்பாக காணப்பட்டார். ஏற்கெனவே வெயிட்டிங் லிஸ்டில் இருந்த மாப்பிள்ளைகளை ஷார்ட் லிஸ்ட்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

பண்ணும் பணி ஆரம்பித்தது. அம்மா உடல்நிலையில் நல்ல முன்னேற்றம்.

மீண்டும் பெங்களூர் வந்தாள். 'அம்மாவுக்காகக் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்' என்றாள். மகிழ்ச்சி பலூன் மருண் வயிற்றில் வெடித்தது. ஒருகணம்தான். உடனே சோகமும் தழுவத் தொடங்கியது. 'அம்மாவுக்காக என்றாலும், நல்ல மாப்பிள்ளையா பாத்து, உனக்கு பிடிச்சிருக்கான்னு பாத்து பண்ணிக்கோ. சும்மா யாரையாவது பண்ணிக்காதே, லைஃப்' என்றான் மருண். 'அப்போ, இது என்ன' என்றாள் வறட்டுச் சிரிப்புடன் சாந்தவி. அடிபட்டது வலிக்காதது போலக் காட்டிக்கொண்டான் மருண்.

தன்னுடைய இன்பாக்ஸில் இருக்கும் மாப்பிள்ளை போட்டோக்களை மருணிடம் காட்டினாள். சிலர் நல்ல பர்ஸ்னாலிட்டியுடன் இருந்தார்கள். என்ன சொல்வது எனத் தெரியாமல் கீலா போல போட்டோக்களை மேய்ந்து கொண்டிருந்தான். 'கஷ்டமா இருக்காடா?' கண் கலங்கி விட்டது மருணுக்கு. 'ஆமா சாந்து, ஆனா என்ன பண்றதுன்னு தெரியலை. நான் ஒரு கையாலாகாதவன் சாந்து' என்றபடி சாந்தவியைச் சந்தித்ததில் இருந்து, முதல்முறையாகத் தானே கண்களைத் துடைத்துக்கொண்டான்.

'கஷ்டப்படாதடா, எல்லாம் சரியாயிடும்' என்றபடி மருணை அணைத்துக்கொண்டாள். மருண் நிமிர்ந்து சாந்தவியின் முகத்தைப் பார்த்தான். 'பயப்படாதே, உன்னைத் திரும்பவும் கல்யாணம் பண்ணிக்கச் சொல்ல மாட்டேன். உன் கூட வாழ்ந்த வாழ்க்கை எப்பவும் மனசுல இருக்கும். சூப்பரான கலர்ஃபுல்லான வாழ்க்கை. திகட்ட திகட்ட அன்பையும் பாசத்தையும், காதலையும், செக்ஸையும் மருண்னு ஒரு சாமிகுட்டி எனக்கு குடுத்துட்டான். அது போதும் எனக்கு. ஒவ்வொரு லைஃபுக்கும் ஒரு லிமிட்டேஷன் இருக்கு போல. ஆனா, நான் மேக்ஸிமம் லைல்ஃப் மருண் கூட வாழ்ந்துட்டேன். இனிமேலும் சும்மா ஃபிஸிக்கலா அவனை என் கூட காலம் வரைக்கும் இழுத்து வச்சிகிட்டு என்னா செய்யப்போறேன். மருணுக்குள்ள ஏதோ ஒரு நெருடல் எப்பவோ வந்தாச்சி. நாந்தான் அதை புரிஞ்சிக்காம இவ்ளோ நாள் இழுத்துட்டு வந்திருக்கேன். சாரிடா மருண், உன்னை ரொம்ப கஷ்டப்படுத்திட்டேன். இனிமே உனக்கு பிரச்சனையே இல்லை. ஜாலியா சுத்திட்டு, குட்டிப்பாவாடை போட்ட சின்னஞ்சிறு சிறுக்கி எவளையாச்சும் கட்டிகிட்டு ஜாலியா

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

இரு’ என்றாள். உண்மையிலேயே உடைந்து போனான் மருண். ‘சாந்து குட்டி, சாரிமா. சாரிடா உன்னை நானே கல்யாணம் பண்ணிக்கறேன்’ என்றான். சொல்லும்போது மருணே பலகீனமாக உணர்ந்தான். யாரிடம் எதற்கு எதை நிரூபிக்கப் போராடிக்கொண்டிருக்கிறோம் எனக் குழப்பமாக இருந்தது மருணுக்கு. மிதமான ஒரு அறை விட்டாள். செல்லமான வலிக்காத அறையும் இல்லை, கடுமையாக வலிக்கும் அறையும் இல்லை. ‘ஆசையைப் பாரு ஐயாவுக்கு. அடுத்தவனுக்கு நிச்சயம் ஆன பொண்ணைக் கட்டிக்கப் போறானாம்’ என்றாள். ‘நிச்சயமா?’ என்றான். ‘இந்த மாப்பிள்ளையை கன்ஃபார்ம் பண்ணிட்டேன்’ என்றாள். மிடுக்காக அழகாகச் சிரித்துக்கொண்டு இருந்தார். ஃபுல் ஸ்க்ரீனில் வைத்துப் பார்த்தான். மருணைக்கீழே தள்ளி மூர்க்கமாக, முழுமையாகப் புணர்ந்து கடாசினாள் சாந்தவி.

காலையில் கிளம்புகையில், ‘சாந்து, என்னதான் பதமா கேட்டாலும், நோண்டிக் கேட்டாலும், மிரட்டிக் கேட்டாலும், நம்ம கதையை மாப்பிள்ளை கிட்ட சொல்லிடாதே. எல்லா ஆம்பளையும் ஒரே மாதிரிதான், என்னையும் சேர்த்து’ என்றபடி வெளியேறினான். திருமணத்தின்போது எந்தக் குழப்பமும் இல்லாமல் ஜாலியாக மகிழ்ச்சியோடு இருந்தாள் சாந்தவி. பிரமாண்டமாக நடைபெற்றது திருமணம். மாப்பிள்ளையின் தங்கை மருணை சைட் அடித்தபடி வளைய வந்ததைப் பார்த்து ரசித்துச் சிரித்தாள் சாந்தவி. கண்களால் அவளைக் காட்டி, என்ன என்பது போலக் கேட்டாள் சாந்தவி. வெட்கப்படுவதா சோகப்படுவதா எனத் தெரியாமல் உதட்டைக்கடித்துக்கொண்டே கீழே குனிந்து கொண்டான். கடமைக்கு டிஃபன் சாப்பிட்டுவிட்டு, தாலி கட்டுவதற்கு முன்னமே கிளம்பி ஓடி வந்து விட்டான் மருண்.

திருமணத்தன்று மாலை சாந்தவியிடம் இருந்து வந்த நான்கைந்து அழைப்புகளை ஏற்கவில்லை. தனியாக அமர்ந்து குடித்துவிட்டு அழுதான். அழ வேண்டுமா சிரிக்க வேண்டுமா என்றே தெரியவில்லை மருணுக்கு.

அழுகை இயல்பாக வருவதால் அழுது விடுவோம் என்ற முடிவுடன் அழுதபடி குடித்துக்கொண்டு இருந்தான். இதோடு கதையை முற்றும் போடலாம் என்றுதான் நினைத்தேன். ஆனால் கதை தொடர்வதால், அதன் போக்கில் விட்டாகி விட்டது.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

சில மாதங்களுக்குப் பிறகு சாந்தவி போன் செய்து சாப்பிடுவதற்கு அவளின் வீட்டுக்கு அழைத்தாள். 'எப்ப வரட்டும் சாந்து?' 'எப்ப வேணா வாடா! எப்ப வரன்னு சொல்லு.' 'இல்ல, அவர் எப்ப இருப்பாரு?' 'நீ அவரைப் பாக்க வரியா? என்னைப் பாக்க வரியா?' 'இல்ல... உன்னைப் பாக்கத்தான்.' 'சரி, எப்ப வர்ற?' 'அவர் எப்ப ஆஃபீஸ் போயிட்டு, எப்ப வருவாரு?' 'மருண் குட்டி, அவர் கிட்ட நம்ம கதை எல்லாத்தையும் சொல்லிட்டேன். ஒண்ணு விடாம சொல்லிட்டேன். நமக்குள்ள இருந்த செக்ஸுவல் ரிலேஷன்ஷிப், எமோஷனல் அட்டாச்மெண்ட் எல்லாத்தையும் சொல்லிட்டேன். அவர்தான் உனக்கு எப்ப மருணை பாக்கணும்னு இருக்கோ, பாத்துக்கோ. டக்குன்னு ஒரு ரிலேஷன்ஷிப்பை கட் பண்ணிவிடறது கஷ்டமா இருக்கும்னு சொன்னாரு. வீட்டுக்கு வேணாலும் கூப்பிடு, வெளில வேணாலும் போய் பாருன்னு சொன்னாரு. வீட்டுக்கு மருண் வரும்போது நான் இருப்பது டிஸ்டர்பா இருந்தா, நான் வேணா வெளில போயிடறேன்னு சொன்னாரு. நீ எப்ப வர்ற? அவரை வேணா உனக்கு தொந்தரவா இருந்தா வெளில போயிடச் சொல்றேன், என்னடா சொல்ற' என்றாள்.

'சாரி சாந்து. சாரி சாந்தவி. அவர் எப்ப இருப்பாருன்னு சொல்லு, அப்ப வரேன்.'

முற்றும்.

எந்தக் கதையும் கதாசிரியர் முடிக்கும் இடத்தில் முடிந்துவிடாது. ஏதோ ஒரு தருணத்தில், எழுதுவது அலுப்பு தட்டுவதாலோ, அட நச் முடிவு என கதாசிரியர் நினைப்பதாலோ முடித்து வைக்கப்படுகிறது. உண்மையில் எந்தக் கதையும் முடியாமல் தொடர்ந்து கொண்டேதான் இருக்கிறது. மேற்கண்ட முடிவு ஃபீல் குட் முடிவாக இருப்பதாலும், என்னதான் செக்ஸ், பொருந்தாக்காதல் இருந்தாலும், மனிதனின் நல்ல பக்கத்தை காட்டி நம்பிக்கையூட்டும் விதத்தில் முடிவதால், பெரும்பாலான வாசகர்களின் ஏகோபித்த வரவேற்பைப் பெறும் என்ற நோக்கில் முடித்திருக்கலாம். மேற்கண்ட முடிவில் வரும் சம்பவம் உண்மைதான் எனினும், அது முடிவல்ல. இந்த நவீன விக்ரமன் படப் பாணி முடிவால் மனது நெகிழ்ந்த வாசகர்கள் மேற்கொண்டு படிக்காமல் அடுத்த கதையைத் தொடரலாம். கதை முடிந்து விட்டது. கதைக்கு முற்றும் போட்டுவிட்டாலும், உண்மை

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

அதுவல்ல. உண்மை தொடர்வதால் அதையும் தொடர்ந்து விடுவோம்.

அவர் இருக்கும்போது ஒரு முறை சாந்தவி வீட்டுக்குச் சென்று லன்ச் சாப்பிட்டு வந்தான் மருண். அவருடனும் சாந்தவியுடனும் கலகலப்பாகப் பேசிக்கொண்டிருந்துவிட்டு வந்தான். அவர் மருணிடம் வெகு இயல்பாகப் பழகினார். எதையும் மறந்தும் வெளிக்காட்டிக்கொள்ளவில்லை. பிறகு அவ்வப்போது சாந்தவி வீட்டுக்குப் போய் வந்துகொண்டு இருந்தான். தொடர்ச்சியாகக் காமம் அனுபவித்தவனுக்குச் சில மாதங்கள் காமப்பட்டினி தாங்க முடியவில்லை. பலகீனமான தருணங்களில் சாந்தவிக்கு மெசேஜ் அனுப்ப ஆரம்பித்தான். காதல் மெசேஜ்கள் பறந்தன. முன்பு சேர்ந்திருந்த காம தருணங்களை மெசேஜால் மீட்டுருவாக்கம் செய்தான். அவர் இல்லாதபோது ஏதேதோ பிதற்றி அழுது புலம்பி சாந்தவி மீது சாய்ந்து கதறிக்கொண்டே வெறியுடன் முத்தமிட்டுக் கட்டிப்பிடித்து உருண்டான். புதுப்பெண்ணின் ஆடையை அவிழ்ப்பதைப்போல வெறியுடன் சாந்தவியின் ஆடைகளைக் கிழித்து எறிந்தான். ஆவேசம் வந்தவன்போல முற்றாகப் புணர்ந்து முடித்து சாந்தமானான். சாந்தவியால் தடுக்கவே முடியவில்லை. இது விட்டுவிட்டு தொடர்கதை ஆனது. அவரைப் பற்றி இருவருமே பேசிக்கொள்ளவில்லை. அவரின் பெருந்தன்மை அவரளவில் மட்டுமே அமிழ்ந்து போனது. வீட்டில் பார்த்த பெண்ணை நிச்சயம் முடித்து அவளுடன் மொபைலில் மொக்கை போட்டுக்கொண்டிருக்கும் வரை சாந்தவியுடனான உறவு தொடர்ந்தது.

மருணின் திருமணத்திற்கு சாந்தவி வந்திருந்தாள். அதற்குப்பிறகு படிப்படியாக எப்போது உறவு தேய்ந்து முடிந்தது என்றே சொல்ல முடியாத அளவுக்கு மொக்கையாக சாந்தவியிடம் தொடர்பு அறுந்து போனது. இருவருக்கும் எண்ணிப்பார்த்து இன்பம் துய்க்கும் அளவுக்கு எந்தக் காதலும், காதல் சார்ந்த தருணங்களும் இல்லாமல் போனது. தன் பையனின் கல்வி தகவலுக்காக ஒருமுறை மருணுக்கு சாந்தவி போன் செய்தபோது கால் சென்டர் எக்சிக்யூட்டிவ் போலப் பேசிவிட்டு வைத்தான்.

மருணின் மனைவி ‘யாருங்க’ என்றபோது, ‘ஊர்க்கார ஆன்ட்டி, வெட்டியா இதுக்கெல்லாம் கூப்டு என்னை டார்ச்சர் பண்ணுது’

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 13. பிரேக் அப்
## அற்புத நிர்வாணச் சிலை

தனக்கு வகுப்பெடுத்த டீச்சர் மகள் என்பதால் காதலிக்கக்கூடாது என்ற தார்மீக உணர்வு ஊற்றெடுத்துத் தடுத்ததால் அந்த உணர்வை அடக்கி அடக்கி அதிகமாகக் காதலித்துக்கொண்டு இருந்தான். அவளிடம் சொல்லவேயில்லை. தார்மீக உணர்வை நல்லதொரு மழை பெய்யும் நாளில் மொத்தமாகக் காலில் போட்டு நசுக்கிக் கொன்று தேய்த்தான். அன்றே போய் அவளிடம் சொல்ல விழைந்தான். அவள் அகப்படவில்லை. என்ன அபசகுனமடா என நொந்து இவ்வளவு வருடக் காதலையும் 12 பக்கக் காதல் கடிதமாக வடித்து எடுத்தான். நடுநடுவே இரண்டு டீயும் 3 சிகரட்டும் அடித்து முடித்திருந்தான்.

அவளின் அசௌகரியமான ஒரு சந்தர்ப்பத்தில் தன்னுடைய பல்லாண்டு கால காதலை அபத்தமாகக் கூறியபோது, ‘இருக்குற பிரச்சனைல நீ வேறடா’ எனத் தாண்டிப்போனாள். தொடர்ந்து சொல்லிசொல்லி, தான் உண்மையிலேயே அவளைக் காதலிப்பதாக அவளுக்கு உணர்த்த மாதமாகிப்போனது. இதோ திருமணப் பத்திரிகை வரை வந்து விட்ட இந்தக் காதலிலும், எல்லாக் காதலிலும் நடக்கும் சம்பவங்கள், கோபங்கள், ஊடல்கள், ஒட்டுதல்கள், உரசல்கள் நடந்தன. முதலில், ‘எனக்கு கல்யாணத்திலேயே இன்ட்ரெஸ்ட் இல்லை’ எனப் பல நாட்களாகச் சொல்லி வந்தாள். ஏன் ஏன் ஏன் எனப் பல முறை கேட்டும், ‘இன்ட்ரஸ்ட் இல்லன்னா இன்ட்ரஸ்ட் இல்ல. அவ்ளோதான், விடேன்’ என்றே கூறி வந்தாள். இவனுடைய அடர்த்தியான காதல், அவளின் பிரசித்தி பெற்ற தீர்மானத்தை ஆட்டிப்பார்த்து மாற்றிப்போட்டது.

காதலிக்கும் நாட்களில் தீ போல இருந்தாள். விரல் பட்டாலே கோபித்துக்கொள்வாள். கட்டிப்பிடிக்கவே பல மாதங்கள் ஆகின.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

முத்தமிட வருடங்கள் தேவைப்பட்டன. அவனுக்கு எரிச்சலாக வந்தாலும், நமக்கு வாய்த்தது சரியான பத்தினி தெய்வம் போல என நினைத்து, மனம் மகிழ்ந்து சுய இன்பம் அனுபவித்தான். முத்தத்தை மீறி வேறெதுவும் செய்ய அனுமதிக்கவேயில்லை. அவர்களுக்குள் ரசமான காதல் வசனங்கள் ஏதும் தேறவில்லை என்றாலும் கதைக்குத் தேவையான சில வழக்கமான காதல் வசனங்கள்:-

என்னை உனக்கு ரொம்ப பிடிக்குமா?

ரொம்ப ரொம்ப நிஜமா?

சத்தியமா.

நான் செத்துட்டா என்னா பண்ணுவ?

நானும் செத்துடுவேன்.

ஐ லவ் யூ. ஐ லவ் யூ.

எனக்காக என்ன வேணும்னாலும் பண்ணுவியா?

பண்ணுவேன்.

என்ன பண்ணுவ?

என்ன வேணும்னாலும். ஐ லவ் யூ. ஐ லவ் யூ.

இந்த உலகத்திலேயே உனக்கு யாரை ரொம்ப பிடிக்கும்?

உன்னைத்தான்.

உண்மையாவா?

பிராமிஸா.

உங்க அம்மாவைவிடவா?

எல்லாரையும்விட.

நிஜமாவா?

நிஜமா, நமக்கு பொறக்கப்போற குழந்தையைவிட.

ஐ லவ் யூ. ஐ லவ் யூ.

எனக்கு எதாச்சும் ஆச்சின்னா என்னா பண்ணுவ?

உனக்கு ஒண்ணும் ஆவாது.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

ஆச்சின்னா?

ஆவ விடமாட்டேன்.

ஆயிடிச்சின்னா?

உன்னை குழந்தை மாதிரி பாத்துப்பேன்.

ஐ லவ் யூ. ஐ லவ் யூ.

எனக்கு கண் நொள்ளை ஆயிடிச்சின்னா?

நாந்தான் உனக்கு கண்ணு. உன்னை பத்திரமா பாத்துப்பேன்.

எனக்கு கால் நொண்டியாயிடிச்சின்னா?

உன்னை எப்பவும் என் மடியிலயே வச்சிப்பேன். தோள்ல தூக்கிப்போட்டுட்டு போவேன்.

எனக்கு குழந்தை பொறக்காதுன்னு டாக்டர் சொல்லிட்டா?

நீதான் எனக்கு குழந்தை. ஐ லவ் யூ. ஐ லவ் யூ.

என்னால செக்ஸ் வச்சிக்க முடியாம போச்சின்னா என்னா பண்ணுவ?

எனக்கு செக்ஸே வேணாம்டா கண்ணு. நீ எனக்கு முத்தம் குடுப்பதே சொர்க்கமா இருக்கு.

நான் அசிங்கமா குண்டா ஆயிட்டேன்னா என்னா பண்ணுவ?

நீ எப்பிடி ஆனாலும் எனக்கு அழகுதான். நீதான் எனக்கு தேவதை.

அசிங்கமாயிட்டாலும் இதே போல காதலிப்பியா?

எனக்கு இப்பிடி மட்டும்தான் காதலிக்கத் தெரியும். எப்பவும் ஒரே மாதிரிதான் இருப்பேன். நீ அசிங்கமானதே எனக்குத் தெரியாது. ஐ லவ் யூ. ஐ லவ் யூ.

என்னாயா கதை எழுதற?

இந்த வசனங்களில் யார் ஆண் பேசியது, யார் பெண் பேசியதுன்னு தெரியலை. ஒழுங்கா எழுதக்கூடாதா என்பவர்களுக்கு விசு பட டிவிடி கலக்ஷன் அனுப்பி வைக்கப்படும். மனுஷ்ய புத்திரனை மதிய வேளைகளில் தொடர்புகொண்டு கேட்டுப்பெறலாம். கல்யாணம் முடிந்து முதலிரவில் மேல்நடவடிக்கையோடு நின்று போனது. ‘டயர்டா இருக்கு, ஹனிமூன்ல பாத்துக்கலாம்டா செல்லம்’ எனக்கூறி

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

விட்டாள். ஹனிமூனில் திகட்ட திகட்ட சுவைத்தார்கள். குடும்பம் செட்டில் செய்து வாழ்வாங்கு வாழ்ந்து வந்தனர். அனைத்து வகையான காமக் களியாட்டங்கள் தங்கு தடையின்றி நடந்து வந்தது. ஒரே ஒரு குறை மட்டுமே நம்மாளுக்கு. அதாவது அவளுக்குக் கூச்ச சுபாவம் ஜாஸ்தி. கொஞ்ச நஞ்சமல்ல, ரொம்ப ரொம்ப ஜாஸ்தி. அதனால் படுக்கையறைக்கு வந்தாலே விளக்கணைத்து விடவேண்டும். விளக்கணைத்தால் மட்டுமே வெட்கம் துறந்து ஆடை அவிழ்த்து காமலோகத்தில் சஞ்சரிக்கலாம். இது ஒன்றும் பெரிய குறை இல்லையெனினும், பளிங்குச் சிலை போல இருக்கும் தன் அழகுபொண்டாட்டியை பளிச்சென வெளிச்சத்தில் உரித்துப் பார்க்க விரும்பினான். அவளது வளைவுகள், எடுப்புகள், திமிறு தசைகள், குழைவுகள் அனைத்தையும் கண்கள் விரிய பார்த்துப் பருக வேண்டும் என்பது அடக்க முடியா ஆசையாக வளர்ந்து கொண்டே போனது. அதற்கு இந்த ஜென்மத்தில் சாத்தியம் இருப்பது போலத் தெரியவில்லை. அதைப்பற்றிப் பேசி, உள்ளதும் போச்சுடா என்ற நிலைமை வந்துவிடக்கூடாது எனத் தெளிவாக இருந்தான்.

ஒர் இரவு இருவரும் மது அருந்தி, இயங்கி முயங்கி மது போதையில் அப்படியே தூங்கி விட்டனர். தூக்க மயக்கத்தில் கிர்ர்ர்ர் கிர்ர்ர் என ரம்பம் அறுப்பது போல ஏதோ கனவு ஓட விழித்துக்கொண்டான். சில வினாடிகளுக்குப் பிறகுதான் மொபைல் வைப்ரேட் ஆகிக்கொண்டிருந்தது தெரிந்தது. அலம்பாமல் கூட அப்படியே படுத்துத் தூங்கி விட்டதை எண்ணி வெட்கத்துடன் சிரித்துக்கொண்டே தூங்கிக்கொண்டிருக்கும் அவளுக்கு முத்தமிட்டான். திடீரென அவனுள் சைத்தான் விழித்துக்கொண்டது. அவளுக்கு முகம் மறைப்பது போல போர்த்திவிட்டு விளக்கை ஆன் செய்து அவளின் மேனி எழிலை முழுதாகப் பார்த்து விடலாம் என முடிவு செய்தான். போர்வையை அவள் முகத்துக்கு மட்டும் மெதுவாக நன்கு போர்த்திவிட்டு, பூனை போல எழுந்து போய் விளக்கைப்போட்டான்.

அதி அற்புத நிர்வாணச் சிலை போல படுத்து இருந்தாள். சொக்கிப்போய் அவளின் மார்பழகையும், குழைவான வயிற்றழகையும் ரசித்துக்கொண்டே வந்தவன், வலது தொடையில் வடிவமில்லா கருத்த மருவைப் பார்த்துத் திடுக்கிட்டான். அழகான வெள்ளைத் தொடையில் பூவரச இலை சைஸிற்கு கருப்பாக மரு இருந்தது. அதன் மேல் செம்பட்டை கலரில் கொசகொசவென முடி வளர்ந்திருந்தது. பாத்ரூமிற்கு ஓடினான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

பிறகான நாட்களில் எது எதற்கோ வெட்டியாக சிடுசிடுக்க ஆரம்பித்து, எதற்கெடுத்தாலும் சண்டை என்றாகி, ப்ளாஸ்டிக் சர்ஜரி செஞ்சுக்கறேன் என்று அவள் சொல்லிப்பார்த்தும், விவாகரத்தில் முடிந்தது.

‘என் அனுமதி இல்லாமல், எனக்குத் தெரியாமல் எப்படி நீ விளக்கைப் போட்டு என் தொடையைப் பார்க்கலாம்’ என அவள் கடைசி வரை கேட்கவேயில்லை.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 14. பிரேக் அப்

## பூப்பந்து

தீபஸ்வதியின் தாயாருக்கு, தாமரை மலருக்குள் முல்லை, கனகாம்பரம் முதலிய மலர்களை அடைத்து பந்து செய்து தன் மகளுக்குக் கொடுப்பதில் அலாதிப் பிரியம். சுட்டிப்பெண் தீபஸ்வதி தேர்கள் தடதடக்கும் வீதியில் யாருக்கும் பயப்படாமல் அந்த மலர்ப்பந்துகளை வைத்துக்கொண்டு தன் தோழிகளோடு விளையாடுவது வழக்கம். மன்னரின் தேரைத்தவிர மற்ற தேர்களும் ரதங்களும் தீபஸ்வதிக்காக நின்று மெதுவாகத்தான் செல்லும். தேரில் இருப்பவருக்கு சமயத்தில் தன் மலர்ப்பந்தை எய்வாள். கனிவாகப் பிடித்து மலர்ந்த முகத்துடன் தீபஸ்வதிக்கு திருப்புவர் தேர்ப் பெருமக்கள்.

ஒருநாள் தாமரைப் பந்து எனில், மறுநாள் அல்லிப்பந்து, பூசணிப்பந்து என மலர்ப்பந்துக்களால் அந்தச் சுட்டிச் சிறுமியின் வாழ்வு பூத்துக்கொண்டிருந்தது. மலர்ப்பந்து பிடிப்பதில் லாகவம் வேண்டும். பந்தைப் பிடிக்கையில் பந்தின் பூவிதழ்கள் பிரிந்து உள்ளிருக்கும் பூக்கள் கொட்டி விட்டால், தோல்வியாகும். தோற்ற சிறுமியின் கண்களில் இருந்து மலர்ச் சொட்டுக்கள் சொட்டும். தீபஸ்வதியின் குறியும் தவறியதில்லை, பூப்பந்தும் அவிழ்ந்தது இல்லை.

ராமன் ஒருமுறை தம்பிகளுடன் தேரில் செல்கையில் தீபஸ்வதி எறிந்த பந்து ராமனின் முகத்தை நோக்கி வருகிறது. தேரோட்டி பதறி எழுந்து நின்று தடுக்க முயல்கிறார். சடுதியில் ராமன் தன் கவண் வில்லை எடுத்து, பறந்து வரும் பூப்பந்தை நோக்கி எய்கிறான். சீறிப்பாய்ந்த மண் உருண்டை சரியாக பூப்பந்தின் நடுவில் சத்தென மோதி பூப்பந்தை சற்று தூரம் தள்ளிக்கொண்டு சென்றது. விசை ஏற்றம் பெற்று, பூப்பந்தினுள் நுழைந்த மண் உருண்டை பூப்பந்தை

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

சிதறடிக்க, முல்லை, நந்தியாவட்டை பூக்கள், விழிகளும் நாசியும் நெற்றியும்விரிய பார்த்துக்கொண்டிருந்த தீபஸ்வதி மேல் சொறிந்தன.

குமரனும் நோக்கினான், குமரியும் நோக்கினாள். நோக்கித்தானே ஆகவேண்டும். குழுமியிருந்த அனைவரும் நோக்கினர். தேர்களில் கட்டியிருந்த புரவிகளும் நோக்கி, கண்களைச் சிமிட்டி, கால்களை முன்னும் பின்னும் நகர்த்தி நடனமாடின.

குமரன் தேரில் இருந்து இறங்கினான். குமரி நின்றிருந்த இடத்திற்கருகே சென்றான். குமரியின் இமைகளில்தொற்றிக்கொண்டிருந்த ஒற்றை முல்லைப்பூ, குமரியின் சிமிட்டலால்இமைகளில் இருந்து தெறித்து குமரனின் தாள் பணிந்தது.

ராமனை நோக்கிய தீபா, ‘இதுதான் இன்றைய கடைசிப்பந்து, இதைச் சிதைத்து விட்டாயே’ என்று கோபம் காட்டினாள்.

‘உனக்கு விளையாட்டு காட்டவே கவணால் அடித்தேன். பூச்செறிந்த காட்சியைக் கண்டாயா? விண் கொள்ளாக் காட்சியாக இருந்ததே! கவலைப்படாதே, எங்கள் அரண்மனைத் தோட்டத்தில் நிறையப் பூக்கள் பூத்துக்குலுங்குகின்றன. உனக்காக விதவிதமான பூக்களில் விதவிதமான பந்துகளை செய்து கொண்டு வந்து கொடுக்கிறேன். சுழலும் பூப்பந்து, விரியும் பூப்பந்து என விதவிதமான பந்துகள் செய்து கொடுக்க அரண்மனையில் ஆட்கள் உள்ளனர்’ என்றான் ராமன்.

சோகமான முகத்தில் எரிகல் வேகத்தில் மகிழ்ச்சி குடி கொண்டது தீபாவுக்கு.

‘இப்போது என்னுடன் விளையாடலாம் வா’ என தீபாவின் கரம்பற்றித் தேருக்கு அழைத்துச் சென்றான் ராமன். தேர் வேகமெடுத்து, வீதியின் இருமருங்கிலும் கனிகள் பூத்துக்குலுங்கிக்கொண்டிருந்த இடத்தில் நின்றது.

ராமன் கவண் எடுத்துப் பழங்களைக் குறி பார்த்து அடித்தான். பழங்கள், மண் உருண்டை பட்டதால் விழுந்ததோ அல்லது ராமன் அடிப்பதால் விழுந்ததோ என்று ஐயமுறும் வண்ணம், கொக்கு மீனைப்பிடிக்க நீர்நிலைகளில் சர்ரென இறங்குவது போல விழுந்து கொண்டிருந்தன. சிறுமிக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. தாய்க்கு, தந்தைக்கு எனப் பழங்களைப் பொறுக்கி வைத்துக்கொண்டாள்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

கீழே விழுந்து தூரத்தில் உருண்டோடிக்கொண்டிருந்த பழங்களை அந்த வழியாகச் சென்ற மந்தாரை நான்கைந்து எடுத்துக்கொண்டு சென்றாள். சிறுமிக்கேயுரிய குறும்புடன் ‘ராமா, நம் பழத்தை அந்தக் கூனி நம்மைக் கேட்காமலேயே பொறுக்கிக்கொண்டு போகிறாள்’ எனக் குதித்தபடி கத்தினாள். தீபஸ்வதியின் முகம் குறும்பைத்தாண்டிக் கோபத்தால் சுருங்கி இருந்ததை சிறுவன் ராமன் கவனித்தான்.

கவண் வில்லை எடுத்துக் கூனியின் முதுகில் விட்டான். முதுகுத்தண்டில் பட்ட மண் உருண்டை சூட்டாங்கொட்டையைப் போலச் சூடாக கூனியின் மூளைக்குச் செய்தி சொல்லியது. துடித்த கூனி பழங்களைத் தவறவிட்டாள். வலியுடன் தீபஸ்வதியையும் ராமனையும் திரும்பிப் பார்த்தாள். இடதுகையை இடுப்பில் வைத்தபடி நகர்ந்து மறைந்தாள்.

சிறுவர்களாக இருந்தும், அந்தச் செய்கை அந்த இடத்தின் குதூகலத்தைக் குடித்து விட்டிருந்ததை உணர்ந்தார்கள். அன்று அதோடு அமைதியாக தேரில் ஏறி வீடு திரும்பினர். வழியில் தீபாவை இறக்கி விட்டுவிட்டு ராமன் அரண்மனை திரும்பினான்.

அதற்குப்பிறகான நாட்களில் விதவிதமான பூப்பந்துகளை ராமன் தீபாவிற்கு வழங்கினான். கவண் வில் விளையாட்டை ராமன் நிறுத்தியிருந்தான். ராமனும் தீபஸ்வதியுடன் சேர்ந்து பூப்பந்து விளையாட்டே விளையாடினான்.

ராமன் கையில் வில் ஏறியதும், தீபஸ்வதி பூப்புனிதமடைந்தாள். இருவர் உள்ளத்திலும் சிறுவர்கள் வாழ்ந்தே வந்தனர். விளையாட்டு விளையாட முடியாமற்போனது. சந்திக்க இயலாமல் போனது. நாட்கள் செல்ல செல்ல ராமன் வில் வித்தையில் கவனம் செலுத்த, தீபஸ்வதிக்கு ராமன் மேல் மையல் உருவானது. சிறுவர்களாக இருந்து விளையாடியதை அசை போடுவது மட்டுமே அம்மணியின் ஒரே வேலையாகிப்போனது. ராமனைப்பற்றி வெறும் செவி வழிச் செய்திகள் மட்டும்தான். நேரில் சந்திக்க வாய்ப்பேயில்லை. ஆனாலும் செவி வழிச்செய்திக்காக ஏங்கினாள். ராமனைப்பற்றி யாரேனும் ஏதேனும் சொல்ல மாட்டார்களா என அவள் காது மடலில்பசலை படர்ந்தது. தன்னால்தான் முன்னர் மாதிரி வெளியே செல்ல முடிவதில்லை. ராமன் ஏன் தன்னைப் பார்க்க வருவதில்லை எனக் குழம்பினாள். தன்னை வந்து சந்திக்கும்படி பலமுறை ராமனுக்குத் தூது விட்டாள்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

விளையாட்டெல்லாம் போதும். வில் வித்தையில் கவனம் செலுத்து. சாஸ்திரங்களில் கவனம் செலுத்து. அரசனாகப்போகிறவனுக்கு அளவில்லாத் திறமைகள் வேண்டும். தந்தையுடன் அரசவையில் கலந்து கொள் எனக் கோசலை சொன்னதையெல்லாம் தட்டாமல் செய்தான் ராமன். தாய்ப்பிள்ளை ராமன்.

விஸ்வாமித்திரருடன் அவரின் தவத்தைக் காக்கராமன் காட்டுக்குச் சென்று விட்டான். செய்தி கேட்டு துடிதுடித்துப்போனாள் தீபஸ்வதி. தவித்தாள், மருகினாள், அழுதாள், அங்கலாய்த்தாள். என்ன இருந்தாலும் தன்னிடம் சொல்லாமல் போனதை அவளால் நியாயப்படுத்திக்கொள்ளவே முடியவில்லை. தான்தான்மனதுக்குள் ராமனைக் காதலிக்கிறோம், ராமனுக்கு ஏதும் தெரியாதே என நினைத்தாள். பின், தன்னால் மட்டும் தனியாக ராமனை காதலிக்கவே முடியாது, ராமனுக்கும் இதில் பங்கிருக்கிறது, தான் காதலிப்பதை அவன் அறிந்திருக்க வேண்டும், அது அவனது கடமை. பெண்ணாக தன்னால் எப்படி ராமனை சந்தித்து பேசவோ, காதலை சொல்லவோ முடியும்? ராமன்தான் காதலுக்குப் பொறுப்பேற்று என்னை வந்து சந்தித்து இருக்க வேண்டும். ராமனுக்கு என் மேல் காதல் இல்லையெனினும், ராமன் மேல் எனக்குக் காதல் உண்டானதற்கு ராமனுக்கு பொறுப்பேயில்லையா என்றெல்லாம் மனதுக்குள் மாற்றி மாற்றி உரையாடிக்கொண்டு இருந்தாள்.

இந்தப் பெண்கள் எல்லாம் இப்படித்தான் பேதைகள். ஒருவனை மனதுக்குள் எண்ணி எண்ணி மாய்ந்து போவார்கள். வாழ்க்கையைத் தொலைப்பார்கள். ஆண்களுக்கு அன்றன்று புது தினம்தான், புது வாழ்க்கைதான். தான் ராமன் மனதில் கடுகளவு கூடத் தற்போது இருக்க மாட்டோம் என்றெல்லாம் எரிச்சலுடன் யோசித்துக்கொண்டிருக்கையில்,

அண்ணலும் நோக்கினார், அவளும் நோக்கினாள்.

ராமனை மனதில் இருந்து எடுத்து விடுவது என முடிவு செய்தாள்.

ராமன் நினைவாக வைத்திருந்த கவண் வில்லை எடுத்து ஒடித்துப்போட்டாள். ராமனை மனதில் இருந்து எடுத்து துடைத்துப்போட்டாள்.

ராமன் வில்லை தூக்கி ஒடித்தான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

சயந்தகா முனிவர் நடத்திக்கொண்டிருந்த ஆசிரமத்தில் சேர்ந்து வயதான முனிவர்கள் மற்றும் வயதான பொதுமக்களுக்குச் சேவை செய்தாள். மீதி நேரத்தில் வான சாஸ்திரம் படித்தாள்.

ராமன் சீதையுடன் காட்டுக்குச் சென்ற செய்தி கேட்டதும், தனக்கு இதற்கும் சம்பந்தம் இல்லை என்று வேலைகளில் மூழ்கினாலும் மனம் சஞ்சலப்பட்டுக்கொண்டேயிருந்தது. மறுநாள் அதிகாலை கூனி சயந்தகா முனிவரின் ஆசிரமத்துக்கு வந்தாள். தன்னைச் சேர்த்துக்கொள்ள சயந்தகா முனிவரிடம் கோரினாள். சயந்தகா கண்ணை மூடி தியானம் செய்துவிட்டு, 'மன்னித்து விடம்மா, உன்னைச் சேர்க்க எனக்கு அனுமதி இல்லை' என்றார்.

சயந்தகா அருகில்நின்ற தீபஸ்வதியைப் பார்த்து, 'என்னை நியாபகம் இருக்கிறதா? நீ கவண் வில்லால் என்னை அடிக்கச் சொன்னாயே? ராமனும் அடித்தானே? அதனால்தான் அவனைக் காட்டுக்கு அனுப்பி விட்டேன். நீ அடிக்கச் சொன்னதால், அவனை உன்னுடன் விளையாட விடாமல், சந்திக்க விடாமல் கோசலையிடம் சொல்லி அப்போதே தடுத்து விட்டேன். என்னை அடிக்கச் சொல்லாமல் இருந்திருந்தால், தீபஸ்வதி இந்நேரம் ராம மகாராஜாவின் மனைவி ஆக இருந்திருப்பாள். நீ அடிக்கச் சொன்னதால், இங்கே இருக்கிறாய். அடித்ததால் அவன் காட்டிற்குச் சென்றான். சீதையையும் இழந்தான். இப்போது போரிட்டுக்கொண்டிருக்கிறான்' எனக் கோபமாக கூறிச் சென்றாள்.

தன்னால்தான் ராமன் காட்டுக்குச்சென்றானா? தன்னால் சம்மந்தமேயில்லாத சீதையும் லக்ஷ்மணரும் காட்டில் துன்பப்படுகிறார்களா? இனி தான் வாழ்வதில் அர்த்தமேயில்லை என்ற முடிவுக்கு வந்தாள். மறுநாள் அதிகாலை ஆசிரமத்தில் தீ மூட்டி, பூமா தேவியிடம் 'இந்த உலகில் நான் இருக்கத் தகுதியற்றவள்' எனக்கூறிப் பாய்ந்தாள்.

பூமி பிளந்தது. பூதாகரமான வாழைப்பழத்திற்குள் வழுக்கிச் செல்வது போல கீழே சென்று கொண்டிருந்தாள். பெரும் வாழைப்பழத்தோல் போன்ற இரு கரங்களுக்குள் மெத்தென விழுந்தாள்.

மேல்நோக்கினால், கனிந்த முகத்துடன் மாபெரும் கொண்டையுடன் பூமாதேவி தீபஸ்வதியை ஆதூரமாகப் பார்த்தாள்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

எனதருமைக் குழந்தையே, என் செல்ல மகள் விரைவில் இங்கே வருவாள். அவளுக்குத் துணையாக முன்பே நீ வந்து விட்டாய். அவள் வரும் வரை பூப்பந்தாடிக்கொண்டு இரு என்று மலர்ந்தபடியே, கொண்டையில் பூத்துக்குலுங்கிக்கொடிருந்த காடுகளில் இருந்து கடுகளவு பறித்து தீபாவின் மேல் போட்டாள்.

தேவி, என்னை ஏன் காப்பாற்றினாய்? நான் இறக்கவேண்டியவள் என்றாள் தீபா.

ஏன் காப்பாற்றினேனா? இதை மட்டும் வக்கணையாகக் கேள், அதோ பார் என்று காட்டினாள் பூமா தேவி. கும்பல் கும்பலாகப் பெண்கள். எல்லோரும் ஓடிக்கொண்டும், விளையாடிக்கொண்டும், அமர்ந்து கதை பேசிக்கொண்டும் இருந்தனர். சற்று தூரத்தில் ஒரு மைதானம் போல அமைக்கப்பட்டிருந்த ஒரு திடலில் சில பெண்கள் தலைவிரிக் கோலமாக ஒருவர் மயிரை ஒருவர் இழுத்தபடியும், கட்டிப்புரண்டபடியும் கொடூரமாகச் சண்டையிட்டுக்கொண்டிருந்தனர்.

'யார் இவர்களெல்லாம் என்று யோசிக்கின்றாயா? இவர்களெல்லாம் உன்னைப்போல தீக்குளித்தவர்கள்தான். அதோ சண்டையிட்டுக்கொண்டிருக்கிறார்களே, அவர்களெல்லாம் தங்களில் யார் கற்பில் சிறந்தவர் எனச் சண்டையிட்டுக்கொண்டிருக்கின்றனர். இப்போது நீ வந்திருக்கிறாய், போ, போய் நீயும் அந்த ஜோதியில் ஐக்கியம் ஆகு' என்றாள் பூமாதேவி கடுகடுத்தபடியே.

'மன்னிக்கவும் பூமா தேவி. நான் இறப்பதற்காகத்தான் தீக்குளித்தேன்' என்றாள் தீபா.

'குளிப்பீர்கள் குளிப்பீர்கள். ஆ ஊ என்றால் தீக்குளித்தல். இன்னும் சில நாட்களில் இல்லங்களில், குளியலறைக்குப் பக்கத்திலேயே தீக்குளிப்பு அறையும் கட்டி வைத்துத் தொலைய வேண்டிய காலம் வந்துவிடும் போலிருக்கிறது. கற்பு கற்பு என்று எல்லோரும் கற்போடு திரிந்து கொண்டிருப்பதால் என் பாடுதான் திண்டாட்டமாகி விடுகிறது. அவன் சொன்னான், இவன் சொன்னான் என்று தீக்குள் பாய்ந்துவிட வேண்டியது. பொழுது போகாமல் பாய வேண்டியது. சின்ன வருத்தத்திற்கெல்லாம் தீக்குள் பாய்ந்து விடுகிறீர்கள். எந்தப் பெண் பாய்ந்தாலும் ஒரு ஆடவனை முன்வைத்துத்தான் பாய்கிறாள். கற்போடு வேறு இருந்து தொலைப்பதால், நான் வேறு என்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

வேலையை எல்லாம் விட்டுவிட்டு, இவர்கள் எல்லோரையும் போய்த் தாங்கிப்பிடிக்க வேண்டியிருக்கிறது. தீயில் தாங்கி தாங்கி என் கரங்களே வெப்பத்தில் கொதிக்கின்றன. பூமியின் மேற்பரப்பில் இருக்கும் பெண்களின் எண்ணிக்கையைவிடஇப்படி தீக்குளித்த பெண்களை நான் தாங்கிப்பிடித்த எண்ணிக்கை இங்கே அதிகமாகி விட்டது' என அலுத்துக்கொண்டாள் பூமா தேவி.

'மன்னிக்க வேண்டும் பூமாதேவி. என்னால் உனக்குத் தொல்லை வேண்டாம். நான் இங்கே மீண்டும் தீக்குளித்து இறந்து விடுகிறேன்' என்றாள் தீபா!

'தீக்குளிப்பதைத் தவிர உங்களுக்கெல்லாம் வேறு ஏதும் தெரியாதா? கற்பு என்ற ஒன்று இருந்துவிட்டால் உங்களுக்கெல்லாம் மூளை வேலை செய்யாதா? கற்பால் உங்களுக்கு விளையும் பயன் என்ன? தான் கற்பில் சிறந்தவள் என்ற மமதை வந்து உங்கள் மூளையை மழுங்கடித்து விடுகிறது. கற்பின் மூலம் சில சித்து விளையாட்டுகளை நிகழ்த்துவதோடு முடித்துக்கொள்கிறீர்கள். கிணற்றில் தண்ணீர் இறைக்கையில் வாளியை அந்தரத்தில் நிற்க வைப்பது, மணல் எடுத்துக் குடம் செய்வது என என் தலையில்தான் வேட்டு வைக்கிறீர்கள். இதோ இன்னும் சில தினங்களில் சீதா இங்கே வந்து விடுவாள். நீ அவளுடன் சிண்டைப்பிடித்துச் சண்டையிட்டுக்கொண்டிருப்பாய். வேறு என்ன உருப்படியாக நடக்கப்போகிறது. இந்த கற்பால், பெண்களுக்கு ஒரு நன்மையும் இல்லை. எனக்குத்தான் தொந்தரவு. நான் சாபமிடுகிறேன், இனி பிறக்கும் எந்தப் பெண்ணும் கற்போடு இருக்க மாட்டாள். கற்பைக் கட்டிக்கொண்டு அழமாட்டாள்' எனக் கோபத்தோடு சத்தமாகச் சாபமிட்டாள்.

ஒருமுறை தன் இயக்கத்தை நிறுத்திய பூமாதேவி, அடுத்த கணம் எதிர்த் திசையில் இயங்க ஆரம்பித்தாள்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 15. பிரேக் அப்

## கொட்ட தாத்தாவின் கதை

'கொட்ட தாத்தாகிட்ட போய் உப்பு வாங்கிட்டு வா' என்று சொன்னால், அந்த ஊரில் சின்னக்குழந்தைக்குக் கூடத் தெரியும் கொட்ட தாத்தாவின் கடை. கடை என்று சொல்லத்தக்க அளவில் அதற்கு ஒரு அடையாளமும் இருக்காது. ஒரு குடிசை, அதற்குப்பின்னால் அதைவிடப் பாழடைந்த குடிசை. அந்தப் பாழடைந்த குடிசையின் தரை எப்போதும் சொதசொதவென இருக்கும். உப்பு மூட்டைகள் ஒழுங்கற்று கிடக்கும்.

கொட்ட தாத்தாவிடம் போய் 2 படி உப்பு எனக்கேட்டால், திறந்து கிடக்கும் நான்கைந்து மூட்டைகளில் ஏதோ ஒன்றை அவரது மூடுக்கு ஏற்றார்போல் தேர்ந்தெடுத்து, 2 படி உப்பை ஒரு கையாலேயே எடுத்துப் போடுவார். இன்னொரு கை, இளநீர் சைஸுக்கு

தொ

ங்

கி

க்

கொ

ண்

டு

இருக்கும் அவரது கொட்டையைத் தாங்கிக்கொண்டு இருக்கும். அவரது பெருத்த கொட்டையால்தான் அவருக்கு கொட்டைத்தாத்தா என்ற பெயர் வந்திருக்கும் என நினைத்தால், அந்த ஊர்க்காரர்களின் சின்ன மதியைப் பற்றிய விமர்சனமாக எடுத்துக்கொள்ளலாம். அவர்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

கொட்டாயில் வைத்து உப்பு விற்பதால், கொட்டாய்த் தாத்தா என்று அழைக்க ஆரம்பித்து, பின் மருவி கொட்டத்தாத்தா என ஆகியிருக்கும் என்று நினைத்தால் நல்ல அன்பான ஊர்க்காரர்கள் என ஆகும்.

கொட்டத்தாத்தா யாராவது வாங்கித்தந்தால் குடிப்பார். இன்ன அளவுதான் என்றில்லை. ஒரு ரவுண்ட் கொடுத்தாலும் குடித்துவிட்டு கம்மென்று இருப்பார். 6 ரவுண்ட் கொடுத்தாலும், அதேபோலக் குடித்துவிட்டு கம்மென்று இருப்பார்.

அந்த சொத சொத கொட்டாய்க்குப் பின்னால் நன்கு பராமரிக்கப்பட்ட தோட்டம் வைத்திருந்தார். ஒரு காலத்தில் செக்கு ஓட்டிக்கொண்டு இருந்தார். அந்தச் செக்கு மரம் இன்னும் அங்கேயே கிடப்பதால் குடிப்பதற்கு பெஞ்சு, மேஜை என எல்லாமுமாக அதுவே ஆகி விட்டது. இடம் கிடைக்காமல், இங்கே குடிக்க வரும் வயசாளிகள், நடுத்தர ஆட்கள் மற்றும் இளசுகள் எல்லோருக்கும் ஃப்ரீ என்ட்ரி கொடுத்திருந்தார் கொட்டத்தாத்தா. கொட்டத்தாத்தாவுக்கு கொடுக்க வேண்டி இருக்கும் சரக்குதான் கவர் சார்ஜஸ்.

பட்டிணத்தில் இருந்து விடுமுறைக்கு வந்திருக்கும் நண்பனை அழைத்துக்கொண்டு கொட்டத்தாத்தா ரெஜுவனேஷன் கேம்புக்கு இளைஞர் பட்டாளம் படையெடுத்தது. முன் வருவோர்க்கு முன்னுரிமை அடிப்படையில் அந்த இளைஞர்களை கொட்டத்தாத்தா அனுமதித்தார். பெரிய மனதுடன் தங்களிடம் இருந்த ஸ்காட்ச் விஸ்கியையே கொட்டத்தாத்தாவுக்கும் வழங்கியது இளைஞர் கோஷ்டி. பேச்சு சுவாரசியமாகி, பட்டணத்து நண்பனின் காதலியின் போட்டோவை மொபைலில் காட்டச் சொன்னார்கள் நண்பர்கள். நெருக்கமாக இருக்கும் போட்டோவை மொபைலில் காட்டிய நண்பன், ‘ப்ச்... இப்ப பிரேக் அப் ஆயிடிச்சி’ என்றான்.

தன் கொட்டாமணியை தன்னுடைய தொடையில் பூனைக்குட்டியைப் படுக்க வைப்பது போல எடுத்துவைக்கும் வேலையில் தீவிரமாக ஈடுபட்டிருந்த கொட்டத்தாத்தா, விலுக்கென நிமிர்ந்தார். அவரது கொட்டை சரிந்து தரையில் சம்மணம் இட்டு அமர்ந்தது.

ஸ்காட்ச் விஸ்கி இதுவரை கொட்டத்தாத்தா குடித்தது இல்லை. ஸ்காட்ச் ஒரு விசித்திர உணர்வை உருவாக்கி இருந்தது கொட்டத் தாத்தாவுக்கு. புத்துணர்ச்சியாக உணர்ந்தார். மன இறுக்கம் கொஞ்சம்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

தளர்ந்து இருந்தது. ‘தம்பியளா, அது என்னாது? பரேக்கு அப்பா? அப்பிடின்னா என்னா’ என்றார்.

கொட்டடத்தாத்தா பேசியதை ஆச்சரியத்துடன் பார்த்த நண்பர்கள், ‘பிரேக் அப் தாத்தா. அப்படின்னா, பிரிஞ்சிடறது’ என்றனர். ‘என்னாத்துக்கு அதுக்குள்ள பிரிஞ்சிட்டீங்க’ என்றார் கொட்டடத்தாத்தா. ‘அவ இன்னொருத்தன் கூட சாட் பண்ணிகிட்டே இருந்தா, அதான் சண்டை ஆரம்பிச்சி, அதிகமாயி, அப்படியே பிரிஞ்சிட்டோம்’ என்றான் பட்டண நண்பன். சாட் என்பதெல்லாம் கொட்டடத்தாத்தாவுக்கு புரியவில்லை எனினும், இன்னொருத்தன் என்ற வார்த்தையை கேட்ச் செய்து விட்டார்.

‘ஒரு சிகரட் குடுங்க தம்பி’ என்று கேட்டு வாங்கிப் பற்றவைத்துக்கொண்டவர், ‘நானும் பரேக்கு அப்புதான்’ என்றார். ‘எப்பிடி தாத்தா? சொல்லுங்க’ என கோரஸாக கேட்டதும்...புகையை இழுத்து விட்ட தாத்தா, ‘நான் எம்பொண்டாட்டி கூட சம்போகம் பண்றப்பல்லாம் முருகா முருகான்னு கத்துவா. எனக்கு அது பெருசா தெரியலை, உணர்ச்சி வேகத்துல சாமியை கூப்பிடறான்னு நெனச்சிக்குவேன். அதுவே எனக்கும் பழகிடிச்சி. அவ முருகா முருகான்னு கத்துனாதான் எனக்கும் வேகம் கூடும். அப்பிடி ஆகிப்போச்சி.’

‘சரி தாத்தா. அப்புறம்...’

‘ஒருநாள் உப்பு லோடு எடுக்கப் போன நான், சகுனம் சரியில்லாம திரும்ப வீட்டுக்கு வரேன். வந்தா, வீட்டு வாசல்ல சைக்கிள் நிக்கிது. செருப்பு கெடக்குது. ‘செரி, ஆள் யாரு’னு நைஸா சாக்குக் காதவை வெலக்கிட்டுப் பாத்தேன். மூஞ்சி தெரியலை. எம்பொண்டாட்டியை ஒருத்தன் சம்போகம் பண்ணிட்டு இருந்தான்.’

‘அதான் பிரேக் அப் பண்ணிட்டீங்களா தாத்தா?

‘இல்ல தம்பியளா, நானும் அடுத்தவ கிட்ட போறவன்தானே! சரின்னு கதவைச் சாத்திட்டுத் திரும்பிடலாம்னு நெனைக்கிறேன். எம் பொண்டாட்டி கத்த ஆரம்பிச்சா. அப்படியே நின்னுட்டேன். மனசால அப்பவே அத்துவுட்டேன்.’

‘ஏன் தாத்தா?’

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

‘முருகா முருகான்னு கத்தலை. ராசா, என் ராசான்னு கத்த ஆரம்பிச்சா.’

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 16. பிரேக் அப்

## காலம், கலவி காலம்

காலம், கலிகாலத்தையெல்லாம் தாண்டி றெக்கை கட்டிப் பறந்து கொண்டிருக்கிறதா?காலம் உருகிக்கொண்டு இருக்கிறது, நேரம் அதில் நீச்சல் அடித்துக்கொண்டிருக்கிறது.

இப்படியான காலகட்டத்தில் ஹோமோசெக்ஸ், லெஸ்பியன் ஆக நம் பிள்ளைகள் ஆனால்தான் குடும்ப கௌரவம் பாதிக்கப்படும், காதலித்தால் பிரச்சினையே இல்லை என்பதான முடிவுக்குப் பல பெற்றோர்கள் வந்து விட்டதால் பிரவீன், நீலா வீட்டிற்கே சென்று, பெற்றோர்களுக்குத் தெரியும்படியே நீலாவைக் காதலித்து வருகிறான். பெற்றோர்கள் ஹாலில் இருக்கும்போது, லேசுபாசாக உரசி, பெற்றோர்களுக்கே கிளுகிளுப்பு ஏற்றுவார்கள் பிரவீனும் நீலாவும்.

நீலா தமிழ் சினிமாவில் காட்டுவது போல சிணுங்குவது எல்லாம் இல்லை. பிரவீனின் புட்டத்தில் தட்டுவாள், ‘மை பேபி’ என பிரவீனின் கன்னத்தை தன் கன்னத்தோடு ஒட்டிச் செல்லம் கொஞ்சுவாள். கலிகாலம் அது இது என்றெல்லாம் சொல்லிவிட்டதால் கதை கிபி 2090ல் நடக்கிறது என்றெல்லாம் நினைத்துக்கொள்ளாதீர்கள். 2017ல்தான். இன்றுதான், இந்த நிமிடம், இந்த செகண்ட்தான் நடந்து கொண்டிருக்கிறது. இதோ நீங்கள் இதை, இதை எனப் படித்துக்கொண்டு இருக்கையில், ஹாலில் நீலாவின் மடியில் பிரவீன் நெருக்கமாகப் படுத்துக்கொண்டு இருக்கிறான். அப்பா லேப்டாப்பில் அரவிந்த் கெஜ்ரிவால் ட்வீட்டைப் படித்துக்கொண்டு இருக்கிறார். அம்மா ஹாலைக் கடந்து செல்கையில், பிரவீனின் கால்களில் தடுக்கிக்கொண்டார். நீங்கள், நீங்கள் என நீங்களைப் படிக்கையில் நீலாவின் அம்மா ‘ஸாரி’ சொல்லிவிட்டு நகர்கையில், நீலா தன்முலைகள் அமுங்க சிரமப்பட்டு

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

பிரவீனின் உதட்டில் முத்தமிட்டாள். இதெல்லாம் போதாது என்று, பல நேரங்களில் அறைக்குள் சென்று இருவரும் கதவை சாத்திக்கொள்வதும் உண்டு.

அப்போதெல்லாம் அப்பா, சினிமாவில் சம்பந்தில்லாத காட்சிகளின் போது க்ளோஸப்பில்காட்டப்படும் விஜயகுமார் போன்று முகத்தை வைத்துக்கொள்வார். அம்மா புன்முறுவலை பற்களிடையே விழுங்குவார். அப்போது அம்மாவுக்கு கன்னத்தில் குழி விழும். அம்மாவுக்கு இப்போது கன்னத்தில் குழி விழுகிறது. நீங்கள் கன்னத்தில் என்பதைப் படித்தபோது சரியாகக் குழி விழுந்தது. நீங்கள் இப்போது என்பதைப் படிக்கும்போது இருவரும் ஒருவரை ஒருவர் பற்றிக்கொண்டு எழுந்தனர். அவர்கள் பார்வை அறையை நோக்கி இருந்ததா? அல்லது தொடர்ச்சியாகக் கவனித்து வரும் அம்மாவுக்கு அவர்களின் உடல்மொழி பரிச்சயமாகி இருந்ததா? அதை வைத்து அவர்கள் அறைக்குள் செல்லப்போகிறார்கள் என யூகித்து விட்டர்களா? விட்டார்களா என்று நீங்கள் படித்தபோது இருவரும் அறைக்குள் சென்று தாழிட்டனர்.

தாழிட்ட சத்தம் கேட்டு நிமிர்ந்த அப்பா அந்த விஜயகுமார் க்ளோஸப் முகத்தை அவசரமாகக் காட்டினார். அம்மாவுக்கு இடது கன்னத்தில்தான் குழி விழும் என்பது கதையில் விடுபட்டு விட்டது. இந்தக்கதைக்கு இப்போது அம்மா வலது கன்னத்தை காட்டிக்கொண்டு அறையைக் கடந்து செல்லும்போது இடது கன்னத்தில் விழுந்த குழி தெரியவில்லை. அதனால் மீண்டும் கன்னத்தில் குழி விழுந்தது என்றுஎழுத முடியவில்லை. அறையைக் என்பதை நீங்கள் படித்த போதுதான் அம்மா சரியாக அறையைக் கடந்தார். அப்போது சரியாக ‘ஓஹ் காட், யூ ஆர் கில்லிங் மீ பேபி’ என்ற நீலாவின் சத்தம் ஒலித்தது. ஒலித்தது என்பதை நீங்கள் படித்துக்கொண்டு இருக்கும்போது நீலாவின் தங்கை வீட்டுக்குள் நுழைந்து கொண்டே, வீட்டுக்குள்என்பதைப் படிக்கும்போது ‘ ரெண்டும் ரூமுக்குள்ள போய் பதுங்கிக்கிச்சீங்களா’ என்றாள். அப்பா கண்டுகொள்ளாததைப்போல் புன்னகைத்தார்.

இவருக்குத்தான் கன்னத்தில் குழி விழாதே, அதனால் புன்னகைத்தது தெரியவில்லை. அம்மாவுக்கு இப்போது கன்னத்தில் குழி விழுந்தது. ஆம் நீங்கள் புத்திசாலிதான். அம்மா இப்போது கதைக்கு இடது கன்னத்தை காட்டிக்கொண்டு இருந்தார்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

கதை இப்போது ஃப்ரீஸ் ஆகி விட்டது. இனி இந்த நிகழ்கால தொந்தரவுகள் இருக்கப்போவதில்லை. இப்படியாக அட்வான்ஸாக காதலிக்க அனுமதித்து இருந்த குடும்பத்தில் பிறந்த நீலாவின் தங்கையும் காதலிக்காமல் இருந்தால் நியாயமா? அவளுக்கும் ஒரு பாய் ஃபிரண்டு இருந்தான். அவர்களின் காதலின் நீள அகலங்களை விவரிப்பதைவிட, அவர்களின் காதலின் வயது 19 மாதங்கள் என்றால் புத்திசாலி வாசகர்கள் புரிந்துகொள்ளத்தான் போகிறார்கள். இப்போதெல்லாம் காலம் எங்கோ சென்று விட்டதால் வெறும் வெள்ளைப் பேப்பரை எடுத்து கதையின் தலைப்பை மட்டும் எழுதி வைத்து விட்டாலே வாசகர்கள் தங்கள் படைப்பூக்கத்தின் மூலம் கதையை நிரப்பிக்கொள்கிறார்கள். தலைப்பையும் எழுதி வைக்கவில்லையெனில், படைப்பூக்கத்திற்கு இன்னும் கொண்டாட்டம்தான். இதை அந்தப் பிரதியாக வாசித்தேன், இந்தப் பிரதியாக வாசித்தேன் எனக் கூறி கொட்டமடிக்கலாம். இவ்வளவு எல்லாம் வெட்டியாக நீட்டி முழக்கி எழுதுவதே அவர்களின் 19 மாத காதல் என்றவுடன், வாசகர்கள் தங்கள் படைப்பூக்கத்தின் மூலம் நிரப்பிக்கொள்ள நேரம் கொடுக்கத்தான்.

இதேபோல இனி கதை ஒன்றிரண்டு வாக்கியங்கள் மூலம் சொல்லப்பட்டு முடிந்து விடும். அதனால் படைப்பூக்கத்தைக் கூர் தீட்டிக்கொள்ளுங்கள். நீலாவின் வீட்டிற்கு பிரவீன் வந்தபோது நீலா இல்லை. நீலாவின் தங்கை இருந்தாள். கொஞ்ச நேரம் பேசிக்கொண்டு இருந்துவிட்டு பிரவீன் சென்றுவிட்டான். (இந்த டெக்னாலஜி யுகத்தில் நீலாவுக்கு போன் செய்யாமலா பிரவீன் வருவான் என்றெல்லாம் கேட்டால், நீங்கள் ஓல்ட் வாசகர். இந்தத் தர்க்கத்தையெல்லாம் வாசகனின் படைப்பூக்கத்தை நம்பித்தான் விட்டு வைக்கிறோம். ஏன் இப்பிடி ஆச்சி என்று யோசிப்பது ஒரு சிறுகதை அளவுக்கு உள்ளடக்கம் கிடைக்கும். )

ஒருநாள் நீலாவை நீலாவின் வீட்டில் சந்தித்துவிட்டுக் கிளம்பும் போது, நீலாவின் தங்கை, 'தன்னை டிராப் செய்ய முடியுமா' எனக் கேட்டாள். அன்று கார் எடுத்து வராமல் புல்லட் எடுத்து வந்திருந்தான் பிரவீன் (புரியிதா? நிரப்பிக்கொள்வீர்களா?)இன்னொருநாள், அதாவது இந்தக் கதையின் கடைசி நாள், நீலாவின் வீட்டுக்கு பிரவீன் சென்றபோது அப்பா, அம்மா யாரும் இல்லை. நீலாவும் இல்லை. நீலாவின் தங்கை மட்டும் இருந்தாள்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

நிரப்பிக்கொள்ள வசதியாக:- சோஃபாவில், டிவிடி தேடுகையில் உதவியாக நீலாவின் தங்கை, ‘இந்த விண்டோவை கொஞ்சம் மூடணும் ஹெல்ப் பண்றீங்களா?’ இன்னும் இன்னும் சாதாரணமாக இட்டு நிரப்பிக்கொள்ளவும். கடைசியாக ஃப்ரிட்ஜில் இருந்து சில்ல்ட் தண்ணீர் எடுத்துக் குடித்துவிட்டு நிமிரும்போது வெகு அருகில் இருந்த நீலாவின் தங்கை பிரவீன் மேல் பட்டாள்.

பிரவீன் இயல்பாக அவளின் தோளுக்கு கீழான கையை பிடிக்க நீலாவின் தங்கை பிரவீனை அணைத்துக்கொண்டாள். இருவருக்கும் அந்த அணைப்பு தேவையானதாக இருந்தது.

நீண்ட காலம் எதிர்பார்த்த அணைப்பு போல சூட்டுடன் இருக்க அணைத்துக்கொண்டனர். முதலில் முத்தம் கொடுத்தவள் நீலாவின் தங்கை. உதட்டில் முன்னேறியவன் பிரவீன். இறுக்க அணைத்துக்கொண்டு, உதட்டை வேட்டையாடுவது போல கவ்விக்கொண்டு பின்னிப்பிணைந்து இருந்தபோது நீலா உள்ளே வந்து விட்டாள். இவர்களைப் பார்த்தும் விட்டாள். இருவருக்கும் வெலவெலத்துப்போய்விட்டது. கால்களில் சத்து குறைந்து ஒரு வாரம் ஜுரம் கிடந்தவர்கள் போல உடல் வலுவிழந்தது. பிரவீனுக்கு மயக்கம் வந்தது. கட்டுப்படுத்திக்கொண்டான்.

‘ஸாரி அக்கா’ எனத் துவண்டு முன்னேறியவளை, பளாரென்று அறை விட்டாள் நீலா. அழுதுகொண்டே அறைக்கு ஓடி கதவைச் சாத்திக்கொண்டாள் தங்கை. ‘வெளில போடா நாயே, தேவடியாளுக்குப் பொறந்த பன்னிப்பயலே. போடா வெளில’ என் அடிவயறு அதிரக் கத்தினாள் நீலா. அசிங்கப்பட்டுப்போய் மெல்ல வெளியேறினான் பிரவீன். வீட்டைவிட்டு வெளியேறுகையில், அப்பாவும் அம்மாவும் உள்ளே வந்தனர். ‘நுங்கு வாங்கிட்டு வந்திருக்கோம், சாப்பிட்டுட்டுப் போங்க பிரவீன்’ என்றனர். அதைக் காதில் வாங்காமல் துவட்டமாய் காரை எடுத்தான் பிரவீன். அவ்ளோதான், பிரேக் அப். நோ போன்கால், நேரில் சந்திக்க மறுப்பு. எந்த முயற்சியும் கைகூடவில்லை. பிரேக் அப் ஈஸ் பிரேக் அப். எல்லாம் முடிந்து போனது. கொஞ்ச நாட்கள் கழித்து, நீலாவின் தங்கைக்கு போன் அடித்தான். ‘ஸாரி பிரவீன்’ என்றுதான் ஆரம்பித்தாள். ‘நான்தான் அன்னிக்கு உங்களை டெம்ட் பண்ணேன். எனக்கு பாய்ஃபிரண்டு இருந்தாலும், அவனை ரொம்ப லவ் பண்ணாலும், அக்கா ஆளுன்னு உங்க மேல எனக்கு ரொம்ப ரொம்ப

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

கிரேஸ். எவ்ளோ நாளா உங்களையே நினைச்சிட்டு இருந்தேன். அக்கா கூட நீங்க நெருக்கமா இருக்கும்போதெல்லாம், எனக்கும் அவ்ளோ ஆசையா இருக்கும். ஒரு தடவை உங்களைக் கட்டிப்பிடிச்சி முத்தம் குடுத்தா சரியாகிடும்னு நினைச்சேன். ப்ச்... அதுக்குள்ள அக்கா பாத்துட்டா' என்றாள். மீண்டும் 'ஸாரி' என்றாள். நெக்ஸ்ட் வீக் தனக்கும் பாய்ஃபிரண்டுக்கும் நிச்சயதார்த்தம் என்றாள். 'நான் தப்பு பண்ணேன், சரி. என்னை பிரேக் அப் பண்ணிட்டா. நீயும்தானே தப்பு பண்ண? உனக்கு ஒண்ணும் தண்டனை இல்லையா' என்றான் பிரவீன். 'நீதான உன் ஆளு பாக்குற மாதிரி தப்பு பண்ண. நான் என் ஆளு பாக்குற மாதிரியாதப்பு பண்ணேன்?'என்றாள் நீலாவின் தங்கை தீபா!

முற்றும்.

முற்றும் என்பதை நீங்கள் படிக்கும்போது, 'இன்னிக்கி ஈவ்னிங் வீட்டுல எல்லாரும் வெளில போறாங்க, வீட்டுக்கு வர்றியா' என்று தீபா கேட்டது பிரவீனுக்கு கேட்டது.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 17. பிரேக் அப்
## மனுஷ்யபுத்திரன் மெசேஜ் அனுப்பினார்

தீபா எளிதில் காதல் வயப்பட்டுவிடுவாள். இதையே ஒரு பெண்ணைவிட்டு எழுதச்சொன்னேன். தீபாவுக்கு எளிதில் காதல் வயப்படும்படியான மனம் அமைந்திருந்தது என்று எழுதினாள். எழுதியவளைக் கட்டி அணைத்து முத்தமிட்டுவிட்டு, ‘இங்கேயே கூடவே ஒக்காந்திரு, தேவைப்படும்போது அப்பப்ப உன்னை எழுதச்சொல்லுவேன்’ என்றேன்.

ஒரு பெண்ணிய பிரதியாக இதைத் தானே கஷ்டப்பட்டுப் படிப்பதைத் தவிர்க்கும் பொருட்டு இந்த ஏற்பாடு. தீபாவுக்கு இந்த விஷயம் நன்கு தெரிந்து புரிந்து இருந்தது. இதைப்பற்றி அவள் பெருமையோ சிறுமையோ அடையவில்லை. இதை அந்தப்பெண்ணைவிட்டு எழுதச்சொல்லலாம் என்றால், அவளோ என் காது மடல்களை மென்மையாக முத்தமிட்டுக்கொண்டு இருந்தாள். தீபாவிற்கு யாரேனும் காது மடல்களில் முத்தமிட்டால் கூச்சம் தாங்காது. எங்கு வாகாக மாட்டுகிறதோ அங்கே நங்கென்று குத்தி விடுவாள். இந்தப் பெண் என் காது மடல்களைச் சுவைப்பது சுத்தமாக எனக்குச் சுரணையே இல்லை, கதை எழுதிக்கொண்டு இருப்பதால் அதில் மட்டுமே சுரணை. என்னதான் அராத்து கதை என்றாலும், காது மடல் என்றே பயந்து பம்மி குறிப்பிட வேண்டியதாகி விட்டது பாருங்கள். காது மடலை யாராவது சுவைப்பார்களா? ஆனால் தீபா சுவைப்பாள். தீபாவுக்குச் சின்ன வயதில் இருந்தே பலர் மேல் காதல் வந்திருக்கிறது. முத்தத்தோடு சிலரிடம், கட்டி அணைத்தலோடு சிலரிடம் எனச் சில காலங்கள் ஓடியிருக்கின்றன. 11ம் வகுப்பு படிக்கும்போது முதன்முதலாக ஓரல் செக்ஸில் ஈடுபட்டாள் தீபா.

இதோ இந்தப்பெண் எழுந்து விட்டாள். 11ம் வகுப்பு படிக்கும்போது முதன்முதலாக தீபாவுக்கு ஓரல் செக்ஸ் வாய்த்தது என்பதாக

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

எழுதுகிறாள் இந்தப் பெண். இவள் என்ன எழுதுவது, நானே பெண்ணைப்போல எழுதுகிறேன் பாருங்கள். மற்ற பெண்களெல்லாம், 'ஓரல் செக்ஸா... உவ்வே' என்பதாக ஆண்குறியைப் பார்த்து நடித்துக்கொண்டு, தன் யோனியை மட்டும் சுவைக்கக்கொடுத்து சிற்றின்ப வெள்ளத்தில் கால்களை ஆட்டிக்கொண்டு நீந்துவார்கள். தீபா அப்படியெல்லாம் இல்லை, ஆண்குறியை முழுமையாக விரும்பி ரசனையாக ஓரல் செக்ஸில் ஈடுபட்டாள். அவளின் ரசனையைத் தூண்டும் விதத்தில் அந்த ஆண்குறியும் பராமரிக்கப்பட்டு சுத்தமாகவும் சுவையாகவும் இருந்தது. சென்ற வாக்கியத்தைப் படித்துவிட்டு, 'ஆணாதிக்கம் எட்டிப்பார்க்கிறது' என்று அந்தப் பெண் சொன்னாள். 'சுவையாக இருந்தது என்று ஆண் மனம் எழுதுமா? ஒரு பெண்ணாகவே மாறித்தான் எழுதினேன்' என்றேன். 'போடா' என்றபடி என் மடியில் படுத்துக்கொண்டாள்.

கல்லூரி செல்லும் வரை இந்தக் காதல்கள் தீபாவுக்குப் பிரச்சினையாக இருக்கவில்லை. அனைவரையும் தீவிரமாகக் காதலித்தாள். உருகினாள். ஒரே சமயத்தில் 3 நபர்களை அதே தீவிரத்துடன் தீபாவால் காதலிக்க முடிந்தது. கல்லூரியில்தான் முதன்முதல் பிரச்சினை கிளம்பியது. இன்னொருவனுடன் காதலுடன் கசிந்துருகி இருக்கையில் பார்த்துவிட்ட காதலன், என்னென்னவோ பிரச்சினை செய்துவிட்டான். அடிதடி வரை போய் விட்டது. அசிங்கப்படுத்தினான். கல்லூரி முழுக்க பெயர் கெட்டுப்போனது. இந்தக் களேபரத்தால் கல்லூரியில் ஏற்பட்ட இரண்டு காதலுமே பிரேக் அப் ஆனது.

ஆண்களின் மனதை அப்போதுதான் புரிந்து கொள்ளத் தொடங்கினாள் தீபா! எவ்வளவு கேடுகெட்டவர்கள்இந்த ஆண்கள் என தீபா புரிந்து கொண்டாள் என்பதாக இந்தப் பெண் நடுவில் புகுந்து எழுதுகிறாள். கல்லூரி முடிக்கும்வரை கல்லூரியில் யார் மீது காதல் வந்தாலும் அடக்கிக்கொண்டாள். பெண்களுக்கு காதலை அடக்கிக்கொள்வது ஆண்களைவிட சிரமம். அப்படியும் சிரமம் பார்க்காது அடக்கிக்கொண்டாள். இந்தச் சமயங்களில் கல்லூரிக்கு வெளியே மட்டும் தன் காதலை மென்மையாகத் தொடர்ந்தாள். கல்லூரி முடித்து வேலைக்குச் சேர்ந்தது, ஊர் மாறியது எல்லாம் புதுப்புது அனுபவங்களை தீபாவுக்கு வழங்கின. தீபா புதுப்புது அனுபவங்களை தேடித் தேடிப் பெற்றாள் என்பதாக இந்தப் பெண்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

எழுதுகிறாள். இடைப்பட்ட காலத்தில் தீபா எழுதிய கவிதைகள் ஓரளவுக்குக் கவனம் பெற்றன. மனுஷ்யபுத்திரன் கூட, ‘உங்க கவிதைகள் தனித்தன்மை மிக்கவையாக இருக்கின்றன’ என தீபாவுக்கு இன்பாக்ஸில் மெசேஜ் அனுப்பினார். கூடவே ஒரு ஹாட்டின் எமோஜியையும் சேர்த்து அனுப்பி இருந்தார். அவர் தந்திரமாக எல்லோருக்கும் இந்த எமோஜியை அனுப்பி வைப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். நிறைய போராளிகளும், இலக்கியச் செயற்பாட்டு விமர்சகர்களும், சில கோட்பாட்டுச் சிந்தனையாளர்களும் தீபாவுக்குப் பழக வாய்த்தார்கள். தீபாவின் கவிதைகளை இன்னும் கூர் தீட்ட வேண்டும் என்பதாக ஆலோசனை கூறினார்கள். இவர்களுடன் பழகுவது, இவர்களைக் காதலிப்பது தீபாவுக்குச் சுலபமாக இருந்தது. இவர்கள் தீபாவைப் புரிந்து கொண்டார்கள். எளிதில் காதல் வயப்படுதல் என்ற தலைப்பில் தீபா எழுதிய கவிதை வேகமாகப் பிரபலமடைந்தது.

தாவணிக் கவிதைகள் என்ற தலைப்பிட்ட கட்டுரையில் ஜெயமோகன் தீபாவைச் சாடினார். கரோலின் கிஸரின் பர்ஃப்யூம் வாடை இந்தக் கவிதையில் அடிப்பதாக சாரு எழுதினார். தீபா என்று பெயரிடப்பட்ட படத்தில் இருந்து விலகிக்கொண்டார் எஸ். ரா. எவ்வளவு தீவிரமான காதலில் இருந்தாலும், எந்தத் தீவிரமான கணத்திலும், தான் இன்னும் பலரையும் இதே போலத் தீவிரமாகக் காதலிப்பதாக வலியனாகச் சொல்லிவிடுவாள் தீபா. அதனால் என்ன? நீ இப்படி வெளிப்படையாக இருப்பதுதான் உன்னைக் காதலிக்க வைக்கிறது என்று அதே தீவிரத்துடன் திரும்பச் சொன்னார்கள், பழக வாய்த்த இலக்கியத் தோழர்கள். ஒரே நேரத்தில் ரெண்டு மூன்று பேர் வந்து விட்டாலும், விட்டுக்கொடுத்து ஒற்றுமையாகக் காதலித்தார்கள். நல்ல அண்டர்ஸ்டேண்டிங் ஆன ஆட்கள் வந்தால் ஒரே நேரத்தில் இருவர் காதலித்தார்கள் தீபாவை. தீபாவாலும் ஒரே நேரத்தில் இருவருக்கும் காதலைக் குறையாமல் கொடுக்க முடிந்தது. இங்கே பகிர்ந்தளிக்க முடிந்தது என்ற வார்த்தை கவனமாகத் தவிர்க்கப்பட்டிருப்பதை நீங்கள் கவனித்து இருக்கக்கூடும். பகிர்ந்து அளிக்கத் தேவையேயில்லை. அவரவருக்கான காதலை அவரவருக்குக் குறையாமல் ஒரே நேரத்தில் கொடுத்தாள் தீபா. அதனால் அந்த வார்த்தை தவிர்க்கப்பட்டது. அது மட்டுமல்லாமல் நீண்ட கால இலக்கிய வாசகர் எனில், இரண்டு முலைகளை ஒருவருக்கு ஒன்று என்ற வீதம் பகிர்ந்து கொடுத்தாள் எனப் புரிந்து கொள்ளும்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

அபாயமும் உள்ளது. இத்தனை பேர் தீபாவை காதலித்தாலும், தீபாவுக்கு யாரும் செலவு செய்யவில்லை. தீபாவை யாரும் கேரிங்காகப் பார்த்துக்கொள்ளவில்லை, காதலும் காமமும் முடிந்ததும் அனைவரும் பொண்டாட்டியைத் தேடியோ, காதலியைத் தேடியோ கிளம்பிச்சென்றனர். தீபாவின் பணம்தான் இவர்களுக்காகச் செலவானது என்பதாக எழுதச் சொல்கிறாள் இந்தப்பெண். இது கதைக்குத் தேவையில்லை மற்றும் இது படிக்கும் அனைத்து ஆண்களுக்கும் தானாகவே தெரியும் என்பதால் எழுத விருப்பம் இல்லாவிடினும், பெண் சொல்வதால் எழுதி விட்டேன்.

நாளை தீபாவளி என்றால், இன்று இரவு தீபா தனித்து விடப்பட்டாள். தனியாக சோகமாக உணர்ந்தாள். காதல் வற்றிப்போயிருந்தது. கவிதையும் ஏதும் தோன்றவில்லை. பட்டாசு சத்தத்தால்தான் கவிதை தோன்றவில்லை என்று சமாதானப்படுத்திக்கொண்டாள். தீபாவுக்கு திடீரெனத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆசை எழுந்தது. மொபைலை எடுத்தாள். முதன்முதலாக மேட்ரிமோனி சைட்டில் தன் ப்ரொஃபைலைப் பதிவு செய்தாள். ‘தோ பாரு, பர்ஸனல் எல்லாம் எழுதக்கூடாது’ என்று சொல்கிறாள் உதட்டில் இருந்து உதட்டை எடுத்துக்கொண்டே, இந்தப் பெண்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 18. பிரேக் அப்

### அம்மணம்

சுரேந்தர் சின்ன வயதில் இருந்தே சுட்டி. உடன்எப்போதும் தோழர்கள் பட்டாளம் நிறைந்து காணப்படுவான். ஆன்மீக உபன்யாசம் செய்தாலா தோழர்கள் குழாம் சுத்தி நிற்கும்? செக்ஸ் ஜோக் சொல்லிக்கொண்டே இருப்பான். புத்தகங்களில் படித்தது மட்டுமல்லாமல் இட்டுக்கட்டியும் சொல்லும் திறன் காலப்போக்கில் கைவரப் பெற்றிருந்தது. செக்ஸ் ஜோக் அலுக்க ஆரம்பிக்கையில் அக்கம்பக்கத்து வீடுகளில் இருப்பவர்களைப் பற்றி செக்ஸியாக கமெண்ட் அடிக்க ஆரம்பித்து, தோழர்கள் குழாமில் கிக் ஏற்றினான்.

பள்ளிக் காலத்தில் இவனது ஏக திறமையை அறிந்த ஆங்கில ஆசிரியர், ‘டேய் சுரேந்தர் ஏதோ ஜோக்கெல்லாம் செமையா சொல்றியாமே? சொல்லு பாப்போம்’ என்றார். சில செக்ஸி ஜோக்குகளைச் சொன்னான். ஆசிரியர் சிரிப்பை அடக்கிகொண்டு இருந்தார். மாணவர்கள் சிரித்த வண்ணம் இருந்தனர். வகுப்பறையைத் தாண்டிச் சென்ற ஆசிரியை, ‘என்ன சார் ஒரே சிரிப்பு?’ என்று கேட்டுக்கொண்டே கடந்து செல்ல, சிரிப்பு இன்னும் அதிகமாகியது. ஆசிரியர் வகுப்பறையைவிட்டு வெளியே சென்றதும், ‘நைட்டு இந்த ஜோக்கையெல்லாம் இவரோட பொண்டாட்டி கிட்ட சொல்லுவாருடா! சொல்லிட்டு பொண்டாட்டி மேல ஏறிப் படுத்து தூங்கிடுவாரு’ எனச் சொல்ல வகுப்பே கொல்லென்று மரண டெசிபலில் சிரித்தது. ‘அப்புறம் என்னடா ஆகும்’னு ஒரு மாணவன் கேட்க, ‘பொரண்டு படுத்து ஒன்னுக்கு வுட போயிடுவாரு’ எனச் சொல்ல, சிரிப்புச் சத்தம் உச்சத்தைத் தொட்டது. சிரிப்புச் சத்தத்தைக் கேட்ட ஆசிரியருக்கு, ‘அடடா இந்த மாபெரும் ஜோக்கைக் கேட்காமல் வந்து விட்டோமே’ என வருத்தம் ஏற்பட்டது.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

இப்படியே டெவலப் ஆகி, இதுவும் அலுக்கையில் தெருவில் போவோர் வருவோரையெல்லாம் செக்ஸியாக கமெண்ட் அடிக்க ஆரம்பித்தான். அவர்களை வைத்து இன்ஸ்டன்டாக ஒரு கதை பின்னிச் சொல்ல ஆரம்பித்தான். காலேஜிலும் சுரேந்தர் கொடி படர்ந்து பறந்தது. வேலைக்குச் சேர்ந்த புதிதில் தொழிலில் புது நுட்பம் பாய்ச்ச வேண்டிய கட்டாயம். பழைய சரக்கையெல்லாம் அள்ளிவிட்டு அலுவலகத்திலும் கொடி நாட்டி விட்டான் என்றாலும், புது நுட்பம் தேவைப்பட்டது. அப்போதுதான் இந்த அஸ்திரத்தைக் கையில் எடுத்தான். ஏதேனும் ஒரு பெண் முழுக்க உடையணிந்து சீரியஸாக ஒரு வேலையைச் செய்துகொண்டு இருக்கையில், ‘டேய் அப்படியே இவளை டிரஸ் இல்லாம நினைச்சிப்பாரேன், காமடியா இல்ல?’ என்று ஆரம்பித்து வைத்தான்.

ஒரு பெண் ஸ்டைலாக நிற்கையில் அம்மணமாக நினைத்துப்பார்த்துச் சிரிப்பது, வேலைக்காக ஸ்டலாக வேகமாக நடக்கும் பெண்ணை அம்மணமாக நினைத்துப்பார்த்துச் சிரிப்பது, வித்தியாசமான உடல்மொழியுடன் விளக்கிக்கொண்டு இருக்கும் பெண், மேஜையில் கை வைத்துச் சாய்ந்து நிற்கும் பெண், செமினார் எடுக்கும் பெண், சீட்டில் அமர்ந்து சுற்றிச் சுழன்று வேலை பார்த்துக்கொண்டு இருக்கும் பெண், இடுப்பில் கை வைத்துக்கொண்டு பேசும் பெண் என அனைவரும் சுரேந்தர் அண்ட் கோவின் நிர்வாண மனக்கற்பனைக்கு ஆளாகி ஏக சிரிப்புக்கும் காரணமானார்கள்.

இது அப்படியே நீண்டு கொண்டே போய், பேங்க் கேஷியர் பெண், பைக்கில் பின்னால் அமர்ந்து செல்லும் பெண், இடுப்பை ஒயிலாக ஒடித்து ஸ்டைலாக ஸ்கூட்டி ஓட்டிக்கொண்டு செல்லும் பெண், கால் மாற்றி மாற்றிப் பேருந்துக்கு நிற்கும் பெண் என விரிந்து போனது. அம்மணமாக நினைத்துச் சிரித்தார்கள் என்று பொத்தாம் பொதுவாகச் சிரித்தார்கள் என்று கதையில் சொல்லிவிட்டோமே தவிர, இன்னும் டீட்டெயிலாகப் பேசினார்கள். உதாரணத்திற்கு ஒரு பக்கம் புட்டம் மட்டும் கோச்சிகிட்டு திரும்பிகிச்சி பாரு, தொப்பை யோனியை மறைச்சிகிட்டு தொங்கும் இல்ல?, பிரா பறந்தா முலை தொடை வரைக்கும் தொங்கும்டா, முலைங்க ரெண்டும் ஒண்ணோட ஒண்ணு கோச்சிகிட்டு, ரெண்டு ரெண்டு பக்கம் மூஞ்சை திருப்பிக்கிச்சி பாரு, இவளுக்கு இருக்கும் சதைக்கு முதுகிலும் முலை இருக்கும் மச்சி என்றெல்லாம் பேசி வெடிச் சிரிப்பு சிரித்தார்கள்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

இதுவும் பற்றாமல், ஒரு கட்டத்தில் ஆண்களையும் விளையாட்டில் சேர்த்துக்கொண்டார்கள். தனியாக ஆண்களை சேர்ப்பது சுவாரசியமாக இல்லையோ, என்ன எழவோ தெரியவில்லை. ஆணும் பெண்ணும் சீரியஸாகப் பேசிக்கொண்டு இருக்கையிலோ, ஒன்றாக நடந்து செல்கையிலோ, இப்படி நிர்வாணமாக நினைத்துப் பார்த்துச் சிரித்தார்கள். 'அவர் குஞ்சி மூஞ்சி எங்கடா பாத்துகிட்டு இருக்கும்? ஐயா எவ்ளோ சீரியஸா முகத்தைவச்சி பேசிட்டு இருக்காரு பாரு, ஐயா மொலைக்கும் அம்மா முலைக்கும் முடிச்சி போட்டு விட்டுடலாம் மாப்ள.' சீனியர் மேனேஜர் இருவர் பேசிக்கொண்டு இருக்கும்போது, 'இதுங்க ரெண்டுக்கும் நாய் மாதிரி மாட்டிகிட்ட மாதிரி யோசிச்சி பாரேன் மச்சி. இந்தாளுக்கு எரக்ட் ஆச்சின்னா, ஸ்டேண்ட் மாதிரி இவரு தொப்பையை தாங்கிட்டு இருக்கும் இல்ல மச்சி?' இப்படியாக வெளுத்து வாங்கினார்கள்.

ஒரு கட்டத்தில் மொத்தக் கூட்டத்தையுமே, அம்மணமாக நினைத்துச் சிரித்தார்கள். ஏதேனும் அரசியல் தலைவர் மேடையில் வீராவேசமாக முழங்குகையில் அவரையும் மேடையில் அமர்ந்திருக்கும் அனைவரையும் கீழே இருக்கும் மொத்த கூட்டத்தையும் அம்மணமாக நினைத்துப்பார்த்து கமெண்ட் அடித்து உருண்டு பிரண்டு சிரித்து வயிற்று வலி கண்டார்கள். நண்பர்களெல்லாம் இந்தப் பழக்கத்தை சுரேந்தரோடு இருக்கும்போது மட்டும் பிராக்டீஸ் செய்து விட்டு மற்ற நேரங்களில் மறந்து விடுகையில், சுரேந்தர் மனைவியிடமும் இதைச் சொல்லி சொல்லிச் சிரித்தான். முதலில் கொஞ்சம் ஜோக்காக எடுத்துக்கொண்ட தீபா, தொடர்ந்து இப்படிச் செய்யவும் துணுக்குற்றாள். 'உன்னை பொண்ணு பாக்க வந்தப்பவே உன்னை அப்படி பாத்துதான் செலக்ட் செஞ்சேன்' என்றதும் எரிச்சலாக ஆனது தீபாவுக்கு. 'அதிலும் உன்னை ரெண்டு ஆன்ட்டிங்க பாந்தமா பவ்யமா கூட்டிட்டு வந்தாங்களே, செம காமடி' என்றதும் வெறுப்பின் உச்சத்துக்கே போனாள் தீபா!

'உங்க அம்மா, தங்கச்சியையெல்லாம் எப்படிடா பாப்ப' என்று கேட்க வந்து விட்டாள். அவனுக்கும் தனக்கும் அப்புறம் என்ன வித்தியாசம் என நினைத்து அடக்கிக்கொண்டாள். சுரேந்தரின் செய்கைகள் உச்சத்துக்குப் போகவே, பிரிந்துவிட முடிவு செய்தாள். ஒரு பெண் வக்கீலைப் பார்த்தாள். இது விவாகரத்து செய்யும் அளவுக்கு பெரிய விஷயம் இல்லையே என விழி உயர்த்தி யோசித்த வக்கீல், இது சைக்காலஜிக்கல் பிராப்ளம், டாக்டரை கன்ஸல்ட் செய்வதுதான்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

புத்திசாலித்தனம் என்றாள். 'நான் மனசளவில் அவனைப் பிரிஞ்சிட்டேன் மேடம், இனி அவன் கூட வாழவே முடியாது, லீகலா பிரிஞ்சிடறேன்' என உறுதி காட்டினாள் தீபா. 'இவ்ளோ அவசரப் பட வேணாம், ஒரு தடவை அவரை என் கிட்ட கூட்டிட்டு வாங்க, நான் பேசிப்பாக்கறேன்' என லாயர் சொன்னதும், 'நீங்க வேற மேடம், உங்களையும் அம்மணமா பாத்து வீட்டுக்கு வந்ததும் கமெண்ட் அடிப்பான்' என்றாள். வக்கீல் திடுக்கிட்டார். 'ஒரு ஆம்பளை சைக்ரியாட்டிஸ்ட் கிட்ட முதல்ல கூட்டிட்டு போங்க. அதுக்கு அப்பறமும் சரி வரலைன்னா டிவேர்ஸ் பண்ணிடலாம்' என்று சொல்லி தீபாவை அனுப்பி வைத்தாள் வக்கீல்.

சுரேந்தருக்கு பிறந்தநாள் வந்தது. பீச் ஓரமாக ஒரு பங்களா எடுத்துக் குழுமி இருந்தனர். சுரேந்தரின் நெருங்கிய நண்பர்கள் மனைவிகளோடு வந்திருந்தனர். கேக் வெட்டி முடித்து மிதமான போதையில் நடனம் ஆரம்பம் ஆகியது. தீபா சாதாரணமாகத் தன் உடைகளைக் களைந்து அம்மணமானாள். அம்மணமாக நளினமாக நடனமாட ஆரம்பித்தாள். 'இவங்க எல்லாரும், நாம டிரஸ் போட்டிருந்தாலும் அம்மணமா நினைச்சிப் பாத்துதான் காமடி பண்ணி சிரிப்பாங்களாம். ஏன் அவங்களுக்கு சிரமம்? நீங்களும் அவுத்துப்போட்டு ஆடுங்க' என்றாள் மற்ற மனைவியரை நோக்கி. பேசி வைத்துக்கொண்டது போல, உடனே அனைவரும் உடைகளைக் களைந்து அம்மணமாக, ரசித்து ஆடத் தொடங்கினர். குஞ்சிக்கு நடுவே ஷாக் அடித்தது போல ஆனது நண்பர்களுக்கு. சிலருக்கு சில சொட்டு சிறுநீரே தெறித்து விட்டது.

நடுவாந்திரமான போதையில் இருந்த சுரேந்தர், 'மச்சி இவங்களுக்கு எல்லாம் பேண்டி போட்ட மாதிரி நினைச்சி பாருங்களேன். செம காமடியா இருக்கும்' என்று சுரத்தே இல்லாமல் சொன்னான். நண்பர்கள் யாரும் சிரிக்கவில்லை. அனைவரும் பேண்டியை எடுத்துப் போட்டுக்கொள்ள ஆரம்பித்தனர்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 19. பிரேக் அப்
## நிச்சயதார்த்தம்

பெரும்பாலான காதல்கள் நிச்சயதார்த்தம் நெருங்கும் வேளையில் பிரேக் அப் ஆகி விடுகின்றன. இந்த கதையில் வரப்போகும் காதலும் நிச்சயதார்த்தப் பேச்சு வார்த்தை இரு வீட்டிலும் ஆரம்பித்த இரண்டு வாரங்களுக்குள் பிரேக் அப் ஆகப்போகிறது. அப்படி பிரேக் அப் ஆகாமல் இருப்பது இந்தக் கதையின் கையில் இல்லை. இரண்டு வருடங்கள் பழகி உணர்வும் உயிருமாய் கலந்து, அதாங்க மேட்டர் பண்ணி, கொழுந்துவிட்டு வளர்த்த காதல் பிரேக் அப் ஆக என்ன காரணம் தான் இருக்க முடியும்?கதை ஆசிரியர் சாடிஸ்ட் என்பது நீங்கள் நினைக்கக்க்கூடிய காரணங்களில் நியாயமானதாக இருக்கக்கூடும். கதையின் தலைப்பையே பிரேக் அப் என வைத்து எழுதினால், 80 வயது கிழவன் கிழவிக்குக் கூட பிரேக் அப்தானே ஆகும் என்றும் நீங்கள் நினைப்பதும் நியாயம்தான். ஆனால் பிரேக் அப் என்று தலைப்பு வைத்து எழுதும் கதையிலும் பிரேக் அப் ஆகாமல் நீடித்து நிலைப்பது அந்த கதாபாத்திரங்களின் காதலின் வலிமையில்தான் இருக்கிறது. புரியவில்லையா? வாருங்கள் கதையைப் பார்ப்போம்.

ப்ச்... நீங்களோ நானோ நினைத்தது போல அல்ல, நிச்சயதார்த்தப் பேச்சு ஆரம்பிப்பதற்கு முன்பே பிரேக் அப் ஆகி விட்டது. நமக்குள் நடந்த உரசல் உரையாடல்கள் எல்லாம் வேஸ்ட். ‘ஏண்டா?’ என்று கதையின் நாயகன் ஹேமந்த்திடம் கேட்டேன். ‘அவளுக்கு வேற லிங்க் இருக்கு ப்ரோ’ என்றான்.

‘ஓ’ என்று சொல்லிவிட்டு அவன் சொல்வதற்காகக் காத்திருந்தேன்.

‘இன்னொருத்தன் கூட இல்ல ப்ரோ, இன்னொருத்தி கூட’ என்றான். அவனே தொடர்ந்து, ‘அவ லெஸ்பியன் ப்ரோ, என்கிட்ட மறைச்சிட்டா’ என்றான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

‘ஸோ, பிரேக் அப் பண்ணிட்டியா’ என்றேன். ‘இல்ல ப்ரோ, ஏண்டி என்கிட்ட நீ லெஸ்பியன்னு சொல்லாம மறைச்சேன்னு கேட்டேன். அவ பிரேக் அப் குடுத்துட்டா.’

‘அப்படியா?

‘உனக்கு ஒரு மண்ணும் புரியாது, போடான்னுட்டா!’

‘ப்ரோ, அவ லெஸ்பியன் இல்ல ப்ரோ, அவ பை செக்ஸுவல் ப்ரோ, அது தெரியாம நீங்க பேசினதும்தான் கடுப்பாயிட்டான்னு நினைக்கிறேன்’ என்றேன்.

‘அடப்போங்க ப்ரோ, அவ பை செக்ஸ் கூட இல்ல ப்ரோ, எனக்கு முன்னமே இன்னொரு டிரான்ஸ்ஜெண்டர் கூட லிங்க் ப்ரோ, அவ டிரை செக்ஸ் ப்ரோ’ என்றான்.

‘ம்ம்... என் கிட்ட இவ்ளோ வெளக்கமா பேசு, அவகிட்ட மொக்கையா, லெஸ்பியன்னு சொல்லு’ என மனதிற்குள் நினைத்துக்கொண்டேன்.

எதற்கும் கதையின் நாயகி தீபாவையும் கேட்டு விடலாம் என்று போனேன்.

‘ஏன் தீபா பிரேக் அப் குடுத்துட்ட?’

‘இதையெல்லாம் கதையில எழுதுவியா?’

‘ச்சே சே... அதெல்லாம் எழுதமாட்டேன்.’

‘நம்பறேன், இங்க இப்பிடி பக்கத்துல வா.’

‘ஸாரி தீபா, ஒரு வரி மட்டும் எழுதிட்டேன்.’

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 20. பிரேக் அப்

## கோவைப்பழம்

தீபா புதிதாகத் தொடங்கப்பட்ட தொலைக்காட்சியில் நிகழ்ச்சி தொகுப்பாளினி. ஏற்கெனவே வேலை பார்த்த தொலைக்காட்சியில், டெக்னிக்கல் சைடில் வேலை பார்த்த ரூபன் நூல்விட்டு நூல்விட்டு, பலகீனமான ஒரு தருணத்தில் ரூபனின் காதலை ஏற்றுக்கொண்டாள்.

வாங்க போங்கவில் இருந்து வா போ மாறுவதற்கே ரூபன் தடுமாறினான். வா போ வில் இருந்து வாடி போடி வருவதற்குள், 18 முறையாவது இந்தக் காதலை ஏற்றுக்கொண்டது தப்போ என தீபா எண்ணியிருப்பாள். தீபாவின் அடங்க மறுக்கும் அத்துமீறத்துடிக்கும் அந்த இரண்டு உறுப்புக்களின் மீது இரண்டு கண் ரூபனுக்கு.

கண் மட்டும்தான் இதுவரையில் பரவசப்பட்டிருக்கிறது. கண் என்பது கூடத் தவறான அர்த்தத்தைக் கொடுக்கிறது, பார்வை மட்டும்தான் என்பதே சரி. டைட்டாக அழகாக கிக்காக தீபா டி ஷர்ட் போடுவாள். அந்த டைட்டான டி ஷர்டிலும் சில சமயங்களில் ஷார்டாக போடுவாள். அப்போது, அவ்வப்போது மேலே பயணிக்கும் டி ஷர்ட்டால், லேசான கீழ் வயிற்று தரிசனம் கிடைக்கும். குழைந்து கிடக்கும் வயிற்றிலும், சுழற்றிப் பிழியும் தொப்புளிலும் சொக்கிப்போவான் ரூபன்.

அதே போல ஸ்கின்ட் ஜீன்ஸ் போடுகையில், வெளிப்படும் அவளின் வளைவுகள் ஆங்காங்கே நின்று பேசும். இதையெல்லாம் விலாவாரியாக எழுதுவது படிப்பவர்களுக்கு கிக் ஏற்ற அல்ல. இதையெல்லாம் பார்த்துதான் ரூபன் தீபாவிடம் காதல் வசப்பட்டான் என்று நிறுவுவதற்கே.

காதலிக்க இப்போதெல்லாம் வல்லிய காரணம் சொன்னால்தானே வாசகர்கள் ஏற்றுக்கொள்கிறார்கள்? இதைவிட இன்னொரு

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

முக்கியமான விஷயம் தீபா கற்பனைக் கதாபாத்திரம் அல்ல. இதே சென்னையில், சொல்லப்பட்ட நளினமான உடைகளோடு வளைவு நெளிவுகளோடு வளைவு நெளிவுகளில் பயணித்துக்கொண்டுதான் இருக்கிறாள். உங்கள் கண்களில் தீபா படாததற்குக் காரணம் உங்களின் பொறுப்பற்ற தன்மைதான்.

தீபாவின் மார்பகங்கள், வயிறு, பின்னழகு, தொப்புள் எல்லாம் கற்பனையாக எழுதப்பட்டது அல்ல. ரூபன் ஏன் காதலித்தான் என்று வாசகர்களுக்கு உண்மையாகச் சொல்ல வேண்டி, நாட்கள் செலவழித்து, தீபாவை நேரில் ரசித்து ரசித்து எழுதப்பட்டது. அதற்காக அடுத்தவன் காதலியை இப்படி ரசிக்கலாமா என்று அம்மிக்கல்லைத் தூக்கிக்கொண்டு ஓடிவராதீர்கள். ரூபனாக மாறி ரசித்து, ரூபனுக்காகக் காதலித்து, உங்களுக்காக எழுதியது. குறுங்கதைகள் எழுதுவது சாதாரணம் என்று எண்ணி விடாதீர்கள்.

எதையெல்லாம் பார்த்து ரூபன் காதலித்தானோ, அதையெல்லாம் தொடக்கூட முடியாமல் தடுமாறிக்கொண்டு இருந்தான். வாடி போடிக்கே தடுமாறுபவன், மார்பகத்தை எங்கே கைப்பற்றுவது? உள்ளங்கையைப் பற்றியதற்கே வியர்த்தோ வியர்க்காமலோ எங்கெங்கோ ஊற்றி விட்டது.

இதைப்போன்ற ஆட்களுக்குத்தான் எக்குத்தப்பாக ஒரு ஃபிரண்டு மாட்டுவானே... மாட்டினான். நண்பனுக்கு 18 ஆயிரம் ஃபாலோயர்ஸ் ஃபேஸ்புக்கில். நண்பனை குரு குரு என்றுதான் அழைப்பான் ரூபன். தீபாவை சனிக்கிழமை மாலை ரூபன் அறைக்கு அழைத்துச் செல்ல வேண்டியது. இருவரும் நன்கு குடிக்க வேண்டியது. குடித்தால் தயக்கம் போய் விடுமா, அதற்குப் பிறகு மஜா மஜா மஜாதான்.

சனிக்கிழமை ஒரு வளரும் இளம் இசையமைப்பாளரைப் பேட்டி எடுத்துவிட்டுத் தாமதமாக வந்த தீபாவை, விஷயத்தைச் சொல்லியே அறைக்கு அழைத்தான் ரூபன். காதலன் கூப்பிட்டுப் போகாமல் இருக்க முடியுமா? ரூபனின் அறைக்கு இருவரும் சென்றனர். ரூபனின் அறை இரண்டாவது தளத்தில் இருந்தது. இதுவரை ரூபனைப் பற்றிப் படித்தவர்கள், ரூபன் லிஃப்ட் இல்லாத நடுவாந்திரக் குடியிருப்பில்தான் அறை எடுத்திருக்க வேண்டும் என்பதை யூகித்து இருப்பீர்கள். அதே அதே!

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

வளைந்து நெளிந்து ஏறும் மாடிப்படிக்கட்டுகளில், தீபா முன்னே ஏற, ரூபன் பின்னே. அதே அதே! வாய் வழியேவெளி வந்து விழுந்த இதயத்தை, திரும்பக் கைகளால் பிடித்து வாய்க்குள் போட்டு முழுங்கியபடியே படி ஏறினான் ரூபன்.

அறைக்குள் வந்து ரிலாக்ஸ்டாக இருந்தாள் தீபா. தரையில் கால் நீட்டி அமர்ந்தது கூடக் கவர்ச்சியாக இருந்தது. ரூபன் ரோபோ போல வோட்கா கலந்து கொடுத்தான். தானும் குடித்தான். இரண்டு ரவுண்ட் சென்ற பிறகு உண்மையிலேயே கொஞ்சம் தெம்பு வந்தது போல இருந்தது. தீபாவுக்கு அருகில் நெருக்கமாக அமர்ந்து கொண்டான். அவளது கையை எடுத்து தன் மடியில் வைத்துக்கொண்டான். அவளது தலையை கோதி விட்டான். தலையை தன் மீது சாய்த்துக்கொண்டான். அப்படியே தலையும் கன்னமும் சேரும் இடத்தில் முத்தம் கொடுத்தான்.

தீபா அன்று பேட்டி எடுக்கப்போன இளம் இசையமைப்பாளரைப்பற்றிப் பேசத் தொடங்கினாள். பேசிக்கொண்டே இருந்தாள். கண்கள் விரிய விரிய அவனைப்பற்றி, அவன் உடைகளைப்பற்றி, அவன் மேனரிசம் பற்றி, அவனது புத்திசாலித்தனம் பற்றி... பேச்சு பேச்சு பேச்சு.

முதலில் சாதாரணமாக எடுத்துக்கொண்ட ரூபன், துணுக்குற ஆரம்பித்தான். சரி, இப்போது நிறுத்தி விடுவாள் என்ற தருணம் வருகையில், வேறு ஒரு கதை அவனைப்பற்றி ஆரம்பித்தாள். அவன் இவளது கல்லூரித் தோழன் என்றும் திடீரென்று கூறி விட்டாள்.

‘ஓ முன்னமே தெரியுமா?’ என்று முணுமுணுத்துக்கொண்டே, இன்னொரு ரவுண்ட் ஊற்றிக்கொடுத்தான்.

தீபாவுக்கு போதையில் ஃபீல் நன்றாக இருந்தது. அந்த இசைப்பாளனுடனான தன் கல்லூரி வாழ்க்கை, அவனது பராக்கிரமங்கள் எனப் பேச ஆரம்பித்தாள். அவனைப்பற்றி அவ்வளவு ஆர்வமாகப் பேசினாள். ரூபன் சந்தேகப்பட்டு இன்னும் கொஞ்சம் ஊற்றிக்கொடுத்து, ஏற்றி விட்டான். அந்த இசையமைப்பாளனுடனான உடலுறவு பற்றி ஏதேனும் சொல்கிறாளா எனப் பார்த்தான். அதைப்பற்றி ஏதும் பேசாமல், அவனுடைய அழகு, கம்பீரம், களை, பழகும் முறை, டிரஸ்ஸிங் சென்ஸ், தெறிக்கும் ஆண்மை எனக் கட்டுக்கடங்காமல் பேசிக்கொண்டே போக, ரூபன்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

பொறுமையிழந்தான். ஆத்திரமடைந்தான். மடக் மடக் என மேலும் இரண்டு ரவுண்டுகள் சென்றன. வறண்ட தொண்டை கோபத்தைக் கிளறியது. அந்த இசையமைப்பாளனைப்பற்றிப் பேசும்போதெல்லாம் தீபாவின் கண்களில் தெரிந்த காதல் எரிச்சலின் உச்சத்துக்கே கொண்டு சென்றது.

தேங்க் காட், இந்த சனியன் நமக்கு வேண்டாம், பிரேக் அப் செய்து விடலாம் என்ற முடிவுக்கு வந்தான். இன்றோடு இவளைத் தலை முழுக வேண்டியதுதான் என்ற முடிவுக்கு வந்திருக்கையில், தீபா சரிந்து இருந்தாள்.

அவளின் கெண்டைக்கால்கள், வயிறு, மார்பக க்ளீவேஜ் எல்லாம் கொஞ்சம் தெரிந்துகொண்டு இருந்தன. பிரேக் அப்தான் செய்யப்போகிறோம், ஒருமுறை முழுதாக அனுபவித்துவிட்டு நாளை காலை பிரேக் அப் செய்து விடலாம் என சாத்தான் மனது குதூகலமிட்டது.

தீபாவை மெல்ல தூக்கிக்கொண்டு படுக்கையறைக்குச் சென்று கட்டிலில் போட்டான். ஜீன்ஸின் பட்டன்களை விடுவித்து, ஜிப்பைக் கீழே இறக்கி அவிழ்க்க முயற்சித்தான். பின்னழகுடன் பின்னிப்பிணைந்திருந்ததால் வர மாட்டேன் என அடம் பிடித்தது ஜீன்ஸ். தீபாவைப் புரட்டிப்போட்டு ஜீன்ஸைப் பின்னழகில் இருந்து விடுவித்தான். டாப்ஸை கழற்ற சிரமம் இருக்க வில்லை. கடும் போதையில் நடப்பது ஏதும் தெரியாமல் மயங்கிக் கிடந்தாள் தீபா. போதையேறிய கண்களோடு உள்ளாடைகளை அவிழ்த்த ரூபன் மேலே படர்ந்தான்.

ஏத்து ஏத்து என ஏத்திய போதை எரக்ஷனை காவு வாங்கி இருந்தது. தீபா போலவே ரூபனின் குளுவானும் ஆடாமல் அசையாமல் கிடந்தது. செத்துப் போய்விட்டதோ என நினைக்கும் அளவுக்கு அழுகிய கோவைப்பழம் போல ஒருக்களித்துக் கிடந்தது.

ஆ ஊ என என்னென்னவோ செய்து பார்த்தான். கோவைப்பழம் நசுங்கியதுதான் மிச்சம்.

சோகமாகி விட்டான் ரூபன். ஒரு சிகரட் பற்ற வைத்தான். உச்சா போகலாம் என பாத்ரூம் சென்றான். உச்சா கூட வரவில்லை. கோமாவில் கிடந்தது கோவைப்பழம்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

மீண்டும் படுக்கையறைக்கு வந்தான். போதை கண்ணைக் கட்டியது. தூக்கம் சொக்கியது. காலையில் எழுந்தால் பிரச்சினை ஆகி விடும் என அந்த போதையிலும் தோன்றியது.

கடும் சிரமத்துக்குஇடையில் தலை நங்கு நங்கு எனப் படுத்தி எடுக்க, தீபாவுக்கு பேண்டியை போட்டுவிட்டு, தனது சகல சக்தியையும் திரட்டி, ஜீன்ஸை போட்டுவிடமுயன்றுகொண்டு இருந்தான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 21. பிரேக் அப்

## ஆற்றலின் அந்தப்புரம்

அழகியல் தன்மை கொண்டது ஆற்றலின் அந்தப்புரம். அந்தப்புரத்துக்கென தனி ஓவியரையே நியமித்து இருந்தான். அந்தப்புர வாயிலைத் தாண்டி உள் நுழைந்தால் அதுவொரு தனி அரண்மனை. ஆற்றல் அரசன் அல்ல, இளவரசன்தான். இளவரசரே தனி அந்தப்புரம் வைத்திருந்தது அண்டை நாடுகளில் வியப்பாகப் பேசப்பட்டது.

ஆற்றலின்தந்தை அங்குசன் ஆற்றலின் இந்தச் செயல்பாட்டை தடுக்கவில்லை. ஆற்றலுக்கு வயது ஏறிக்கொண்டே போனாலும் சிம்மாசனத்தை விட்டுக்கொடுக்க மனமில்லாமல் இருந்தார் அங்குசன். ஆற்றலுக்குத் திருமணம் செய்து வைத்து விட்டால், சிம்மாசனப் பரிமாற்றத்தைப் பற்றிப் பலரும் தொணதொணப்பார்கள் என்பதால் திருமணத்தைத் தள்ளிப்போட்டுக்கொண்டு வந்தார்.

அங்குசன் அரசராக இருந்தாலும் பெரும்பாலான ராஜரீக நடவடிக்கைகள், அரச பரிபாலனங்களை ஆற்றலே கவனித்து வந்தான். அங்குசன் அரசவையைக் கூட்டி, வயோதிக அமைச்சர்களுடன் அரட்டை ஆலோசனையில் ஈடுபடுவதிலேயே திருப்தி அடைந்து கொண்டிருந்தார். ஆற்றலின் முடிவுகளுக்கு முத்திரை வைக்கத் தவறியதில்லை அங்குசன். ஆற்றலின் செயல்பாடுகளும், அரசு சார்ந்த நடவடிக்கைகளும் அரசருக்கு நல்ல பெயரையே ஏற்படுத்தித் தந்திருந்தபடியால், பெரும்பாலான அரச காரியங்கள் ஆற்றலின் ஆளுகைக்குக் கீழே வந்தது. துடிப்பான, திறமையான, இளமையான அமைச்சர் குழுவை தனக்குக் கீழே நியமித்து இளம் பிரதிநிதிகள் என்று அவர்களை அழைக்க வைத்தான். அண்டை நாடுகளுடன் சுலபமான வர்த்தக நடவடிக்கைகளை மேற்கொண்டதால் பொருளாதாரம்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

செழித்தோங்கியது. பல நாட்டு மன்னரும் ஆற்றலுக்கு தங்கள் இளவரசியைத் திருமணம் செய்து கொடுக்க முனைந்தாலும், அங்குசனின் மந்தப்போக்கால் அனைத்தும் தடைபட்டுக்கிடந்தன.

இப்படி இருக்கும் சூழ்நிலையில், ஆற்றல் தனக்கென அந்தப்புரத்தைத்தனியாக அமைத்துக்கொண்டான். பட்டத்து ராணி என யாரும் இல்லை. அந்தப்புரத்தில் இருக்கும் அனைவரும் சமம். இள வயது, தாசி வீடு அது இது எனச் சுற்றாமல் இந்த அந்தப்புர ஏற்பாடு அங்குசனுக்கும் சரியென்றே பட்டது. ராஜ சமாசாரம் என்பதால், பெரிய அமைச்சர்கள் கூட இதைப்பற்றிப் பேசினார்கள் இல்லை.

அந்தப்புரத்துக்குள் வெவ்வேறு விதமான மாளிகைகள். ஒவ்வொரு மாளிகையிலும் விதவிதமான ஓவியங்கள், நீரூற்றுக்கள், மனதை மயக்கும் பூ வேலைப்பாடுகளால் அழகுபடுத்தப்பட்ட, இறக்குமதி செய்யப்பட்ட துணிகளால் மெருகேற்றப்பட்ட மஞ்சங்கள்.

ஒவ்வொரு மாளிகையிலும் விதமவிதமான மது பானங்கள், ரசனையானகுவளைகள். இந்த மொகலாய மன்னர்களிடம் நட்புறவு ஏற்பட்டதிலிருந்து ஹூக்கா பழக்கமும் தொற்றிக்கொண்டது ஆற்றலுக்கு.

ஆற்றல் அந்தப்புரத்தில் இல்லாதபோது, மற்ற அதிகாரபூர்வமற்ற இளவரசிகள், ஒன்றாகக் கூடிப் பாடல்கள் பாடுவது, நடனமாடுவது, விளையாடுவது வழக்கம். அவர்களுக்குள் அமைதியாக ஒரு போட்டி இருந்து கொண்டே இருக்கும். ஆற்றல் அரசனானதும், யார் ராணியாவது என்ற போட்டிதான் அது. அவர்கள் தங்களை மேம்படுத்திக்கொள்ளும் பொருட்டு சகல கலை வித்வான்களும் வந்திருந்து அவர்களுக்கு வகுப்பெடுப்பதும் வழக்கம். வெளி ஆட்கள் புதிதாக வந்து ராணியாக ஆகக்கூடாது, நம்மில் யாரேனும் ஒருவர்தான் ராணி என்பதில் தீவிரமாகவும் உறுதியாகவும் இருந்தனர்.

ஆற்றல் அந்தப்புரத்தில் மூன்று குதிரைகள் வைத்திருந்தான். அடர் கருப்பு, வெள்ளை மற்றும் சிவப்பும் மஞ்சளும் கலந்த மின்மினுக்கும் பழுப்பு நிறத்தில் வித்தியாசமான குதிரை. இந்தக் குதிரை மட்டும் இறக்குமதி செய்யப்பட்டது. குதிரை வண்டி, தேர் இதிலெல்லாம் செல்ல ஆற்றலுக்கு ஆர்வம் இருந்ததில்லை. கருப்புக் குதிரையில்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

பறந்து கொண்டிருந்தவன், மஞ்சள் சிவப்பு குதிரை வந்ததும் அதற்கு மாறி விட்டான். பின்னிரவு நேரங்களில் போதை தலைக்கேறி இருக்கும் வேளைகளில் தலைக்கவசத்தை மட்டும் மாட்டிக்கொண்டு செம்பழுப்பு நிறக் குதிரையில் பாதுகாவலர்கள் இன்றி தலைநகரின் இண்டுஇடுக்கெல்லாம் நுழைந்து வெளிவருவது ஆற்றலுக்குப் பிடித்தமான பொழுதுபோக்கு. அதிகாலை நேரத்தில்தான் அந்தப்புரம் திரும்புவான் ஆற்றல். அப்போது யாரேனும் அழகி மதிமயங்கி விழித்திருந்தால், கூடுதல் ரசனையுடன் மஞ்சத்து விளையாட்டு எழுச்சி பெறும். கதிரவன் தலை காட்டிக்கொண்டிருக்க, ஹூக்கா பிடித்தபடி உறக்கத்துக்குச் செல்வான் ஆற்றல்.

அந்தப்புரத்தில் வெவ்வேறு நாடுகளைச் சேர்ந்த அழகிகள் இருக்கிறார்கள். சொந்த நாட்டு அழகிகளும் உள்ளனர். ஆற்றல் அந்தப்புரத்துக்கு அழகிகளைத் தேர்ந்தெடுக்கும் விதம் இப்படித்தான் என அறுதியிட்டுச் சொல்ல முடியாது. கோவில் திருவிழாவில் உள்ளம் கவர்ந்தவளை காவலர்களிடம் கண் காட்டிவிடுவான். அரண்மனைக்கு வேலையாக வரும் பெண்களில் யாரையேனும் பிடித்துவிட்டால், திரும்பச் செல்ல மாட்டார்கள். திருமண விழா, அரச விழா, நகர்வலம், சந்தை என எங்கே எப்போது தேர்ந்தெடுப்பான் எனத் தெரியாது. ஆனால் வலுக்கட்டாயமாக யாரையும் கவர்ந்ததில்லை. அழைத்து வரச் சொல்லி, அந்தப்புரத்தில் இணைய விருப்பமா எனக் கேட்பான். இணைந்தால் உடனடியாக கிடைக்கும் வெகுமதிகள், தாய் தந்தையருக்குக் கொடுக்கப்படும் வசதிகள், நீண்டகால நோக்கில் கிடைக்கப்போகும் வாய்ப்புகள், அந்தப்புரத்தில் இருக்கும் வசதி வாய்ப்புக்கள் என அனைத்தையும் விளக்கிய பின்பு, விருப்பப்பட்டால் எடுத்துக்கொள்வான். அந்தப்புரத்தில் சேர்வதற்கு முன்பு, அரச வைத்தியசாலையில் சில நாட்கள் சோதனை மற்றும் மருத்துவச் சேவைகள் பெற வேண்டும். பின் மூலிகைக் குளியல் சில நாட்கள். பின்னர் அரச அழகு கலை நிபுணரிடம் சில தினங்கள் அழகை மேம்படுத்திக்கொள்ள வேண்டும். நல்ல உடை தைத்துத் தரப்படும். எல்லாம் முடிந்து இளவரசியாக அந்தப்புரத்தில் நுழையலாம்.

ஆற்றலின் ஏற்பாட்டில் கலாசாரப் பரிமாற்ற விழா கடந்த சில ஆண்டுகளாக நடந்துகொண்டு இருந்தது. அண்டை நாடுகளைச் சேர்ந்த பல கலைஞர்கள் பங்கு பெறுவார்கள். பரிசில் பெறுவார்கள். கலைகள் அரங்கேறும் பலமண்டபங்களிலும் ஆற்றலின் தலை

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

தென்படும். ஆற்றல் ஆள் பிடிக்கத்தான் இந்த விழாவை நடத்துவதாக மிக மிக மெதுவாகக் கிசுகிசுத்துக்கொண்டாலும் பலராலும் கிசுகிசுக்கப்பட்ட விஷயமாக இது ராஜ்ஜியத்தில் உலா வந்தது. ஆடல் நடந்துகொண்டிருக்கும் ஒரு மண்டபத்தைத் தாண்டிச்சென்ற ஆற்றல் ஆணி அடித்தது போல நின்று விட்டான்.

தீபாலோசினி காப்பியம் ஒன்றை நடன வடிவில் நிகழ்த்திக்கொண்டு இருந்தாள். சராசரிப்பெண்களைவிட உயர்ந்த தேகம். சுடர்விட்டு எரியும் அழகு. அவளைச் சுற்றி ஒளிவட்டம் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்தது போலத் தோன்றியது ஆற்றலுக்கு.

கொஞ்ச நேரம் ரசித்துப் பார்த்தவன், தன் உதவியாளர்களைத் தேடினான். உடன் முன் வந்து புரிந்துகொண்டு தலை ஆட்டினர். மெதுவாக நடந்து சென்று குதிரையில் தாவி ஏறிப் பறந்தான்.

இரவு அந்தப்புரத்துக்குச் சென்றவனுக்கு அதிர்ச்சி. தீபாலோசினி இல்லை. உதவியாளர்கள் பயந்து போய் நின்று கொண்டிருந்தனர். ‘எங்கே தீபாலோசினி?’ என கர்ஜித்தான் ஆற்றல்.

‘அரசே, அந்தப்புரத்துக்கு எல்லாம் வர முடியாது என்று சொல்லி0விட்டார்கள். தேவையெனில் நீங்கள் அவர்கள் தங்கியிருக்கும் விடுதிக்குச் சென்று பார்க்கலாமாம். அல்லது தங்களை அரண்மனையில் வந்து சந்திக்கத் தயாராக இருப்பதாகச் சொன்னார்கள். மிரட்டிப்பார்த்தோம், அவர்கள் அவருடைய நாட்டில் அரசவை நாட்டிய நங்கையாம். மெத்தப் படித்திருக்கிறாராம். அரச குலப் பெண்களுக்குக் கல்வி போதிக்கிறாராம். இந்த மிரட்டல் எல்லாம் என்னிடம் வேண்டாம், கலைக்காகத்தான் இந்த நாட்டிற்கு வந்தேன் எனத் தீர்க்கமாகக் கூறி விட்டார்’ என்றனர்.

அரண்மனையில் வந்து தன்னை சந்திக்கும்படிக் கட்டளையிட்டுவிட்டு, அந்தப்புரத்துக்குள் நுழைந்து தன் தனியறையில் குடிக்கத் தொடங்கினான் ஆற்றல். பின்பக்கமாக வந்து அரவணைத்த ஏதோ ஒரு தேவியை ‘தள்ளிப்போ, தனிமை தேவை’ எனக் கத்தினான்.

அரசரின் ஆலோசனைக் கூடத்தில் தீபாலோசினியைக் காக்க வைத்துச் சந்தித்தான் ஆற்றல்.

‘வணங்குகிறேன் அரசே’ வாயால் கூறிய தீபா வளையவில்லை.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

கனைத்துக்கொண்டே ஆசனத்தில் அமர்ந்த ஆற்றல், தீபாலோசினியை அமரச் சொன்னான்.

‘மிகுந்த துணிச்சலான பெண்மணி போலிருக்கிறது? அரசர் அழைத்தே வர மறுத்து விட்டாயாமே?’

‘துணிச்சல்காரிதான் அரசே. ஆனால் இந்த விஷயத்தில் துணிச்சல் கூடத் தேவையில்லை. அடிப்படை அறிவு போதுமே! அரசர் அழைத்தால் அரண்மனைக்கு எப்போது வேண்டுமானாலும் வர வேண்டியது கடமை. அந்தப்புரத்துக்குச் செல்வது மடமை. கண்டவரையும் அந்தப்புரத்துக்கு அழைப்பவர் நல்லரசர் அல்ல!’

‘தவறாக நினைத்துக்கொண்டாய் தீபாலோசினி. உன்னை அந்தப்புரத்துக்கு அழைத்தது, உன் விருப்பத்தைக் கேட்கத்தானே அன்றி, கட்டாயப்படுத்த அல்ல. சரி போகட்டும் என்ன அருந்துகிறாய்?’எனக் கேட்டுக்கொண்டே பழரசத்தைக் கொடுத்தான்.

வழக்கம்போல, அந்தப்புரத்தில் இணைந்தால் ஏற்படும் நன்மைகளை விளக்கிய ஆற்றல், மற்றவர்களைப்போல அல்லாமல் தீபாலோசினியை மனமாரக் காதலிப்பதாகக் கூறினான்.

‘இத்தனை பெண்களுடன் உறவு வைத்திருப்பது உங்கள் விருப்பம். அதை மீறி உங்களுக்கு காதலெல்லாம் எப்படி தோன்றுகிறது?’ எனக் கேலியாகச் சிரித்தாள் தீபா.

‘அரச குல வழக்கில் இதெல்லாம் சகஜம், என் காதலை ஏற்றுக்கொள்வாயா?’ என்றான் ஆற்றல்.

‘நான் உங்களுக்கு சரி வர மாட்டேன் அரசே, அந்தப்புரத்தில் இருக்கும் அனைத்துப் பெண்களுக்கும் உதவித் தொகை கொடுத்து மறுமணம் செய்து வைக்க வேண்டும். அதற்குப்பிறகு நான் மட்டுமே அந்தப்புரத்தில் இருக்க வேண்டும். எனக்குப்பிறகு அந்தப்புரத்துக்கு வேறு பெண் நுழையக்கூடாது’ என்று கோரிக்கை வைத்தாள்.

‘செய்து விடுகிறேன். இவையெல்லாம் சாத்தியம்தான் தீபாலோசினி.’

‘இப்போது சரியெனச் சொல்லிவிட்டு, பிறகு புத்தி மாறினால்? அரசர் வாக்கை காப்பாற்றவில்லை எனில் யார்தான் என்னதான் செய்துவிட முடியும்?’

‘சத்தியம். வாக்கு மீற மாட்டேன்.’

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

‘அரசாட்சியில் நானும் ஈடுபடுவேன்.’

‘மிக்க மகிழ்ச்சி, அதிலொன்றும் சிக்கல் இல்லை.’

அரசர் அங்குசன் வந்து கொண்டிருப்பதாகத் தகவல் வந்தது. அரசரின் சிம்மாசனத்தைவிட்டு எழுந்து தன் இருக்கையில் அமர்ந்தான் ஆற்றல்.

அரசர் வந்ததும் இருவரும் வணங்கினார்கள். தீபாலோசினியை அறிமுகப்படுத்தினான் ஆற்றல்.

‘நேற்றே கேள்விப்பட்டேன் தீபாலோசினியின் ஆடலைப் பற்றி’ எனக் கூறிய அரசர், ‘அரண்மனை ஜோசியர் நாட்டு நலனுக்காகவும், என் வாழ்நாள் நீடிக்கும் பொருட்டும், இன்னொரு திருமணம் செய்து கொள்ளச் சொன்னார். எந்தப் பெண்ணைப்பார்த்தும் அந்த எண்ணம் தோன்றாததால் தள்ளிப்போட்டுக்கொண்டே இருந்தேன். தீபாலோசினியைப் பார்த்தவுடன் மனதுக்குள் ஒரு திருப்தியான உணர்வு பரவுகிறது. தீபாவைத் திருமணம் செய்தால் நாட்டு மக்களுக்கு நல்லது நடக்கும் எனத் தோன்றுகிறது. எனக்கும் வாழ்க்கை நிம்மதியாகக் கழியும். என்ன சொல்கிறாய் தீபாலோசினி?’

ஆற்றல் திடுக்கிட்டான். அரசே எனக் குறுக்கிட்டான். கையமர்த்திய அரசர், ‘தீபாலோசினி, நீ சொல்லம்மா’ என்றார்.

‘நேரடியாகப் பேசுகிறேன் அரசே, தவறாக எண்ண வேண்டாம். தங்களுக்கோ வயதாகிறது. உங்கள் காலத்திற்குப் பிறகு, சிறிதளவு அரச மானியத்துடன் என்னைத் துரத்தி விடுவார்கள். என் வாழ்க்கை நாசமாகிவிடும். அதனால் அரசாட்சிப் பொறுப்பை இப்போதே என்னிடம் ஒப்படைத்தால், நான் உங்களை உங்களுக்காகவும் நாட்டு நலனுக்காகவும் திருமணம் செய்யத் தயார். நீங்கள் அரசாட்சியை மேற்பார்வை இடலாம். உங்கள் காலத்துக்குப் பிறகும் நானே அரசி எனப் பிரகடனம் செய்து முடிசூட்ட வேண்டும்’ என்றாள்.

தீபாலோசினியைக் கோபமாகப் பார்த்துக்கொண்டே தவியாய்த் தவித்தபடி நின்று கொண்டிருந்தான் ஆற்றல்.

சற்று நேரம் யோசித்த அரசர், ‘ஆகட்டும் அம்மா, அப்படியே செய்து விடலாம், நாடு சுபிட்சமடையட்டும், என் வாழ்வு ஒளிரட்டும்’ என்றார். அரசரின் பாதம் பணிந்தாள் தீபாலோசினி.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

‘அன்னைக்கு அவரின் மாளிகையைக் காட்டு’ என ஆற்றலிடம் ஆணையிட்டார் அரசர்.

ஆற்றலுடன் நடந்து செல்கையில், ‘குழந்தாய், நாளை முதல் நீ அரண்மனையிலேயே தங்கிக்கொள். உன் அந்தப்புரத்தை நாட்டியப் பள்ளி ஆக்கிவிடப்போகிறேன். இது உன் அன்னையின் ஆசை மட்டும் அல்ல, அரசியின் ஆணை’ என்றாள்.

நடந்தவை அனைத்தையும் ஓலையில் எழுதி, தூதுவன் மூலம் தன் நாட்டில் இருக்கும் காதலனுக்கு அனுப்பினாள். காத்திருக்க முடியுமா என்றுதான் அந்தக் கடிதத்தை முடித்திருந்தாள். படித்துவிட்டுக் கிழித்துப் போட்டான் காதலன்.

கிழித்துப்போடுவான் என்று தீபாலோசினிக்கு நன்றாகத் தெரியும் என்பதால் சுலபமாகக் கிழிக்கத்தகுந்த ஓலையிலேதான் எழுதி அனுப்பி இருந்தாள்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 22. பிரேக் அப்
## ரூம் நம்பர் 132

மொபைலை எடுத்து, ‘சொல்லுடா மச்சி’ என்று கேஷுவலாகப் பேச்சை ஆரம்பித்தான் கிஷோர். எதிர்முனையில் பதட்டத்துடனும் குழறலுடனும் பிரேம் பேசினான்.

‘மச்சி, என் ஆளோட பீச் ரெஸார்ட் வந்தேன். சும்மா அப்பிடியே லேசா பேசி பேசி சண்டை ஆயிடிச்சிடா.’

‘ரெஸார்டுக்கு போயும் சண்டையா? சரி சரி, சமாதானப்படுத்து. தண்ணி அடிச்சிருக்கீங்களா?’

‘ஆமாம் மச்சான். சண்டை பெருசா ஆயிடிச்சி, எனக்கு பயமா இருக்குடா.’

‘மச்சான் காதல்ல சண்டைல்லாம் சகஜம். பேசாம ரெண்டு பேரும் தூங்குங்க, சரியாயிடும். பிரேக் அப் எல்லாம் ஆகாது, பயப்படாத மச்சி.’

‘இல்லடா, பெருசா ஆயிடிச்சி. நான் அவளை அடிச்சிட்டேன், அவளும் என்னை அடிச்சிட்டா. ரத்தம் வர்ற அளவுக்கு அடிச்சிகிட்டோம். அவ ரெஸார்ட்ல இருக்குற எல்சிடி டிவியை போட்டு ஒடைச்சிட்டா. இப்ப வெளில வந்து பேசிட்டு இருக்கேன். அவ போலீஸுக்கு போவப்போறதா சொல்றா மச்சான், பயமா இருக்குடா.’

‘அவளும் போதைல இருக்காளா?’

‘ஆமாடா.’

‘கார் சாவி கைல இருக்கா?’

‘இருக்கு மச்சி.’

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

‘அவ கிட்ட கார் இருக்கா.’

‘இல்ல.’

‘ரெஸார்ட் ரூம் நம்பர் என்னா?’

‘132.’

‘நீ அப்படியே காரை எடுத்துகிட்டு வீட்டுக்குக் கிளம்பு. நீ அங்க இருந்தா பிரச்சனை ஆயிடும். நான் போயி அவளை சமாதானப்படுத்தி, நான் பாத்துக்கறேன்.’

‘டிவியை ஒடைச்சிட்டாடா.’

‘டோன்ட் வொர்ரி மச்சி, நான் செட்டில் பண்றேன். நான் பாத்துக்கறேன், நீ கிளம்பு.’

‘ஓக்கே மச்சி, தேங்க்ஸ்டா.’

அவசர கதியில் உடை மாற்றிக்கொண்டு, பர்ஃப்யூமை விஷ்க்கிக்கொண்டு, கார் சாவியைச் சுழற்றியபடியே தீபாவைப் பார்க்க ரெஸார்ட்டுக்குக் கிளம்பினான் கிஷோர்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 23. பிரேக் அப்
## கொஞ்ச நேரம் காத்திருங்கள்

அமைச்சரவையில் உப அமைச்சராக இருந்த வல்வேளுக்கு அரசி மேல் எப்போது, எப்படிக் காதல் வந்தது எனத் தெரியவேயில்லை. அரசி எப்போதாவதுதான் அரசவைக்கு வருவாள். அரசர் பக்கத்து சிம்மாசனத்தில் அமர்ந்திருந்துவிட்டு, சில அலுவல்கள் முடிந்ததும் வணக்கத்தை ஏற்றுக்கொண்டு சென்று விடுவாள். அவள் நடந்து வரும் கம்பீரம், அவள் முகத்தில் தெறிக்கும் திமிர், கண்களில் தென்படும் ஆணவம், இவையெல்லாம்தான் அரசி மேல் காதலை உருவாக்கியிருக்க வேண்டும். அரசியை தேவதேவியாக உணர்ந்தான். அரசரும் சாதாரணப்பட்ட அரசர் இல்லை, பேரரசர், சிம்ம சொப்பனம்.

வல்வேளுக்கு முதலில் இது காதலா, அல்லது எதிர்பாலின ஈர்ப்பா எனப் புரியவில்லை. கல்வியில் கற்றுத்தேர்ந்த தனக்கே இந்தக்குழப்பம் வருகிறதே எனத் தவியாய்த் தவித்த அவன் ஓர் இரவு அரசியை மனதுக்குள் நினைத்த படி கைமதுனம் செய்து கொண்டான். இதற்குப்பிறகு அரசி மேல் ஆர்வம் குறைந்தது என்றால் எதிர்பாலின ஈர்ப்புதான் என முடிவு செய்து கொள்ளலாம் என்பது அவன் துணிபு. ஆனால் அந்த சுய இன்பத்திற்குப் பிறகு அரசி மேல் இன்னும் இன்னும் காதல் வளர்ந்ததுதான் மிச்சம்.

வல்வேள் அறிவாளி மற்றும் துணிச்சல்காரன். இன்றைய வாழ்க்கை மட்டும்தான் நம்முடையது, வாழ்க்கையை மனம் போன போக்கில் உல்லாசமாக மனம் சொல்வது போல வாழ வேண்டும் என்ற கோட்பாடுடையவன்.

தன் மனதை ஒரு ஓலைச்சுவடியில் வடித்து, அரசி ஏரிக்கரை ஓரம் பூந்தோட்டத்தைப் பார்வையிட்டுக்கொண்டு இருக்கும்போது கொடுத்துவிட்டு, குதிரையில் தாவி ஏறிப் பறந்தான். நாட்டை விட்டே

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

வெளியேறி, எல்லைக்கோட்டிற்கருகே இருந்த அடுத்த நாட்டு நண்பனின் வீட்டில் தங்கிக்கொண்டான்.

அரசியின் கோபம் பெருக்கெடுத்தால், அரசருக்குத் தெரிந்து தலை துண்டிக்கப்படுவது திண்ணம் எனினும், சாவை சற்றே தள்ளிப்போடலாம் என்றுதான் இங்கே வந்திருந்தான். அரண்மனை கொலைகாரர்களுக்கு கொஞ்சம் வேலை கொடுக்கலாம் என்பதும் அவன் எண்ணமாக இருந்தது. தான் இங்கே வந்திருப்பது, எல்லை தாண்டி இருப்பது என அனைத்தும் உளவுத்துறைக்குத் தெரிந்திருக்கும். அரசி கேட்டால் அடுத்த நொடி தன் இருப்பிடம் தெரிவிக்கப்படும் என்பதும் வல்வேளுக்குத் தெரியும்.

இரண்டு நாட்கள் இருப்பு கொள்ளாமல் கழிந்தது வல்வேளுக்கு. மூன்றாம் நாள், கிழவர் ஒருவர், ஆடி அசைந்துகொண்டு வந்த கிழட்டு குதிரையில் வந்திறங்கி இவனை விசாரித்துக்கொண்டு இருந்தார். அவரை வரவழைத்து கள் ஊற்றிக்கொடுத்ததும், அவர் முத்திரையிட்டு மூடப்பட்டிருக்கும் ஓலைச்சுவடியை இவனிடம் தந்து, ‘ரகசியம்... ராஜ ரகசியம்’ என்றார்.

தோட்டத்திற்குச் சென்று பிரித்துப் பார்த்தான்.

‘என் வாழ்வில் இப்படி ஒரு காதலையும், இப்படி ஒரு வீரனையும் கண்டதில்லை. தமிழ் அரச வரலாற்றில் அரசிக்கே துணிச்சலாகக் காதல் கடிதம் கொடுத்தவனைக் கண்டதில்லை’ என்றும், நாளை மறுநாள் அதே பூந்தோட்டத்தில் வந்து தன்னைச் சந்திக்கும்படியும் அரசி எழுதி இருந்தாள்.

துள்ளிக்குதித்தான் வல்வேள். கட்டிப்போடப்பட்டிருந்த குதிரை முன்னங்கால்களைத் தூக்கிக் கனைத்தது. முடிந்து வைத்திருந்த பொற்காசுகளை அள்ளி, அந்தக் கிழவரிடம் கொடுத்தான். தன்னிடம் இதைப்போல மூட்டை மூட்டையாக உள்ளது என்றபடி, பெருத்த மூட்டை ஒன்றைத் தூக்கி வல்வேளிடம் அளித்தார் கிழவர். ‘அரசி உன்னிடம் கொடுக்கச் சொன்னார்’ என்றார். அத்தனையும் பொற்காசுகள்.

நண்பனுடன் விருந்து, உல்லாசத்தில் ஈடுபட்டான் வல்வேள். அரசியைண் சந்திக்கும் நாள் வந்தது. அதிகாலையில் எழுந்து குதிரையையும் தன்னையும் சீர்படுத்திக்கொண்டான். குதிரையை

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

மெதுவாக இயக்கினான். குறித்த நேரத்துக்கு முன்பே பூந்தோட்டத்துக்கு வந்து காத்திருந்தான்.

அரசி பாதுகாவலர்களுடன் தோழிகள் புடை சூழ, சூரியன் மேல் நிலவு நடந்து வருவதைப்போல வந்து கொண்டிருந்தாள். காத்திருந்த வல்வேளை உள்ளே வரச்சொல்லி சைகையிட்டு பூந்தோட்டத்தினுள் நுழைந்தாள்.

பாதுகாவலர்கள் தோட்ட வாயிலிலேயே நின்று கொள்ள, தோழிகள் அரசியைப் பின்தொடர்ந்தனர். தோழி தோட்டத்துக்கு நடுவே அமைக்கப்பட்டிருந்த கிணற்று மேடையில் பட்டுத்துணி மெத்தை விரிக்கப்பட்டுக் குடை பதியப்பட்டு அமர்ந்தாள். தோழிகளைப் பூப்பறிக்க அனுப்பினாள்.

வல்வேளும் அரசியும் தனித்து இருந்தனர்.

‘அவ்வளவு துணிவா வல்வேள்? எனக்கு கோபம் வந்திருந்தாலோ, அரசருக்கு தெரிந்தாலோ இந்நேரம் உன் தலை உன் கழுத்தில் இருக்காது. தெரியும்தானே?’

‘தெரியும் அரசி. தங்கள் மேல் உள்ள காதலைச் சொல்லத் துணிவில்லாத தலை என் கழுத்தில் ஏன் இருக்க வேண்டும்?’

‘என் மேல் அவ்வளவு காதலா? எப்போதிருந்து?’

‘எப்போதிருந்து எனத் தெரியவில்லை அரசி, உங்களைப் பார்க்கும்போதெல்லாம் மனம் துடிக்கும். குதியாட்டம் போடும். உங்களை தேவியாகவே பார்க்கிறேன். தேவியின் சொரூபம் நீங்கள்.’

‘நானும் உன்னைக் கவனித்து இருக்கிறேன். மன ஓரத்தில் உன் மீது ஒரு கனிவு எனக்கு ஏற்பட்டதை இப்போது உணர்கிறேன். உன் சமயோசிதம், புத்திசாலித்தனம் பற்றி அரசர் அவ்வப்போது சொல்வார். நீ இவ்வளவு வீரனாக இருப்பாய் என எண்ணவில்லை. நீ இப்போது என்னுடன் தனியாக இவ்வளவு நேரம் பேசிக்கொண்டிருப்பதை யாராவது அரசரிடம் சொன்னாலே சிக்கல்தான். உன் தலைக்குக் கண்டம்தான் தெரியுமா? பயமில்லையா?’

‘இல்லை தேவி’ என்ற வல்வேள் அரசியை நெருங்கி, முட்டிக்கால் இட்டு, அரசியின் சிரம் பற்றி, அரசியின் இதழ்களில் இதழ் பதித்தான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

‘உன்னை எல்லையில்லாமல் காதலிக்கிறேன் தேவி’ என்றபடி விலகினான்.

திக்கித்துப் போனாள் அரசி. நாணமும் நடுக்கமும் ஒரு கணம் தோன்றி மறைந்தது. வரவழைத்துக்கொண்ட மிடுக்குடன், ‘நாளை அரண்மனையில் என் ஆலோசனைக் கூடத்தில் வந்து பாருங்கள்’ என்றாள்.

அரசியின் கரம் பற்றி முத்தம் கொடுத்துவிட்டு, ‘வருகிறேன் என் செல்லமே’ என்றபடி விலகினான் வல்வேள்.

அலுவல் நிமித்தமாக சந்திப்பது போல அரசியின் அலுவல் அறைக்குச் சென்றான். கண்களாலேயே பணியாளர்களை விலக்கினாள் அரசி. திரைச்சீலை ஆட கடைசி பெண்ணும் வெளியேறியதும், அரசி எழுந்து கம்பீரமாக நடந்து வந்தாள்.

வல்வேள் சற்றே பாய்ந்து முன்னேறி அரசியை அணைத்துக்கொண்டான். அரசி வல்வேளின் மார்பில் இதழ்களால் தேடினாள். முத்தங்கள், அணைப்புக்கள் முடிந்ததும், ‘வல்வேள், இரவு முழுக்க தூக்கமேயில்லை, உன்னையே நினைத்துக்கொண்டிருந்தேன்’ என்றாள் அரசி.

‘நானும்தான் தேவி, இரவு தூங்கவேயில்லை.’

‘அரண்மனையிலேயே இப்படி அரசியை அணைப்பது எவ்வளவு பெரிய குற்றம் தெரியுமா?’

‘அரசிக்குப் பிடித்ததைச் செய்வது இந்த ராஜ்யத்தில் குற்றம் இல்லைதேவி.’

‘நன்றாக பேசுகிறாய் வல்வேள். என்னைத் தனிமையில் சந்திக்க என்ன வழி வைத்துள்ளாய்?’

‘தெரியவில்லை தேவி, நீங்கள்தான் சொல்ல வேண்டும்.’

‘நேற்று என்னைணீ பூந்தோட்டத்தில் சந்தித்தாய் அல்லவா? அங்கே ஒரு கிணறு இருந்தது அல்லவா? அதில் இறங்கினால், பாதி கிணறு தாண்டியதும் ஒரு பொந்து வரும். அதில் நுழைந்தால் பெரிய கதவு வரும். அதற்கு ஒரு சாவி உள்ளது. இந்தா அந்தச் சாவி’ எனக் கொடுத்தாள் அரசி. அவளே தொடர்ந்து, ‘இந்தச் சாவியைப்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

போட்டுத் திறந்தால் சுரங்கப்பாதை ஒன்று செல்லும், அதில் வா. அது நான் இருக்கும் அந்தப்புரத்திற்குக் கொண்டு வந்து விடும்' என்றாள்.

சாவியை வாங்கிக்கொண்டு, அரசியின் குழைவான இடுப்பில் கை நுழைத்து தன்னருகே இழுத்து மேலுதட்டை மென்மையாகக் கடித்து பின் முத்தமிட்டு விலகினான் வல்வேள்.

இரவு. அரசி சொன்னபடி சுரங்கத்தின் வழியாக அந்தப்புரத்தை அடைந்தான். சிறிய கதவு போன்ற பாறையை விலக்கியதும் அரசியின் மஞ்சம் இருந்த அறைக்குச் சற்றுத் தொலைவே வெளிவந்தான். முழுக்க அலங்கரித்துக்கொண்டு அமர்ந்திருந்தாள் அரசி. கிரீடம் முதற்கொண்டு அணிந்திருந்தாள்.

'உனக்காகத்தான் காத்திருக்கிறேன் வல்வேள்.'

'உங்களுக்காகத்தான் ஓடோடி வந்தேன் ம்ருதியா. யாரும் பார்த்து விடக்கூடாது என்ற எச்சரிக்கை உணர்வால் சற்று தாமதமாகி விட்டது' என்றான் வல்வேள்.

'வல்வேள், நீ இதுவரை யாரையாவது காதலித்து இருக்கிறாயா?'

'இல்லை ம்ருதி. முதன்முதலாக உங்களைத்தான் காதலித்தேன். உங்கள் உதட்டில் விதைத்ததுதான் என் முதல் முத்தம்.'

'வல்வேள், நான் இதுவரை யாரையும் காதலித்தது இல்லை. அரசரைத் திருமணம் செய்து கொண்டேனே தவிர, காதல் பூத்ததே இல்லை. உன்மீதான காதல் பூத்ததும் பாடசாலையில் பயிலும் பதின்பருவ மாணவி போல உணர்கிறேன். மனமும் உடலும் குறுகுறுப்பாக உள்ளது வல்வேள். உனக்காக சாகவும் சித்தமாக இருக்கிறேன்.'

'ஏன் இப்போது சாவைப்பற்றி பேச்சு ம்ருதி? வாழ்வைப்பற்றிப் பேசலாம்.'

'இந்தக் காதலுக்காகத்தான் பல ஜென்மங்கள் காத்திருந்தது போல இருக்கிறது வல்வேள்.'

வல்வேள் அரசியை நெருங்கி மஞ்சத்தில் அமர வைத்தான். அரசியின் கிரீடத்தோடும், பொன் நகைகளோடும், பொன்னாலான காலணிகளோடும் அப்படியே அணைத்து ஒருவரை ஒருவர் முகர்ந்தபடி மஞ்சத்தில் சற்று நேரம் கிடந்தனர். அரசியின் நகைகளைத் தொடாமல் அரசியின் உடைகளை மட்டும் தளர்த்தினான் வல்வேள்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

இசைந்து கொடுத்தாள் ம்ருதியா தேவி. அரசியின் உடல் முழுக்க குளுமையான ஸ்படிகம் போல இருந்தது. அரச வாசனை வீசுவதாகத் தோன்றியது வல்வேளுக்கு. சந்தனத்தில் குழைத்துச் செய்த மேனியென எலுமிச்சை நிறத்தில் பளீரென்று கண்ணைக் கூசியது அவனுக்கு. கம்பீரமாக நிமிர்ந்து நின்ற மார்பங்கள் முத்தமிடு என்னை என்று ஆணையிட்டது போலத் தோன்றியது.

வல்வேள் மார்பினில் முத்தமிட வில்லென வளைந்தாள் ம்ருதியா. முற்றிலும் உடைகளைக் களைந்துவிட்டு அரசியை முழுதாகப் பார்வையால் விழுங்கினான். கழுத்தில் ஆரங்கள், கைகளில் காப்புகள், வளையல்கள், விரல்களில் மோதிரங்கள், இடையில் மெல்லிய ஒட்டியாணம், காலில் கொலுசு, தலையில் இன்னும் கிரீடத்தோடு தேவ சுந்தரி மண்ணில் முயங்கிக் கிடப்பதாகத் தோன்றியது வல்வேளுக்கு. அரசி என்ற கம்பீரமும் ஆணவமும் இன்னும் மிச்சமிருந்தாலும் கன்னிச்சிறுமிக்கு உரிய குறுகுறுப்பும் குறும்பும் அவ்வப்போது இடையோடியது. உடலில் எங்குமே ஆண் வாசம் தட்டுப்படவில்லை. பெண்மை பெண்மை என பெண்மை மிளிர்ந்து வழிந்தோடியது. நாபிக்கமலத்தில் முத்தமிட்டு, யோனிக்கருகே சென்றான். சுகந்த மணம் வீசி மயக்கமுறச் செய்தது. இதயத்துடிப்பு ஏற முத்தமிட்டுக்கொண்டு இருக்கையில், எழுந்த அரசி வல்வேளின் உடைகளைக் கழற்றினாள்.

வல்வேளை கீழே தள்ளி, மேலே ஏறி அமர்ந்தாள். தேவ தேவி எழுந்தருளி வீற்றிருப்பது போலத் தோன்றியது வல்வேளுக்கு. மூச்சடைத்தது. மென்மையாக இயங்கத் தொடங்கினாள். வல்வேள் அரசியின் தோளைப் பற்றி இருந்தான். அரசியின் வேகத்துக்கு ஈடு கொடுக்க முடியாமல் கிரீடம் தரையில் விழுந்தது. முத்து மணிகள் தெறித்தன.

கதவு தட்டப்பட்டது. ‘அரசர் வந்திருக்கிறேன், கதவை திற’ என்ற குரல் கேட்டது.

வல்வேள் பதறி எழுந்திருக்க முற்பட்டான். அவனை கீழே தள்ளிய ம்ருதியா தேவி, அவனது மார்பை அமுக்கிக்கொண்டே, ‘என் தேவ தேவா’ என்று கிசுகிசுத்தபடி இயங்கிக்கொண்டே இருந்தாள்.

‘அரசர் வந்திருக்கிறேன்’ என்ற குரல் இன்னும் கடுமையாகக் கேட்டது.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

‘கொஞ்ச நேரம் காத்திருங்கள்’ என்றுகிரீச்சிட்ட அரசி, வல்வேளின் மேல் சாய்ந்தபடி இயங்கிக்கொண்டு இருந்தாள். வல்வேளுக்கு பதட்டம் குறைந்தது. மீண்டும் கூடலுக்குள் நுழைந்து அரசிக்கு ஈடு கொடுத்தான். அரசியை கீழே தள்ளி மேலே வர முயன்றவனை மீண்டும் கீழே தள்ளி மேலேயே இருந்தாள் அரசி.

‘கதவை உடைத்துத் தள்ளட்டுமா’ என்ற அரசரின் குரல் கோபத்துடன் கேட்டது.

உச்சத்துக்குச் சென்ற அரசி, உல்லாச இன்பக்குரலால் அடக்கமாட்டாமல் கத்திக்கொண்டே இயங்கிக்கொண்டு இருந்தாள்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 24. பிரேக் அப்
## நடுவில் காணாமல் போனவன்

கதைக்குத் தேவையில்லாத முன்குறிப்பு:

தீபாவுக்கு ஆடையில்லாமல் கண்ணாடியில் பார்த்தபடியே நடனம் ஆடப் பிடிக்கும். தனிமையில்தான், வேறு யாரும் உடன் இருக்கக்கூடாது.

தீபாவின் மார்பகக் காம்புகளில் ஒரு முடி இருக்கும். அதை அவள் வெட்டியதோ, மழித்ததோ கிடையாது. வேறு எதையாவது வெட்டி விடும் என்ற பயமெல்லாம் கிடையாது. அது சுருள் முடி.

தீபாவுக்கு ஒரு காதலன் இருக்கிறான்.

தீபாவுக்கு சிங்கிளாக இருக்கும் ஆணைவிட, பொதுவெளியில் காதலி அல்லது மனைவியோடு நெருக்கமாக உரசிக்கொண்டும் கொஞ்சிக்கொண்டும் இருக்கும் ஆடவர்களையே ரொம்ப பிடிக்கிறது. அவர்கள்பால் கவர்ந்திழுக்கப்படுகிறாள்.

கதை:

தீபாவுக்குத் தன் காதலனை எப்போது பிடிக்காமல் போயிற்று என்றே தெரியவில்லை. ஏன் பிடித்துக் காதலித்தாள் என்றும் யோசித்துப் பார்த்து, ஏதும் தோன்றாததால் மூக்கு நோண்டுவதில் போய் முடிந்தது. அந்தக் காதலனின் நாமகரணம் சரவணன். கதையின் நடுவில் காணாமல் போய், கதையின் கடைசியில் வருவான், ஞாபகம் வைத்துக்கொள்ளவேண்டும்.

ஸ்ட்ரெயிட் ஃபிட் பேண்ட் போட்டு இன் செய்து கொள்வான் சரவணன். தினமும் க்ளீன் ஷேவ். முகத்தில் க்ளீன் ஷேவ் என்று ரேசரால் எழுதப்பட்டு இருக்கும். அது பத்தாமல் க்ளீன் ஷேவ் நாத்தமும் வாசனையாய் அடிக்கும். ஷர்ட் மட்டும் டைட்டாகப்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

போடுவதால் சட்டைத்துணி தொப்பையில் ஒட்டி அமீபாவை பெருசாக்கி பார்த்தாற்போல எப்போதும் வியர்வை டிசைன் இருக்கும். பேண்ட்டை சற்றே லூசாக போடுவான். அவ்வப்போது இரு கால்களையும் அகட்டி உட்காருவது போல பத்து சதவீதம் கீழே போய் மேலே வருவான். இது குறிக்கும் விதைக்குமான ஏதோ பயிற்சி போல, நமக்கு வேண்டாம். இந்த பத்தியே கதைக்குத் தேவையில்லாத முன்குறிப்புகளில்தான் வந்திருக்க வேண்டும். அப்புறம் கதை சின்னதாகப் போய் விடுமே என்று இங்கே போட வேண்டியதாகி விட்டது.

‘வாய்ல ஸ்மெல் வருதுடா’ எனச் சொல்ல ஆரம்பித்தாள் தீபா. மவுத் ஃப்ரெஷ்னர், இஞ்சி, ஜீரகம், பபிள் கம், விபூதி, சந்தனம், துளசி எனக் கண்டதையும் மெல்ல ஆரம்பித்தான்.

‘ஸ்மெல்லே கொறையல, வயித்துலதான் பிரச்சனை போல’ என்றாள் தீபா.

ப்யூர் வெஜ், பேதி மருந்து, இளநீர், அருகம்புல் ஜூஸ் என ஏதேதோ செய்தான்.

‘பாடியிலயும் ஸ்மெல் அதிகமா வருது, அக்குள் பக்கத்துல பாரு எவ்ளோ வியர்வை’ எனக் கொளுத்தினாள் தீபா.

ஆரம்பத்தில் பம்மி பதுங்கி இன்ஃபீரியாரிட்டி காம்ப்ளஸுக்குப் போனவன், எக்கச்சக்க விரதத்தால் வெகுண்டெழுந்தான். எல்லாத்தையும் தலையைச் சுத்திக் கடாசினான். நன்கு குடித்தான். சிகரட் பிடித்தான். தீபாவிடம் சண்டை பிடித்தான்.

வேறு என்ன? ‘போடா பூண்டு மவனே’ என சரவணனுக்கு பிரேக் அப் கொடுத்தாள்.

ரிலாக்ஸாக இருந்தது தீபாவுக்கு. அறிந்த வயசில் செய்ததற்கு அறியாத வயசு பெண் போலச் செய்து பரிகாரம் தேடிக்கொண்டது நிம்மதியாக இருந்தது.

யாரெல்லாம் தனக்குக் கிளர்ச்சி உண்டாக்கினார்களோ, அவர்களையெல்லாம் ஒவ்வொருவராக சலிக்க சலிக்க காதலிக்க வேண்டும் என அவளது மனம் பொங்கியது. மற்ற பெண்களுடன் ஒட்டி உரசி ரொமாண்டிக்காக அவர்கள் இருந்ததை நினைத்துப்பார்த்தால் ரத்தம் ஜிவ்வெனப் பறந்தது. தலைக்கு மேல்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

ஃபவுண்டெயின் போல ரத்தம் பீய்ச்சி அடிப்பது போன்ற உணர்வு ஏற்பட்டது. ஏற்கெனவே ரூட் பிடித்து வைத்திருந்த வேற்றுப்பெண்ணுடைய காதலன்கள், கணவன்கள் வழிந்தபடி சுலபமாகதீபாவிடம் சிக்கினார்கள். சிக்கும் வரைதான் கிக். சிக்கிய பின்பு, அந்தப்பெண்ணுடன் பார்த்தபோது இருந்த கவர்ச்சி தன்னுடன் இருக்கையில் இல்லாதது கண்டு எரிச்சலுற்றாள் தீபா. இவர்களெல்லாம் அரை குறை இன்ஸ்டண்ட் காதல் என்பதால் சுலபமாகக் கழட்டி விட்டாள்.

சுவரில் மாட்டியிருந்த அம்மாவின் படத்தைப் பார்த்தாள். ‘எவ்வளவு காஸ்ட்லி பொம்மை வாங்கிக்கொடுத்தாலும், அடுத்தவளோட சின்ன பொம்மையைப் பிடுங்கி விளையாடுவடி நீ’ என தீபாவின் அம்மா அடிக்கடி சிரித்தபடிச் சொல்வது, இப்போதும் சொல்வது போல இருந்தது.

திடீரென ஒருநாள் இன்னொரு பெண்ணுடன் சரவணனை நெருக்கமாகப் பார்த்தாள். இன்னொரு பெண்ணுடன் பார்த்தும் சரவணன் கவர்ச்சியாக இல்லை. கிக் சுத்தமாக இல்லை. கிளர்ச்சியாவது கொளர்ச்சியாவது, ஒரு மண்ணும் இல்லை.

திடுக்கிட்ட தீபா, படு கேவலமாக உணர்ந்தாள் தீபா.

கதைக்குத் தேவையில்லாத பின் குறிப்பு:

தீபாவின் அந்த கவர்ச்சி சுருள்முடியை சரவணன் உட்பட யாரும் பார்த்ததில்லை.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 25. பிரேக் அப்
## பெயர் எடுப்பது எப்படி

எப்பேர்ப்பட்ட பெண்ணையும் மடக்கிவிடுவான் என்று அலுவலகத்தில் பெயரெடுத்து இருந்தான் பிரதீப். ப்ளேபாய் என்றும் அவனுக்குப் பெயர் இருந்தது. பெயர் எடுப்பது எப்படி என்று இன்னும் பிரதீப்புக்கு விளங்கிய பாடில்லை. பிரதீப் ஒரு மடக்கு மஸ்தான் என்று அந்தப் பெரிய அலுவலகத்தில் வேலை செய்யும் அனைத்துப் பெண்களுக்கும் தெரிந்திருந்தது. பிரதீப்பைப் பற்றிப் பேச்சு வந்தால், தங்குளுக்குள் சிரித்துக்கொள்வார்கள். களுக் என்ற சத்தம் வயிற்றில் கிளம்பி தொண்டை வரை பயணப்பட்டு அமுங்கி விடும். பிரதீப்பை பற்றி நன்கு தெரிந்திருந்தும் அவனிடம் போய் வலியப் பேசி பிரதீப்பை மடக்கினார்கள் சில காட்டிளம் கன்னிகள். எத்தனைக்கெத்தனை கன்னிகள் பிரதீப்பை மடக்கினார்களோ அத்தனைக்கத்தனை பிரதீப் மடக்கு ராஜாவாகப் பெயரெடுத்து உயர்ந்தான்.

பிரதீப் அலுவலகத்திலேயே வேலை பார்க்கும் தீபா, கட்டுமஸ்தான அப்பா வசிக்கும் கட்டுப்பெட்டியான குடும்பத்தில் ஆடு சைஸுக்கு பசுமாடு இருந்தால் எப்படி இருக்குமோ, அப்படி இருந்த அம்மாவுக்கு பிறந்தவள். ஒம்பது பேரைக் காதலித்து ஒருவனையும் மணக்காமல் இருக்கும் இந்த கிலி காலத்தில், ஒருவனை மட்டுமே அரைகுறையாகக் காதலித்து அவனையே பிடிவாதமாகப் போராடி மணந்தவள் தீபா. இதற்காக அவள் அப்பா மற்றும் கணவன் இருவரிடத்திலும் போராட வேண்டி வந்தது அவளின் துரதிர்ஷ்டம். ஸ்லீவ்லெஸ், லிப்ஸ்டிக் என்றெல்லாம் மாடர்ன் மங்கையாக தீபா வலம் வந்தாலும் அந்த ஸ்லீவ்லெஸ்ஸிலும், லிப்ஸ்டிக்கிலும் இரு கட்டுப்பெட்டித்தனம் இருக்கத்தான் செய்தது. தன் கணவனை இன்னும் விழுந்து எழுந்து காதலிப்பதாகபலரிடமும் தொடர்ந்து சொல்லி வந்தாள். கணவன் படுக்கையில் ஜெண்டில் மேன் போல.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

மார்பகம் இன்னும் கிண்ணெனவும், இடை இன்னும் திண்ணெனவும் இருந்தது. இதற்கு மேல் கணவனின் ஜென்டில் மேன் தனத்தை இந்தக்கதை சோதிக்க விரும்பாததால், தீபாவின் அந்தரங்க உறுப்புகளுக்குள் நுழைந்து அளவெடுக்காமல் கதையின் முடிவை நோக்கிப் பாயப்போகிறது.

பிரதீப்புக்கு ஃபேஸ்புக்கில் மெசேஜ் அனுப்பிவிட்டு, நாவை இடப்பக்கமாக வெளியேற்றி வலிக்காமல் கடித்துக்கொண்டாள். கேடி என்றாள். பிரதீப் உடனே மெசேஜ் தட்டினான். ஹாய் தீபா...

நீட்டி முழக்கிப் பேசியதில், ‘தோ பாரு பிரதீப், உன்னை எல்லாரும் ப்ளேபாய்னு சொல்றாங்க. ஓப்பனா சொல்லிடறேன், எனக்கு அதிலெல்லாம் இஷ்டம் இல்லை. ஐ லவ் மை ஹப்பி சோ மச். உன் கூட ஜஸ்ட் ஃபிரண்டா இருக்கத்தான் விருப்பம்என்பது மட்டுமே மேட்டர்.’

ம், ஓக்கே, ஷ்யூர், அண்டர்ஸ்டுட், ச்சே அப்படில்லாம் இல்ல- இதெல்லாம் பிரதீப் டைப்பிய வார்த்தைகள்.

தனக்கும் ஒரு தூய்மையிலும் தூய்மையான தோழி வேண்டும் என்று நினைத்த பிரதீப் தீபாவை புனிதத் தோழியாக ஏற்றுக்கொண்டு, முதுகுப் பக்கம் தீபாவின் தலை இருப்பது போல நினைத்து பழகி வந்தான். இப்படியே ஆறு மாதம் பின்பக்கம் முகர்ந்து பார்க்காத இரண்டு அருமையான தெரு நாய்கள் போல வலம் வந்தனர், வாழ்க்கையை வெற்றி கொண்டனர்.

அந்த மூன்று நாட்கள் முடிந்த இரண்டாம் நாள் ஒரு ஹிந்திப்படத்தை பார்த்து முடித்ததும் பிரதீப்புக்கு போன் அடித்தாள் தீபா.

‘என் கிட்ட இவ்ளோ நாள் பழகறியே, என்னை எப்பவாவது செக்ஸியா பாத்திருக்கியா?’

‘ச்சே ச்சே சத்தியமா இல்ல தீபா.’

‘இல்லடா, நீ தப்பானவன்னு சொல்ல வரலை. என்னைப்பத்தி எனக்குத் தெரியணும். நான் உன்னை டெம்ப்ட் பண்ணதே இல்லையா? நான் அழகு இல்லையா? செக்ஸி இல்லையா?’

‘ச்சே, நான் உன்னை அப்பிடி நினைச்சிப் பாத்ததே இல்லையே.’

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

‘நீ நினைச்சிப் பாக்கலை, சரி. நான் அழகா, செக்ஸியா இருந்திருந்தா, உனக்கே அந்த எண்ணம் வந்திருக்கணும். பட் இப்ப கேக்கறதும் சும்மா தெரிஞ்சிக்கதான். எந்த ப்ராக்டிக்கல் நோக்கமும் இல்ல. ஸ்டில் ஐ லவ் மை ஹப்பி.’

‘ஐ அண்டர்ஸ்டேண்ட், இப்ப, அக்கா எவ்ளோ அழகா இருந்தாலும், செக்ஸியா இருந்தாலும் அந்த எண்ணம் வருமா? அதைப்போலத்தான் உன் கிட்டவும் அதைப்போல தோணலை.’

‘இல்லடா, அக்கா செக்ஸியா இருந்தா, சில பேர் இன்ஸெஸ்ட் ரிலேஷன்ஷிப் வச்சிக்கிறாங்க இல்ல?’

‘யேய், தீபா இன்செஸ்ட் வேற, அதுக்கும் அழகுக்கும் செக்சுக்கும் சம்மந்தம் இல்ல.’

‘இல்லடா, நான் அழகோ செக்ஸியோ இல்ல. நான் யாரையும் அட்ராக்ட் பண்ணவே இல்ல. என்னை பாத்து ஒரு செகண்ட் கூட உனக்கு எந்த ஃஃபீலும் வரலை இல்ல?’

லேசாக விசும்ப ஆரம்பித்தாள் தீபா!

‘சரி சொல்றேண்டீ, அழாதே. உன் முகம் எனக்கு ரொம்ப பிடிக்கும். பட் நீதான் தப்பா ஏதும் நினைக்கக்கூடாதுன்னு சொல்லிட்டியா, அதனால உன் முகத்தை நினைச்சிகிட்டு வேற ஒரு பொண்ணோட பாடியை நினைச்சி மாஸ்ட்ருபேட் பண்ணி இருக்கேன்.’

‘டேய் அப்ப என் முகம் மட்டும்தான் ஓக்கேவா? என் பாடி வேஸ்ட்டா.’

‘அப்பிடி இல்லடீ, இன்னொரு தடவை, நீதான் தப்பா நினைக்கக் கூடாதுன்னு சொன்னதால, உன் பாடியை நினைச்சிகிட்டு, இன்னொரு பொண்ணோட முகத்து கூட சேர்த்து மாஸ்ட்ரு பேட் பண்ணி இருக்கேன்.’

எப்போதோ எதற்கோ சந்தேகம் வந்து போட்ட ஸ்பை சாஃஃப்ட்வேர் மூலம் இந்த சம்பாஷனைகளை கேட்ட தீபாவின் கணவன், சரியான மெண்டலுங்க போல என நினைத்தவன், தீபாவின் அடுத்த கான்வர்சேஷனை கேட்டதும், ‘உன்னை டிவோர்ஸ் பண்றேண்டி தேவடியா’ எனக் கறுவிக்கொண்டான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

‘ச்சீ…அசிங்கம் புடிச்சவனே உனக்கு எப்ப பாத்தாலும் மாஸ்ட்ருபேட் மட்டும்தானா? இனிமே என் கூட பேசாத.’

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 26. பிரேக் அப்
## ஐ வான்ட் மோர்

**புணர்ச்சி-1**

தீபாவைப் பெருமையாகப் பார்த்துக்கொண்டே மெதுமெதுவாக இயங்கினான் ராஜ்குமார். தீபா ஃபேனைப் பார்த்துக்கொண்டு இருந்தாள். தீபாவின் தலையை வலியனாகத் திருப்பித் தன்னைப் பார்க்கச் செய்து, தபால் ஆஃபீஸ் முத்திரை போல தீபாவின் இதழ்களில் சாப்பா குத்தினான் ராஜ்குமார். உதட்டைச் சுளித்துக்கொண்ட தீபா, 'ராஜ், கொஞ்சம் ஃபேனை ஆஃப் பண்ணிடறியா' என்றாள். இயக்கம் நின்றது. 'ஷ்யூர் பேபி' என்றவன், பாதி புணர்ச்சியில் இருந்து விலகி, மின் விசிறியை அணைக்கச் சென்றான். செல்லும்போது தன் குறியைப் பெருமையுடன் பார்த்தபடியே சென்றான். தீபா சிவத்த உடலில் கருத்த புட்டத்தை பார்த்தபடி இருந்தாள். ஆடியபடி சென்ற புட்டங்கள், சூட்டு எடத்துல ஒக்காந்து எழுந்தா கருக்கத்தான் செய்யும் எனப் பேசியது போல இருந்தது. புட்டங்களுக்குப் பழிப்பு காட்டினாள் தீபா.

ஸ்விட்சை ஆஃப் செய்துவிட்டுப் படுக்கைக்குத் திரும்பிய போது, குறி கொஞ்சம் சோர்வடைந்தாற்போல பட்டது ராஜ்குமாருக்கு. அவசர அவசரமாக தீபாவின் மேல் படர்ந்தான். தீபா கால்களை இறுக்கிக்கொண்டாள். தேவையில்லாத பதட்டத்தைத் தணிக்க, புணர்ச்சியைத் தவிர்த்து, தீபாவின் கழுத்தில் வாய்க்கோலம் போட்டான் ராஜ்குமார். மீண்டும் உள்ளே புக முயற்சித்து, எழுச்சியைத் தக்க வைக்க வேண்டி, வேகமாக இயங்கினான். விரைவாக முடித்தான். முடித்த பின் வழக்கம் போல வேரறுந்த மரம் போல தீபாவின் மேல சாய, பொக்லைன் போல ராஜ்குமாரை பக்கவாட்டில் கிடத்தி, பாத்ரூமுக்கு எழுந்து போனாள் தீபா, சலனமில்லாமல்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

**புணர்ச்சி-2**

‘ராஜ்... ப்ளீஸ், பெயின்ஃபுல்லா இருக்கு. கொஞ்சம் மெதுவா செய்யேன்’ என்றாள் தீபா. ‘ஸாரி பேபி’ என்ற ராஜ்குமார் ரிதமை மாற்றினான்.

**புணர்ச்சி-3**

வழக்கமாகப் பாதியில் பொஸிஷனை மாற்றும் வழக்கம் இருப்பதால், பொஸிஷனை மாற்றக்கோரினான் ராஜ்குமார். ‘வேண்டாம், இப்பிடியே பண்ணு’ என்றாள் தீபா.

**புணர்ச்சி-4**

ஃபோர் ப்ளே முடித்து, உச்சத்துக்கு வந்துபோகும் சமயத்தில், ‘வயிறு வலிக்குது. கொஞ்சம் நேரம் கழிச்சு செய்யலாமா’ என்றாள் தீபா. ‘ஓக்கே பேபிமா’ என்றபடி தட்டிக்கொண்டே படுத்துக்கொண்டான் தன் நெஞ்சை. நெஞ்சு துடித்துக்கொண்டேயிருந்தது.

**புணர்ச்சி-5**

ஓரல் செக்ஸ் செய்ய முயன்றபோது, ‘வேணாம்டா, சீக்கிரம் அங்கயே செஞ்சிடு ப்ளீஸ்’ என்றாள் தீபா!

**புணர்ச்சி-6**

முடிந்தபோது, ‘ப்ச்’ என்றாள் தீபா

**புணர்ச்சி-7**

ராஜ்குமார் உச்சத்துக்கு வருகையில், ‘ப்ளீஸ் டோன்ட் ஸ்டாப்... டோன்ட் ஸ்டாப். ஐ வான்ட் மோர்’ என தீபா அலற அலற, ராஜ் குமார் வாந்தி எடுத்தது போல தளர்ந்து விழுந்தான்.

**புணர்ச்சி-8**

தீபாவின் பேன்டியை நளினமாக ராஜ்குமார் கழட்ட முயல்கையில், ‘இருடா... கொஞ்சம் ஏதாச்சும் ப்ளூ ஃபிலிம் பாக்கலாமா’ என்றாள் தீபா.

**புணர்ச்சி-9**

‘என்னடா ஆச்சி பேபி? ஏன் இப்பல்லாம் உன் பெனிஸ் ரொம்ப சின்னதா ஆயிடிச்சி’ என்றாள் தீபா!

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

**புணர்ச்சி-10**

தீவிரமாக ராஜ்குமார் இயங்கிக்கொண்டு, 'மை ப்ளடி பேபி' என அனர்த்திக்கொண்டு இருக்கையில், 'ஏண்டா இப்பல்லாம் மெஷின் பிஸ்டன் போல மெஷினரியா செய்யற? ஐ டோன்ட் ஹேவ் எனி ஃபீலிங்' என்றாள்.

**புணர்ச்சி-11**

'ஏதாச்சும் லூப்ரிகண்ட் போட்டுக்கலாமா? நீ ஏதாச்சும் டேப்லட் எடுத்துக்கறியா? கொஞ்சம் லென்த்தியா ஜாலியா வச்சிக்கலாம். ரொம்ப நாளாச்சி' என்றாள் தீபா.

புணர்ச்சி 12, 13, 14, 15, 15. 1, 15. 2, 16, 17, 17. 1, 17. 2, 17. 3, 18, 19, 20. புணர்ச்சி 21க்கு முன்பாக ராஜ்குமாருக்கு எரக்டைல் டிஸ்ஃபங்க்ஷன் அல்லது ப்ரீ மெச்சூர் எஜாக்குலேஷன் அல்லது இரண்டாலும் அவதிப்பட்டான். தீபா, 'உன்னால முடியல்லனா கஷ்டப்படவேணாம்டா செல்லம். நான் செக்ஸுக்காகவா உன் கூடப் பழகறேன்? உன் லவ் மட்டுமே போதும்' என்றாள். அதீத சந்தோஷப்பட்டான் ராஜ்குமார்.

அதற்குப்பின், ராஜ்குமார் முயலுகையில் எல்லாம், 'டேய் பேபி, சும்மா எக்ஸ்பெரிமெண்ட் பண்ணாதே. இது லைஃப், வெளாட்டு இல்ல' என திரும்பிப் படுத்தாள் தீபா. ராஜ்குமார் ஆர்வமாகச் செய்ய வரும்போது, 'இருடா... நான் டிரை பண்றேன்' எனக்கூறி, அவன் மேலமர்ந்து, 'எரக்ஷன் பத்தலை பேபி, இன்னும் கொஞ்சம் டிரை பண்ணு' எனக்கூறினாள். ரத்த ஓட்டம் தடுமாறி, மூளை சூடேறி, குறி சுருங்கியது.

துவண்டு பக்கத்தில் சரிந்தான். 'இதுக்குத்தான் வேணாம்னு சொன்னேன். சும்மா தூங்கு பேபி' எனக் கட்டிக்கொண்டாள்.

சில நாட்களுக்குப்பிறகு, காலையில் கண்விழிக்கையில் ஒரு கடிதத்தைக் கண்டெடுத்தாள் தீபா. உனக்கு இன்பம் கொடுக்க முடியாமல் என்று தொடங்கி செண்டிமெண்டாக நீண்டது கடிதம். கையெழுத்து இட்டிருந்த ராஜ்குமார், எதற்கோ, கீழே மொபைல் நம்பரையும் எழுதி வைத்திருந்தான். கடைசி வாக்கியம், நான் போகிறேன் என முடிந்து 6 புள்ளிகள் வைக்கப்பட்டு இருந்தன. எழுந்து டீ போட்டுக்கொண்டு செய்தித்தாளைப் பிரித்தாள். ஒரு

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

கற்பழிப்புச் செய்தி கண்ணில் பட்டது. ஏதோ செலிபிரிட்டியின் விவாகரத்துச் செய்தியை தவிர்த்தாள்.

சின்ன பெட்டிச்செய்தியில் இருந்த பெண்ணின் தற்கொலைச் செய்தியைக் கவனிக்கவேயில்லை. செய்தித்தாளைத் தூக்கிப்போட்டாள். ரெஸ்ட் ரூமுக்குள் நுழைந்தாள். ஹெட் போனில், எவனோ ஒருவன் வாசிக்கிறான், இருட்டில் இருந்து நான் யாசிக்கிறேன் என்ற பாடலை ஓட விட்டாள்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 27. பிரேக் அப்

## கண்ணனின் குழல்

ஆயர்பாடி உறங்கிக்கொண்டு இருந்தது. முன்னங்கால்களை நீட்டிக் கொட்டகையில் படுத்துக்கிடந்த மாடுகளின் வாயில் இருந்து கோழைகள் வழிந்து தரையில் கோலமிட்டபடி இருந்தன. கொட்டகையில் சில குறும்புக்கார ஆடுகள் குதித்து நடனத்தின் இரண்டு அசைவுகளை மட்டும் போட்டுவிட்டு மருங்க மருங்க விழித்தபடி மூன்றாம் காலை விசிறியபடி இருந்தன.

ஆயர்பாடியின் புராதன வீதியில் தூக்கக் கலக்கத்தோடு புல்லாங்குழலால் முதுகு சொறிந்து கொண்டே கண்ணன் நடந்து கொண்டிருந்தான். கட்டியிருந்த பஞ்சகச்சம் காலைத் தடுக்கியது. தூக்கத்தில் நெகிழ்ந்திருந்ததால் இந்த வினை. தடுக்கிய பஞ்சகச்சத்தைப் பாதியாக மழித்துக் கட்டிக்கொண்டு புல்லாங்குழலை வாயில் வைத்து ஊதாமல் ஊதுவது போல நடித்துக்கொண்டே, அந்த இசையில் லயித்தபடி நடை போட்டான்.

கண்ணனைக் காணத்துடிக்கும் கோபிகைகள் எல்லாம் குறட்டைவிட்டுத் தூங்கிக்கொண்டு இருந்தனர். அந்தக் குறட்டையின் ஒலியினூடாக அவர்களின் கனவில் ஊடுருவிப் பார்த்தால் கண்ணா கண்ணா எனக் கனவிலும் அலைபாய்ந்தபடி இருந்தனர். தூங்கிக்கொண்டிருந்த ஒரு கோபிகையின் குடில் வாசலில் கண்ணன் தன் புல்லாங்குழலைச்சொருகி வைத்துவிட்டுஉள்ளே நுழைந்தான். அந்தக் கோபிகையின் தந்தை, கோபிகையின் தாயின் மாரின் மீது தன் தடித்த கால்களைப் போட்டுத் தூங்கிக்கொண்டு இருந்தார்.

கண்ணன், அவரின் கால்களை எடுத்து அவரின் மனைவியின் தொடையின் மீது வைத்தான். மனைவி புரண்டு படுத்துக்கொண்டார். தந்தை திரும்பவும் தன் கால்களை மனைவியின் மார்பு என நினைத்துக்கொண்டு பின்னங்கழுத்தில் போட்டார். மனைவி தன்னை

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

மலைப்பாம்பு கவ்வுவதாக கனவு கண்டு கொண்டிருந்தார். அந்தக் கணவரின் புட்டத்தில் நறுக்கென்று கிள்ளிவிட்டு குறும்புக்காரக் கண்ணன் கோபிகையின் அறைக்குச் சென்றான். கண்ணனுக்கும் அடி சறுக்கும், அது புட்டமல்ல.

கோபிகை தன் கனவில் கண்ணா கண்ணா என அலைபாய்ந்துகொண்டிருக்கையில், கண்ணன் அந்த எழில் மிகு கோபிகையைத் தூக்கித் தன் மடியில் போட்டுக்கொண்டான். கோபிகையின் தலையை தடவிக்கொடுத்துக்கொண்டே, அவளின் கனவில் புகுந்தான். கண்ணனை எதிர்கொண்ட அந்தக் கோபிகை, வெட்கி, நாணி, முட்டிப்பொட்டுக் கண்ணனின் கால்களைப் பற்றிக்கொண்டாள். கண்ணன் குனிந்து அவளின் நெற்றியில் முத்தமிட்டு, கனவையும் நனவையும் ஒன்றாக்கியபோதும், அவள் விழித்துக்கொள்ளவில்லை. அவளின் இதழ்களில் சாந்தமாக முத்தமிட்டான். அவளின் உதடுகள் கனவிலும் நனவிலும் துடித்துக்கொண்டு இருந்தன. கனவில் அவளின் இடைகளின் இடைவெளியில் விளையாடிக்கொண்டே, நனவில் மடியில் இருந்து கீழே படுக்க வைத்தான். கனவில் கண்ணன் கட்டிப்பிடித்துக்கொண்டு இருந்தாலும், உண்மையில் கண்ணன் எழுந்து வெளியில் செல்வது, கனவில் அவளுக்குத் தாங்க முடியா துன்பத்தை உருவாக்கியது. கனவிலும் நனவிலும் அவள் அழ அழ கண்ணன் தன் புல்லாங்குழலை உருவிக்கொண்டு அந்த வீட்டைவிட்டு வெளியேறினான். வெளியேறுவதற்கு முன், அவளின் தாய், தன் கனவில் தன்னைக் கட்டிப்பிடித்துக்கொண்டிருப்பதையும் உதறிவிட்டு வெளியேறினான்.

சொருகியிருந்த புல்லாங்குழலை எடுத்துக்கொண்டு ராதையின் வீட்டை நோக்கி நடந்தான். வழியில் குறுக்கிட்டுக் குலைத்த தெருநாய்களுக்கு ஆட்டுப் புத்தியைக் கொடுத்தான். அவைகள் வாலைக் குறைவாக வெடுக் வெடுக் என ஆட்டிக்கொண்டிருக்க, சிரித்தபடியே ராதையின் வீட்டை அடைந்தான்.

ராதை அவளின் தோட்டத்தில் உலவிக்கொண்டு இருந்தாள். கண்ணனைப் பார்த்ததும், சலங்கை சத்தம் போடாமல் பிடித்துக்கொண்டு மான் போலவே குனிந்து ஓடி வந்தாள். கண்ணனை அணைத்துக்கொண்டாள். கண்ணனின் புல்லாங்குழலை வாங்கி, ஊதட்டுமா என்றாள். கண்ணன் சிரித்தபடி, காற்றை நான்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

கொடுக்கிறேன், நீ புல்லாங்குழலுக்குக் கொடு என்றபடி ராதைக்குக் காற்றைக் கொடுத்தான். ராதை வெட்கி, சொக்கி காற்றை வெளியிட, புல்லாங்குழல் அந்தரத்தில் பறந்து கொண்டிருந்தது.

ராதையை அள்ளி, தன் தோளைச்சுற்றி ஒரு சுழற்று சுழற்றி, தன் நடுவிரலில் நிற்க வைத்த கண்ணன், ராதைக்காகத் தன் புல்லாங்குழலில் கீதம் இசைத்தான். ராதை சுழன்றாள். தன் நடுவிரலை எடுத்துவிட்டு அங்கே புல்லாங்குழலை வைத்துவிட்டுச் சற்று இளைப்பாறினான் கண்ணன்.

புல்லாங்குழலில் இருந்து மீண்ட ராதை, எத்தனை கோபியருக்கு தரிசனம் கொடுத்துவிட்டு இங்கே வந்திருக்கிறீர்கள் என வினவினாள்.

ஒருத்தி வீட்டுக்கு மட்டுமே போனேன், அவள் கனவின் மூலம் அனைத்துக் கோபிகைகளின் கனவுகளுக்குள்ளும் சென்று கொண்டிருக்கிறேன், நடுவில்உன்னைப் பார்க்க ஓடோடி வந்தேன் என்றான்.

உங்கள் கடமையே கடமை என்றாள் ராதை.

இல்லை ராதா, என்னால் ஒருத்தி கனவுக்குள் மட்டும் செல்லவே இயலவில்லை, நேரில்தான் செல்ல வேண்டும் என்றான் கண்ணன்.

யாரவள் என்றாள் ராதை.

தீப ரஞ்சனி.

நீ உடைகளை மறைத்து வைத்த போது, அந்த உடைகள் இல்லாமல் எழுந்து வீட்டுக்குச் சென்றாளே, அவளா?

அவளேதான், அது மட்டுமல்ல. நான் குளிக்கும்போது எனதுடைகளைக் கவர்ந்துகொண்டு சென்றவள்.

அடி ராட்சசி... அவள் கனவில் உன்னால் புக முடியவில்லையா?

கனவில் மட்டுமல்ல, நனவிலும்.

நீ அவளைக் காதலிக்கிறாயா கண்ணா?

ஆம், அவளை மிக மிகக் காதலிக்கிறேன். அவளை மட்டுமே முதன்முதலில் காதலித்தேன். வெண்ணெய் திருடிக்கொண்டிருந்த காலத்தில் இருந்தே அவள் பழக்கம், ஆனால் அவள் மனதைத் திருட முடியவில்லை.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

மாயக்கண்ணா, இதுவும் உன் மாயமா? இல்லை ஏதும் விளையாட்டா? ஆயர்பாடியின் மொத்த கன்னிகைகளும் உன் புல்லாங்குழலுக்கு அடிமை. நீயோ தீபரஞ்சினி உன்னை ஏற்றுக்கொள்ளவில்லை எனச் சொல்கிறாய்.

ராதே, இப்போது அடுத்து தீபரஞ்சினியைத்தான் பார்க்கச் செல்கிறேன். விடை கொடு.

என் கண்ணே, கண்ணா, என் காதல் கண்ணா, தீபரஞ்சினியைப் போய் பார், எனக்குக் கண்ணில் நீர் முட்டிக்கொண்டு வருகிறது, உன் காதலை எண்ணி. உன்னை ஒருத்தி ஒதுக்குவாளா? என் காதல் உன் காதலைக் காக்கும். போய் வா.

கண்ணன் ராதையை விடுவித்துக்கொண்டு, தெருவில் இறங்கி நடக்க ஆரம்பித்தான். ஒரு கன்றுக்குட்டி துள்ளிக்கொண்டு வந்து கண்ணன் மீது வந்து மோதியது. அதை தடவிக்கொடுத்தான் கண்ணன். நிலா புவியில் இறங்கி கண்ணனின் நடைபாதைக்கு ஒத்தடம் கொடுத்தது. கண்ணன் தீபரஞ்சனி குடிலை அடைந்தான்.

தீபா கனவில்லாமல் தூங்கிக்கொண்டு இருந்தாள். தீபாவின் தலைமாட்டில் அமர்ந்து கண்ணன் புல்லாங்குழல் வாசித்தான். மோன நிலைக்குச் சென்றான். கண்ணன் கனவில் வந்த தீபா, போய்விடு கண்ணா என்றாள்.

திடுக்கிட்டு விழித்த கண்ணன் தீபாவைப் பார்த்தான். தீபா இன்னும் ஆழ்ந்து தூங்கிக்கொண்டு இருந்தாள். இரு விழிகளும் இமைகளுக்குள்ளே அலைபாய்ந்து கொண்டிருந்தன. தன் முன்தலையில் வைத்திருந்த மயிலிறகு நகர்ந்து பின்னங்கழுத்தில் இடையூறு செய்துகொண்டிருந்ததை எரிச்சலுடன் எடுத்த கண்ணன், அதை தீபாவின் கன்னத்தில் வருடினான்.

கண்களைத்திறக்காத தீபா, நடுக் கடலலை போலப் எழுந்தாள்.

கண்ணா, சற்று விலகி உட்கார். கன்னியர்கள் உறங்குகையில் அருகமர்வது பண்பன்று என முகத்தை இடதுபுறம் திருப்பியவாறு சொன்னாள்.

விலகியமர்ந்த கண்ணன், கண்ணே தீபா, உன் மீதான காதலினால்தானே இந்த இரவினில் ஓடோடி வந்தேன், ஏன் எப்போதும் பாராமுகம் என வினவினான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

கண்ணா, உன் காதல்களுக்கான அவதார காரணங்களிருக்கலாம். ஆனால் என்னால் கோபிகைகளுடன் ஒரு கோபிகையாக ஒன்ற முடியவில்லை. எனக்கான கண்ணன் எனக்கு மட்டுமே. அது இந்த ஜென்மத்தில் சாத்தியமில்லை. நீ உன் விளையாட்டை நடத்து. என் மீதான உன் காதலை அடுத்த ஜென்மத்தில் பார்த்துக்கொள்ளலாம் என்றாள்.

தீபா, எனக்காக கோபிகையர் ஏங்கிக்கொண்டு இருக்கையில், நான் இப்படி உன்னிடம் கெஞ்சிக்கொண்டிருப்பதை ஆயர்பாடி மக்கள் நம்பவே மாட்டார்கள்

கண்ணா, எனக்கும் உன் மீது காதல்தான். அது இந்த அவதாரத்தில் ஈடேறாது. எனக்கு ஒரு வரம் கொடு.

என்ன வரம் தீபா?

கலியுகத்தில் நீ மனிதனாகப் பிறக்க வேண்டும். நீ அவதாரம் என்றே யாருக்கும் தெரியலாகாது. நீ என் பின்னால் சுற்ற வேண்டும். என்னை மட்டுமே காதலித்து என்னை மட்டுமே மணக்க வேண்டும்.

தந்தேன் தீபா. ஆனால் இந்த ஜென்மத்தில் நீ?

நான் மற்ற இடையர்களைக் காதலித்துக்கொள்கிறேன்.

மற்ற இடையர்களா?

அனைத்துக் கோபிகைகளும் உன்னைக் காதலித்தால், இருக்கும் இடையர்களுக்கு ஏது வழி கண்ணா!

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 28. பிரேக் அப்
## மின்ட்ரூவைப் பற்றி கிசுகிசு

அந்தப் பணக்கார நண்பனின் பண்ணை வீட்டில் ஆல் இன் ஆல் அழகு ராஜா மிண்ட்ரூ தான். மிண்ட்ரூ என்ற பெயர் விசித்திரமாகத் தெரிந்தாலும், நான்கு முறை கூப்பிட்ட பிறகு மிண்ட்ரூ என்ற பெயர் மட்டுமல்ல, ஆளும் சாதாரணமாகத்தான் ஆகி விடுகிறான். மிண்ட்ரூ அந்தப் பண்ணை வீட்டில் எல்லா வேலையும் செய்வான். உடனே அழுக்கு வேட்டி, கிழிந்த சட்டை என்றெல்லாம் கற்பனையைச் சிதறடிக்க வேண்டாம். ஜீன்ஸ், சற்றே லூஸான ஷர்ட் அல்லது டீ ஷர்ட். இந்த உடைகளெல்லாம் நண்பன் பயன்படுத்திப் பின் மிண்ட்ரூவுக்கு கொடுத்தது. நண்பனைவிட மிண்ட்ரூவுக்கு அருமையாக செட் ஆனது. சுமாராக ஆங்கிலமும் பேசுவான் மிண்ட்ரூ. மிண்ட்ரூ ஓட்டுவது யமஹா ஆர் எக்ஸ் 100.

மிண்ட்ரூவுக்குக் கோபமே வராது. சிரித்தபடியே இருக்கும் முகம். 100 ஐட்டம் வாங்கி வரச்சொன்னாலும், புரியாத மாதிரியே முகத்தை வைத்துக்கொண்டு, சரியாக 100 ஐட்டத்தையும் வாங்கிக்கொண்டு வந்து விடுவான். சற்றே கோணலாகச் சிரிப்பான். ரஜினி விரைப்பாக உடலை வைத்துக்கொண்டு கோணலாகச் சிரிப்பதை இவன் உடல் விரைப்பில்லாமல் சிரிப்பதால் ஸ்டைலாக இருக்காது.

மிண்ட்ரூவைப்பற்றி ஒரு கிசு கிசு.

மிண்ட்ரூ, நள்ளிரவில் வெளியே கிளம்பி, பிளாட்ஃபாரத்தில் படுத்துக் கிடக்கும் பிச்சைக்காரி, பைத்தியக்காரி போன்றவர்களைப் புணர்கிறான் என்பதுதான் அந்த கிசுகிசு.

யாரும் இதைப்பற்றி அவனிடம் கேட்டார்களில்லை. ஓனர் நண்பன் உட்பட.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

தூக்கம் வராத ஓர் இரவில் கடும் சரக்கின் விளைவால் வந்த தலைவலியால் மாமரத்தடியில் நான் அமர்ந்திருக்கும்போது மிண்ட்ரூ யமஹா ஓட்டிக்கொண்டு பண்ணை வீட்டுக்குள் நுழைந்தான்.

பேச்சுக்கொடுத்து, அது பாட்டுக்குப் போன பின், என் போதை கொடுத்த திமிரால் அதைக் கேட்டே விட்டேன்.

அவனும் போதையில் இருந்திருப்பான் போல, அதெல்லாம் உண்மைதான் சார், ஆனா நீங்க நினைக்கிற மாதிரி இல்ல என்றான்.

என்னா, நான் நினைக்கிற மாதிரி இல்ல என்றதும்,

‘பிளாட்ஃபார்ம்ல படுத்துக் கிடக்கிறவ எல்லாம் அசிங்கம், அழுக்கு புடிச்சவன்னு நினைக்கிறீங்களா? அதெல்லாம் கெடையாது. பைத்தியக்காரி எல்லாம் நாறுவான்னு நெனைக்கிறீங்களா? அதுவும் கெடையாது’ என்றான்.

எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. ஏதோ வித்தியாசமாகச் சொல்லப்போகிறான் என, கம்மென்று இருந்தேன்.

வெளிலதான் அழுக்கு, அசிங்கம் எல்லாம். உள்ள தும்பைப்பூ சார்’ என்றான்.

‘என்னா மிண்ட்ரூ சொல்ற?’

‘எனக்கு மொதல்லேர்ந்தே சாதா பொண்ணுங்க மேல ஒரு இது இல்ல சார். இந்த அழுக்கு பொண்ணுங்க மேல தான் ஒரு கிக்கு. ஆனா தயக்கம் இருந்திச்சி. ஒருநாள் போதைல, பிளாட்ஃபார்ம்ல படுத்துக் கெடந்த ஒருத்தி பக்கத்துல போய்ப் படுத்துட்டேன். கொமட்டலாதான் இருந்திச்சி. ஆனா கொஞ்ச நேரத்துக்கு அப்புறம், அதெல்லாம் போயிடிச்சி. அவ திரும்பி என்னைக் கட்டிப்பிடிச்சா சார், அப்பிடி இருந்துச்சி. ஓப்பனா சொல்றேன் சார், அவ டிரஸ்ஸை அவுத்துப் பாத்தா, நம்ம நடிகைங்க தோத்துடுவாங்க சார். மல்லிப்பூ போல தொடை சார். பச்சையா சொல்றேன் சார்... டைய அவ்ளோ க்ளீனா வச்சிருந்தா சார். சொக்கிப்போயிட்டேன் சார். அவ்ளோ அழுக்குக்குள்ள, இவ்ளோ பரிசுத்தமான்னு சொக்கிப்போயிட்டேன் சார். தேவதைன்னா, வெள்ளை உடை போட்டவ தேவதை இல்ல சார். அழுக்கு, சேறு சகதியுமா இருக்குற ஒருத்தி, அதை உதிர்த்துகிட்டு, திடீர்னு, பளீர்னு ஒரு அழகைக் காட்டறா இல்ல சார், அவதான் சார் தேவதை.’

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

எனக்கு தண்ணீர்த் தாகம் எடுத்தது. அவனைத் தடுக்காமல் அமைதியாக இருந்தேன்.

‘அதுக்கு அப்பறம் எனக்கு இவளுங்க கூடப் பழகிடுச்சி சார். பைத்தியக்காரி எல்லாம் பைத்தியக்காரி இல்ல சார். உள்ள எல்லாம் தங்கம் சார். கிட்ட போயி படுப்பேன். என் வாசம் தெரிஞ்சி வந்தான்னா, வந்ததுதான். வேணாம்னா எழுந்து வந்துட்டே இருப்பேன். ஆனா சும்மா போய்ப் படுத்துக்கலாம்னு நினைச்சிக்காதீங்க. நீங்கள்லாம் போய்ப் படுத்தா ஊரைக் கூட்டிடுவாளுங்க. அதுக்கெல்லாம் ஒரு இது வேணும். நான்லாம் நின்னு நிதானாமா செய்வேன் சார். எவ்ளோ சொகம் வந்தாலும் ஒரு சத்தம் வெளில விடக்கூடாது, ப்ளாட்ஃஃபார்ம் இல்லியா? அவளுங்களும் அவ்ளோ சொகத்தையும் அடக்கிக்கிட்டு நாக்கைக் கடிச்சிகிட்டு கெடப்பாளுங்க. சமயத்துல நாக்குல ரத்தம் வந்துடும்.’

கிர்ரென்று இருந்தது எனக்கு. ‘இதுவரைக்கும் எத்தனை பேர்கூட படுத்திருப்ப மிண்ட்ரூ?’ இவ்வளவு அப்பட்டமாகக் கேட்பவனில்லை நான். நாக்கைக் கடித்துக்கொண்டேன்.

‘நெறைய பேர் சார், கணக்கில்லை. ஆனா ஒருத்தி மட்டும் மறக்கலை சார்.’

‘யார்அந்த தேவதையின் தேவதை?’ கொஞ்சம் நக்கலாகத்தான் கேட்டு விட்டேன்.

அவன் அதைக் கண்டு கொள்ளவில்லை.

‘லவ் ஆயிடிச்சி சார். அவ கூட அடிக்கடி படுத்துக் கெடந்தேன். சாப்பாடு குடுப்பேன். ஒரு மாதிரி பாசமாயிடிச்சி. அவளுக்கும் என்னை ரொம்ப பிடிச்சிடிச்சி. அதனால அவ, அந்த அழுக்கு டிரஸ்ஸு, அசிங்கம் எல்லாத்தையும் விட்டுட்டு, நல்லா குளிச்சிட்டு, நல்ல புடவை கட்டிட்டு, சாமி இட்லி கடைல வேலைக்கு சேந்துட்டா சார்.’

‘சரி.’

‘அதுக்கு அப்புறம், எனக்கு அவளைப் புடிக்காம போயிடிச்சி சார். அந்த பழைய கிக்கு இல்ல.’

‘அடப்பாவி...’

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

‘நான் அதுக்கப்பறம் பிளாட்ஃபார்ம் பக்கம் ஒதுங்கினாலும், இவ பின்னாலயே வந்து வெரட்டி விட்டுடுவா சார்.’

‘ஓ...’

‘இப்ப அவ கிட்டயும் போறதில்லை. பிளாட்ஃபார்முக்கும் போவ விடமாட்டேங்கிறா. நான் அவளைப் பிரிஞ்சிட்டேன். அவளை எப்பிடி கைட்டி உடறதுன்னு தெரியலை சார். எதுனா வழி இருக்கா சார்?’

நான் உங்களிடம் சொல்ல மறந்து விட்டேன், நான் டிவோர்ஸ் ஸ்பெஷலிஸ்ட் லாயர்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 29. பிரேக் அப்

## தொப்பை

குழந்தை தூங்கிக்கொண்டு இருந்தான். அவனைத் தூக்கி ஓரமாகப் போட்டுவிட்டுக் கணவனுடன் ஒட்டிக்கொண்டாள் தீபா. சேற்றில் முளைத்த செந்தாமரை போல இருந்தாள் நைட்டியில் இருந்த தீபா. என்ன ஒரு திருத்தம் என்றால், செந்தாமரை தண்டில் உப்பிக்கொண்டிருந்தால் எப்படி இருக்கும்? அப்படி இருந்தது தீபாவின் தொப்பை.

அதற்குச் சற்றும் குறையாமல் இருந்தது செந்தமிழனின் தொப்பை. என்ன வித்தியாசம் எனில், தீபாவின் தொப்பை வயிற்றில் மட்டும் உருண்டையாக இருந்தது. செந்தமிழனின் தொப்பை, மார்பில் இருந்து ஆரம்பித்து, எக்சர்சைஸ் செய்து உருவாக்கியது போல திண்மையாக, வலுவான தொப்பையாக இருந்தது. கதையின் தலைப்புக்காக இப்படி தொப்பையைப் பற்றி பிரஸ்தாபிக்கவில்லை. கதை எழுதி முடித்த பின்புதான் கதைக்கே தலைப்பு வைக்கப்பட்டது. சென்ற வாக்கியத்தில் இருக்கும்லாஜிக்கல் மிஸ்டேக்கை எல்லாம்கண்டுபிடிக்காமல் அடுத்த பாராவை படித்தால் கதை சுவாரசியமாக இருக்கும்.

‘ஏங்க நான் ஒரு பிஸினஸ் பண்ணலாம்னு இருக்கேன்’ என்றாள் தீபா.

‘நீ என்னா நினைக்கறியோ பண்ணு’ என்று சொல்லியபடி, தீபாவின் நைட்டிக்குள், கீழே இருந்து கைகளைவிட்டுத் தூக்கினான் செந்தமிழன்.

‘அதைத் தடுக்காமல், நிஜமாத்தாங்க’ என்றாள் தீபா.

தீபா பேன்டி போட்டிருக்க வில்லை. அதனால் கொஞ்சம் சுவாரசியம் இழந்த செந்தமிழன், தீபாவை முத்தமிட்டான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

அந்த முத்தத்தை தேங்காய்ப்பத்தை போன்று தின்ற தீபா, ‘சொல்லுங்க, நான் பிஸினஸ் பண்ணட்டுமா’ என்று மறுபடியும் தீர்க்கமாகக் கேட்டாள்.

‘என்னா, டப்பர்வேரா?’ என்று அலட்சியமாகக் கேட்ட செந்தமிழன், அவளின் முலைகளை பிடித்துப் பார்த்தான்.

‘ச்சே சே, அதெல்லாம் இல்லீங்க’ என்றபடி முலைகளை அவனது கைகளில் இருந்து விடுவித்துக்கொண்டாள். வெறுங்கையான செந்தமிழன் திரும்பவும் நைட்டிக்குள் கையைவிட்டு பின்புறத்தைப் பற்றினான்.

எழுந்து உடகார்ந்து கொண்டாள் தீபா. பின்புற எலும்பு குத்தியதால், கையை வெடுக்கென இழுத்துக்கொண்ட செந்தமிழன், கடுப்புடன், ‘ஒரு பால் போட்டு குடுடீ’ என்றான்.

‘இருங்க’ என்று சொல்லியபடியே நைட்டியை சரி செய்துகொண்டு அமர்ந்தபடி, ‘இது ஹெல்த் கேர் பிஸினஸ்’ என்றாள்.

‘சரி ஏதாச்சும் செய்யி. எப்பிடி இருந்தாலும் எம் எல் எம்மாத்தான் இருக்கும். லாபம் வரலைன்னாலும் பராவால்ல, நஷ்டம் பண்ணாதே. உறவுக்காரங்க கிட்ட பேரைக் கெடுத்துக்காதே’ என்றான்.

‘அதெல்லாம் கிடையாது. நல்ல லாபம் வருமாம். நீங்கதான் சப்போர்ட் பண்ணனும்’ என்று அவள் சொல்லிக்கொண்டு இருக்கையிலேயே, அவளை மீண்டும் படுக்கையில் தள்ளினான். அவளும் விழுந்தாள். தொப்பையும் தொப்பையும் அமுங்க அமுங்க உறவு கொண்டன.

மறுநாள், செந்தமிழன் அலுவலகம் கிளம்பிக்கொண்டு இருக்கையில், தீபா கல்யாணத்துக்குச் செலவது போலப் பகட்டான சூரிதார், மேக்கப்போடு வலம் வந்து கொண்டிருந்தாள். ‘எங்கடீ போற?’ என செந்தமிழன் கேட்டதற்கு, ‘டீம் லீடர் வர்றாரு’ என்று சொன்னாள்.

டீம் லீடர் ஹாரன் அடித்தான். தீபா ஓடோடிச் சென்று கதவைத்திறந்தாள். டீம் லீடர் டீக்காக சோஃபாவில் வந்து அமர்ந்தான்.

ஷேவ் செய்து செய்து கடினமாகிப்போன கன்னங்கள். குறி இருக்கும் இடத்தில் ஒரு கோவைக்காயையும் இரண்டு நூல்கோலையும் வைத்தது போல பேண்ட் பிதுக்கிக்கொண்டு இருந்தது. நல்ல தையல்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

போட்ட பிராண்டட் பேண்ட் போல. இரண்டு நூல்கோல் பிரஷரையும் தாங்கிக்கொண்டு கிழியாமல் இருந்தது. அந்த காட்சியைப் பார்த்த செந்தமிழன் வெலவெலத்துப்போனான். இது மட்டும் வெடித்தால், நம் வீடே தரை மட்டம் ஆகிவிடும் என அவனுக்குத் தோன்றியது.

டீம் லீடர், நூல்கோல் ஆடாமல் அசையாமல், ஒரு கிட் எடுத்து தீபாவுக்குக் கொடுத்தான். தமிழையே ஆங்கிலம் போல சிண்டாக்ஸ் சிண்டாக்ஸாகப் பேசிக்கொண்டு இருந்தான். கிச்சன் பாக்கலாமா என்றான். கிச்சனில் போய், ஏதேதோ டெமோ கொடுத்தான், ஜோக் அடித்தான். செந்தமிழனுக்குச் சிரிப்பே வரவில்லை. தீபா விழுந்து விழுந்து சிரித்தாள்.

கடைசியாக நூல்கோல் செந்தமிழனுக்கு கை கொடுத்தான். கை தடிமனாகவும் விரைப்பாகவும் இருந்தது. ரயில் கதவைத் திறப்பதைப்போன்ற அழுத்தத்தில் செந்தமிழன் கையைப்பிடித்துக் குலுக்கினான். அதே குலுக்கலை தீபாவுக்கும் குலுக்குகையில், தீபா ஈ என இளித்தாள். நூல்கோல் அதே விரைப்புடன் வெளியேறினான்.

அதன்பிறகு, அடிக்கடி நூல்கோலைப்பற்றிப் பேச ஆரம்பித்தாள் தீபா.

இப்பிடி சொல்றாருங்க, அப்பிடி சொல்றாருங்க என தீபா சொன்னபோதெல்லாம், அவன் சரியில்லை, நிறுத்திக்கோ என செந்தமிழன் சொல்லியபடி இருந்தான்.

கொஞ்ச நாட்களில் நூல்கோலைப் பற்றிச் சொல்வதை நிறுத்திக்கொண்டாள். வீட்டுக்கு ஏதேதோ பார்சல்கள் வந்தன. செந்தமிழனின் பணங்கள் கரைந்தன. டீம் மீட்டிங், ரீஜினல் மீட்டிங் என அடிக்கடி தீபா வெளியே செல்ல ஆரம்பித்தாள்.

ஒருநாள், அந்த நூல்கோலுடன் ஓடிப்போனாள். செந்தமிழனுக்குத் தெரிந்தது, அவள் நூல்கோலுடந்தான் ஓடிப்போயிருப்பாள் என்று. எந்த உணர்ச்சிக்கும் இடம் கொடுக்கலாகாது என அமைதியாக இருந்தான். குழந்தையைக் கவனிக்க மட்டும் ஆள் போட்டான். குழந்தை 2ம் வகுப்பு படித்துக்கொண்டு இருந்தது.

ஓடிப்போய் இரண்டாவது வாரத்தில் தீபா வீட்டிற்கு வந்து விட்டாள். செந்தமிழன் அலுவலகம்விட்டு வருகையில் வீட்டில் வழக்கமாக வேலைகளைச் செய்து கொண்டிருந்தாள். செந்தமிழன் ஏதும் கேட்டுக்கொள்ளவில்லை. அவளும் ஏதும் சொல்ல வில்லை.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

அன்று இரவு குழந்தை கடைசிவரை நிம்மதியாக இருவருக்கும் இடையில் படுத்து உறங்கியது. இதுவே இந்தக் கதை முடியும் வரையிலும் தொடர்ந்து கொண்டிருக்கிறது மற்றும் முடிந்த பின்னும் தொடர்ந்து கொண்டிருக்கும். நீங்கள் நம்பவில்லை என்றால் கதையை இன்னும் 50 வருடம் கழித்து முடிக்கலாம்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 30. பிரேக் அப்
## ப்ளீஸ் வேணாம்டா!

இன்னும் பத்து நாட்களில் கல்யாணம் என்பதால், ஊருக்குப் போக டிக்கட் எடுத்து விட்டாள் தீபா. கடைசியாக ஒருமுறை சந்தித்து விடலாம் என வண்ணன் வற்புறுத்தியதால் அந்த பீச் ரெஸார்ட்டுக்கு வர ஒத்துக்கொண்டாள். வழக்கம் போல வண்ணன் பிக்கப் செய்ய லேட் செய்தான். அந்த பஸ் ஸ்டாண்டில் நின்றுகொண்டு மொபைலை நோண்டிக்கொண்டு இருப்பதன் மூலம் தன் முலைகளை முறைத்துக்கொண்டிருக்கும் பார்வைகளில் இருந்து தப்பினாள். அவள்தான் தப்பினாளே ஒழிய, முலைகள் மாட்டிக்கொண்டன.

தாமதமாக வந்த வண்ணன் பரபரப்பான உடல்மொழியில் கதவைத் திறந்து விட்டான். ஏறி அமர்ந்த தீபா கழுத்தில் தோன்றிக் கீழே இறங்கிக்கொண்டிருந்த வியர்வையைத் துடைத்துக்கொண்டாள். ஏசியை தன் மார்பை நோக்கி வைத்துக்கொண்டாள். கார் ஈசிஆரில் வழுக்கிப் பாய்ந்தது.

ரெஸார்ட்டுக்குள் செக் ஆனதும் தீபாவை அணைத்தான் வண்ணன். மாறி மாறி முத்தமிட்டான். தீபா பெரிதாக இசைந்து கொடுக்காதது போல இருந்தது வண்ணனுக்கு. காதல் முத்தங்களைத் தவிர்த்து, காம சீண்டல்களை உடைக்குள் கை நுழைத்துச் செய்து பார்த்தான். தீபாவிடம் இருந்து லேசான காம முனகல்கள் எழுந்ததை அடுத்து திருப்தியுற்ற வண்ணன் அவளை விடுவித்து ரெஸ்ட்ரூம் சென்றான்.

நீண்ட நாட்கள் கழித்துச் சந்திப்பதால், உடனே அவளைப் புணரவேண்டும் என்ற நோக்கத்துடன் பதட்டத்துடன் சிறுநீர் கழித்தான்.

வெளியே வந்ததும் தீபாவை தூக்கிப் படுக்கையில் போட்டு அவள் மீது படர்ந்தான். தீபா வண்ணனை அணைத்துக்கொண்டாலும்,

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

இறுக்கி அணைத்துக்கொள்ளவில்லை. மேலும் புணர்ச்சிக்குத் தயாராக இருப்பது போன்ற உடல்மொழி இல்லாமல் கால்களை சேர்த்து வைத்தே படுத்து இருந்தாள்.

தன்னுடைய டாப்ஸை கழற்ற அனுமதித்த தீபா, முலைகளை மூச்சு முட்ட முட்டிக்கொண்டிருந்ததை அனுமதித்த தீபா, தன்னுடைய பேன்டியை கழற்றும் போது ‘வேணாம்டா’ என்றாள்.

‘ஏண்டீ?’

‘இல்லடா, அடுத்த வாரம் கல்யாணம். இப்ப நாம செஞ்சிட்டா, அவரு செய்யும் போது கண்டுபிடிக்க சான்ஸ் இருக்க இல்ல’ என்றாள்.

‘அடிப்பாவி, அதெல்லாம் கண்டு புடிக்க முடியாது டீ. நீ காலை டைட்டா வச்சிக்கோடி’ என்றான்.

‘இல்ல வேணாண்டா’ என்றாள்.

‘சரி, பர்ஸ்ட் நைட் அன்னிக்கே நீ அவரை செய்ய அலோ பண்ண போறியா?’

‘தெரியலைடா...’

‘வேணாண்டீ, அலோ பண்ணாத. உடனே ஃபக் பண்ண விட்டின்னா, டவுட் வரும். ஃபர்ஸ்ட் டே டயர்டா இருக்குன்னு தூங்கிடு. அப்புறம் கிஸ் அடிக்கிறது, கட்டிப்பிடிக்கிறது எல்லாம் அலோ பண்ணு. ப்ரஸ்ட் எல்லாம் தொடும்போது, நான் முன்னல்லாம் தொடும்போது துடிப்பியே, அதைப்போல துடிக்கணும், புரியிதா? இடுப்பை தொடும்போது, ஒரு வெட்டு வெட்டி அவரோட பின் தலைமயிரை இறுக்கி பிடிச்சி இழுக்கணும்.’

‘ம்ம்... பாத்துக்கறேன், பயமாத்தான் இருக்குடா.’

‘ஃபக் பண்ண நாலைஞ்சி நாள் முயற்சி பண்ணதுக்கு அப்புறம் அலோ பண்ணு. முத நாள் வலிக்கிதுன்னு துடியா துடி. பொண்ணு துடிச்சா, எப்பேர் பட்ட ஆளும் மனசு மாறிடுவான். அதுவுமில்லாம நீ வர்ஜின்னு நினைச்சி ஜாலி ஆயிடுவான். அடுத்தடுத்து முயற்சி பண்றப்ப, காலை சேத்து இறுக்கி வச்சிக்கோ. நமக்கு ஆர்கசம் வர்றப்ப இறுக்கி பிடிச்சிப்ப இல்ல, அது போல எப்பவும் இறுக்கி புடிச்சிக்கோ, டவுட் வராது.’

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

‘சரிடா’ என்றவள் எழப் பார்த்தாள்..

வண்ணன் மீண்டும் அவளைப் படுக்க வைத்து, பேண்டியைக் கழட்ட முயற்சித்தான்.

‘வேணாண்டா, பயமா இருக்குன்னு சொன்னேன் இல்ல?’

‘இல்லடீ, நான் எப்பவும் பண்ற மாதிரி, ஃபாஸ்டா, ஹார்டா பண்ணலை, பொறுமையா, சாஃப்டா பண்ணிக்கறேண்டீ, ப்ளீஸ்.’

‘ப்ளீஸ்டா, எனக்கு மூடே இல்லை. பயமா இருக்கு. புரிஞ்சிக்கோ.’

‘சரி, ப்ளோ பண்றியா?’

‘வேணாம்னா ஒரு தடவை சும்மா விடமாட்டியா? நிறைய பேசலாம்னுதானே வரச்சொன்ன?’

‘சரிடீ, செய்யலை’ என்றவன் எழுந்து உட்கார்ந்தான். ‘சரி, கல்யாணம் ஆனதுக்கு அப்புறம், நாம எப்ப மீட் பண்றோம்? உன் புருஷன் இல்லாதப்ப உன் வீட்டுக்கு வந்து ஜாலியா இருக்கலாமா’ என்றான்.

‘இல்லடா, வேணாண்டா. இதோட போதும். அவனும் பாவம்டா. இனிமே நாம மீட் பண்ண வேணாம், அவன் என்னை ஆறுவருஷமா உயிருக்கு உயிரா லவ் பண்ணிட்டு இருக்கான்டா’ என்றாள் தீபா!

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 31. பிரேக் அப்
## மேல் தட்டு மக்கள்

மேல்தட்டு மக்கள் வாழும் பகுதியை ஒட்டி ஒரு சிறு குப்பம் இருந்தது. அந்தக் குப்பத்தைத் தாண்டி லோயர் மிடில் க்ளாஸ் மக்கள் வாழும் பகுதி இருந்தது. குப்பத்தில் ஒரு அழகி இருந்தாள். அவள் பெயர் குஞ்சாரம்மா. இவள்தான் கதையின் ஹீரோயின். பெரும்பாலும் தாவணி போட்டுக்கொண்டிருப்பாள். குப்பத்தில் இருந்தாலும் தனக்கு ஏற்ற பிராவை வாங்கத் தெரிந்திருந்தது குஞ்சாரம்மாவுக்கு. சிவப்பு கலர், பச்சை கலர்ரவிக்கை அணியும்போதெல்லாம் வெள்ளை வெளேரென்று பிரா அணிவது வழக்கம். மஞ்சள் கலர் ரவிக்கை அணிகையில் என்ன கலர் பிரா என்று சரியாக சொன்னீர்கள் என்றால் மேற்கொண்டு கதைக்குள் போகலாம்.

கருப்பு கலர் பிரா. சரியாக சொன்னவர்கள் கதைக்குள் போகலாம். தவறாகக் கணித்தவர்கள், கணித்த கலர் பிராவை வாங்கி போட்டுக்கொண்டு ஒருநாள் அலுவலகம் சென்று வந்து கதையைத் தொடரலாம். நான் ஆண்களைச் சொன்னேன்.

குஞ்சாரம்மா, பாலியல் தொழிலாளி. அவளிடம் பாலியல் தொழிலாளி என்று சொன்னால், என்னாது பாலிடாயில் குடிக்கணுமா என்று சீறுவாள். அவள் அழகாக இருந்ததாலோ என்னவோ, அவளை லோயர் மிடில் க்ளாஸ் பகுதி மக்கள் விபச்சாரி என்றோ, தேவடியா என்றோ அழைக்கத் துணிந்ததில்லை. அவ ஒரு மாதிரி என்பதோடு நிறுத்திக்கொண்டனர். இந்த லோயர் மிடில் க்ளாஸ் ஏரியாவில் வசிக்கும் சங்கருதான் கதையின் ஹீரோ என்பதாக வைத்துக்கொண்டு இந்தக் கதை ஆரம்பிக்கிறது. கதையின் போக்கில் யார் வேண்டுமானாலும் ஹீரோ ஆகலாம். ஆனால் குஞ்சாரம்மாதான் ஹீரோயின்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

கதைக்குத் தேவையான ஒன்லைன் ஒன்றை இப்போதே சொல்லி விடலாம். இந்த லோயர் மிடில் க்ளாஸ் பகுதிக்கு அப்பால் ஒரு அப்பர் மிடில் க்ளாஸ் மக்கள் வசிக்கும் ஏரியா உள்ளது. கதையின் ஆரம்பத்தில் வந்த மேல்தட்டு மக்கள் வசிக்கும் பகுதி கதைக்குத் தேவையில்லாததுதான். ஸ்டார்டிங் டிரபுளால் கதைக்குள் வந்து விட்டது.

குஞ்சாரம்மா அவ்வளவு எடுப்பாகவும், அழகாகவும் இருப்பாள். சராசரியைவிட உயரம். பின்னழகைத் தாண்டி விழும் கூந்தல். கூந்தல் வளைந்து நெளிந்து விழுவதே அவளின் பின்னழகை பறைசாற்றும். குஞ்சாரம்மா என்னதான் விலைமாதாக இருந்தாலும், கூப்பிட்டால் உடனே வந்து விடமாட்டாள். அதாவது கூப்பிடவே கூடாது. கூப்பிட்டால் குர்யோ முர்யோ என்று கத்தி குப்பத்து ஆட்களைக் கூட்டி விடுவாள். அப்புறம் என்னதான் செய்வது என்று அலுத்துக்கொள்கிறீகளா? புரிகிறது, சொல்கிறேன். ஆமாம், உங்களுக்கு அதற்குள் குஞ்சாரம்மாவை பிடித்து விட்டதா?

குஞ்சாரம்மா இருக்கும் இடத்தினருகில் இருக்கும் டீக்கடையில் போய் முதலில் அமர்ந்து டீ சொல்ல வேண்டும். டீ குடித்துக்கொண்டே பேப்பர் படிக்க வேண்டும். அவ்வப்போது குஞ்சாரம்மாவைப் பார்க்க வேண்டும். பிறகு பதவிசாக எழுந்து வந்துவிட வேண்டும். திரும்ப இதையே அடுத்த நாளும் செய்ய வேண்டும். இந்த முறை அடிக்கடி குஞ்சாரம்மாவைப் பார்க்க வேண்டும். உங்கள் முகம் பழகிய மூன்றாவது நாள், யே புள்ள டீ குடிக்கிறியா என்று கேட்க வேண்டும். அப்டியே சம்சாவும் வடையும் சொல்லு என்று சொல்வாள். அதையும் சொல்லி, வாங்கிக்கொடுக்க வேண்டும். அதற்குப்பிறகு அவளிடம் நைஸாகப் பேச்சுக்கொடுத்துப் பேசி முடிக்க வேண்டும்.

என்னாது? விளக்கமா சொல்லணுமா? இது என்ன குறுங்கதையா அல்லது கால்கேர்ளை கரக்ட் செய்வது எப்படி என்ற கையேடா? அதெல்லாம் போய் நீங்களே முயன்று பாருங்கள், தன்னால் வரும். தன்னம்பிக்கைதான் முக்கியம். பல தலைவர்களும் அதைத்தானே வலியுறுத்தி உள்ளார்கள்.

இப்படி தனக்குப் பிடித்தவர்களுடன் வெளியே கிளம்பி விடுவாள். எவ்வளவு ரேட் என்பதெல்லாம் பரம ரகசியம். ஒவ்வொருவருக்கும் ஒரு ரேட். ரேட் என்றாலே கோபம் வரும் குஞ்சாரம்மாவுக்கு.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

பேக்கேஜ்தான். நல்ல சரக்கு, ஏசி லாட்ஜ், பிரியாணி, கார், அப்புறம் ஒரு தொகை. முக்கியமான விஷயம் கைவசம் எப்போதும் காண்டம் வைத்திருப்பாள். ஒரு முறைக்கு இரண்டு காண்டம்.

இது இப்படி இருக்க, லோயர் மிடில் க்ளாஸ் ஏரியா சங்கரு, குஞ்சாரம்மாவைக் காதலித்தான். சங்கருக்கு இன்னது என்று வேலை ஏதும் கிடையாது. கடும் தன்னம்பிக்கை உள்ளவன். அடிக்கடி அதை அவனே கூறிக்கொள்வான். இப்படி அடிக்கடி கூறிக்கொள்வதால் நாளுக்கு நாள் அவன் தன்னம்பிக்கை ஏறிக்கொண்டு போனது. எதாவது வேலை கிடைத்தால் செய்துவிட்டு, நன்கு குடிப்பான். குடித்துவிட்டு குஞ்சாரம்மாவைத் தேடி போவான். அவள் குடிசையில் இருந்தால் ஐயா இரவு அங்கேதான் தன்னம்பிகையை வளர்த்துக்கொள்வார். சங்கரு மட்டும் எப்போது வேண்டுமானாலும் குஞ்சாரம்மாவைத் தேடிப் போகலாம். இருந்தால் தங்கிக்கொள்ளலாம். தங்கி என்றால்? அதான் மேட்டர் எல்லாம் முடித்த பின்பு தூங்கிக்கொள்வான். சங்கருவிடம் காசு வாங்க மாட்டாள். அதாவது இதற்காக இவ்வளவு கொடு என்று வாங்கியதில்லை. எப்போதேனும் சங்கருவிடம் இருந்தால், கொடுத்தால் வாங்கிக்கொள்வாள். அவ்வப்போது தாவணி எடுத்துக்கொடுப்பான். குஞ்சாரம்மாவும் சங்கருவைக் காதலித்தாளா என்று சரிவரத் தெரியவில்லை. ஏனெனில் குஞ்சாரம்மாவுக்கு காதல் என்றால் என்ன என்று சரிவரத் தெரியாது.

நான் செய்யறதுதான் குஞ்சாரம்மாவுக்கு ரொம்ப பிடிச்சிருக்காம், திருப்தியா இருக்காம் என்று தன் நண்பர்களிடம் பெருமையாகச் சொல்வான் சங்கரு. சங்கரு கொஞ்சம் முரடனும் கூட என்பதால், நண்பர்கள் ஏதும் கமெண்ட் அடித்ததில்லை. அட வெக்கங்கெட்ட பயலே என்று மனதில் நினைத்துக்கொள்வார்கள்.

சங்கரு நண்பன் கொமாரு ஒருமுறை தண்ணி போட்டுவிட்டு, குஞ்சாரம்மாவைக் கூப்பிட்டிருக்கிறான். குஞ்சாரம்மா விரலைத் தூக்கி காட்டி மிரட்டி எச்சரித்து அனுப்பி விட்டாள். சங்கருவிடமும் சொல்லிவிட்டாள். சங்கரு கொமாரைக் கூப்பிட்டு, ஏண்டா மச்சி அவளை கூப்ட்ட? நீ என் ஃப்பிரண்டுன்னு அவளுக்குத் தெரியும் இல்ல? எப்பிடி வருவா? வெளக்குமாத்த எடுத்து வெளாசலாம்னு பாத்தாளாம், என் ஃப்பிரண்டுன்னு வுட்டுட்டதா சொன்னா என்று சொன்னான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

கொமாரு ஸாரி கேட்டுவிட்டுக் குமைந்துகொண்டே போனான்.

ஒருநாள் குஞ்சாரம்மாவைக் காணவில்லை. மறுநாளே அப்பர் மிடில் கிளாஸ் ஏரியாவில் இருந்து சுரேஷ் என்ற கல்லூரி மாணவனும் காணவில்லை என்று தெரியவந்தது. அதற்குப்பிறகான நாளில்தான் சுரேஷும் குஞ்சாரம்மாவும் ஊரைவிட்டு ஓடிப்போனார்கள் என்று தெரியவந்தது. சுரேஷ் ஐம்பதுபவுனுக்கு மேல் நகையையும் சில லட்சங்களையும் வீட்டிலிருந்து எடுத்துக்கொண்டு ஓடிப்போயிருக்கிறான். சுரேஷ் தீவிரமாக குஞ்சாரம்மாவைக் காதலித்து வந்தது வெவ்வேறு ஆட்களின் வாக்குமூலங்களின் மூலம் வெட்ட வெளிச்சமாகியது. குஞ்சாரம்மா சுரேஷைக் காதலித்தாளா, அவளுக்குக் காதல் என்றால் என்ன என்று தெரிந்து விட்டதா அல்லது சுரேஷ் தனக்குத் தெரிந்த காதலை குஞ்சாரம்மாவுக்குச் சொல்லிக்கொடுத்தானா என்கிற விவரமெல்லாம் இன்ஸ்பெக்டர் விசாரிக்கவில்லை. அவர் குறி ஐம்பதுபவுனிலும், லட்சங்களிலுமே இருந்தது.

சங்கரு தண்ணி அடித்துவிட்டு கடும் போதையில் இருந்தான். கொமாருதான் ஆறுதலாகக் கூடக் குடித்தான்.

என்னா மச்சி இப்பிடி பண்ணிட்டுப் போய்ட்டா என்றான் கொமாரு.

விட்றா, அவளை என்னமோ நினைச்சேன், அவ தேவடியாடா என்றான் சங்கரு!

கதை அவ்வளவுதான். மேல்தட்டு மக்கள் வசிக்கும் பகுதி என்று கதையின் ஆரம்பத்தில் வந்தது அல்லவா? அதைப்பற்றி ஒரு சின்ன மேட்டர்.

இந்தக் குப்பத்தில் மரகதம் என்று ஒருத்தி வாழ்ந்து வந்தாள். அவளிடம்காண்டம் போடாமல் வந்து படுத்து புள்ளையைக் கொடுத்துவிட்டுச் சென்றவர் இந்த மேல்தட்டுப் பகுதியைச் சேர்ந்தவர். அந்த மரகதத்தின் மகள்தான் இந்த குஞ்சாரம்மா!

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 32. பிரேக் அப்
## லவ்வெல்லாம் இல்லை

அலுவலக வேலையாகவெளிநாட்டுப் பயணம் முடித்துவிட்டு, செமத்தையாக டிரஸ் செய்துகொண்டு, ஹிமாலயன் பௌல் என்ற உயர்தர ரெஸ்டாரண்டில் தீபாவைச் சந்திக்கக் காத்திருந்தான் ரவிக்குமார். ஸ்டைலாக கால் மேல் கால் போட்டு அமர்ந்திருந்தான். தீபா வரும்வரையில் ஒரு ஆரஞ்ச் ஜூஸை சிப்பிக்கொண்டு இருந்தான். தீபா வரும்போது, எந்த பொஸிஷனில் எப்படி முகத்தை வைத்திருக்கவேண்டும் என அனைத்தையும் பிளான் பண்ணி செயல்படுத்திக்கொண்டிருந்தான் ரவிக்குமார்.

தீபாவுக்கும் ரவிக்குமாருக்கும் மூன்று வருடப் பழக்கம். எந்த அளவுக்குத் தீவிர காதல் என்றால், மூன்று வருடம் காதல் தோய்ந்த வருடமாகக் கழிந்தும், இன்றும் முதல்முறை சந்திக்கும் அதே ஆர்வத்துடன் ரவிக்குமார் அமர்ந்திருக்கிறான்.

கிட்டத்தட்ட இரண்டு மாதங்கள் கழித்து தீபாவைச் சந்திக்கப்போகிறான்.

ரெஸ்டாரண்டின் கதவு திறக்கும்போதெல்லாம், தீபாவா என, பதினைந்து டிகிர தலையைத் தாழ்வாகத் திருப்பிப் பார்த்துக்கொண்டிருந்தான் ரவி. அசட்டையாக ஒருமுறை பார்க்கையில் தீபாவே நுழைந்து கொண்டிருந்தாள்.

காட்டன் சாரி, கருப்பு வெள்ளை பூக்கள் போட்டது. அதற்கு மேட்சாகக் கருப்பு கலர் ஜாக்கெட். தலைக்குளித்து முடியைப் பறக்க விட்டிருந்தாள். கருப்பு கலரிலேயே வளையல், தோடு, செருப்பு என சரியாக செலக்ட் செய்திருந்தாள். மெல்லிய லிப்ஸ்டிக். நடக்கும்போது, கெண்டைக்கால், இடை, முதுகு என அவளின்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

பிரத்யேக எலுமிச்சை கலந்த வெள்ளை நிறம் பளீரிட்டபடியே இருந்தது.

ரவிக்குமாரின் எதிரில் வந்து அமர்ந்தாள். ரவிக்குமார் பறக்கும் மனநிலையில் இருந்தான். நம்ம ஆள் செம அழகு என மனம் கொந்தளித்தது. இந்த அழகு எல்லாம் எனக்கே என மனமும் உடலும் குதியாட்டம் போட்டது.

வசதியாகச் சாய்ந்து உட்கார்ந்துகொண்டு கால்மேல் காலைப் போட்டுக்கொண்ட தீபா,

ரவி, உன் கிட்ட ஒண்ணு சொல்லணும். உன் ஃப்ரெண்டு ஹரீஷ் மேல எனக்கு ஒரு இண்ட்ரஸ்ட் வந்துடுத்துன்னு நினைக்கிறேன். நீ இல்லாதப்ப நாங்க ரெண்டு பேரும் அவுட்டிங்க் போனோம். நைட் ஒண்ணா தங்கினோம், எல்லாம் முடிஞ்சிடிச்சி ரவி என்றாள். ஏதோ மனப்பாடப்பகுதி செய்யுளைச் சொல்வது போல ஸ்பஷ்டமாகச் சொன்னாள்.

அவள் தீர்க்கமாகச் சொன்னதில் இருந்த உண்மை நங்கென்று உறைத்தது ரவிக்குமாருக்கு.

இதை எப்படி உள்வாங்கி என்ன ரியாக்ட் செய்வது என்று புரியாமல் தடுமாறினான் ரவி.

பட், ஹரீஷ் மேல லவ்வெல்லாம் இல்லை. ஜஸ்ட் ஃப்யூ டைம்ஸ், அப்போதைக்கு அட்ராக்ட் ஆயி, தேவைப்பட்டதுன்னு நினைக்கிறேன். இதை உன்கிட்ட சொல்றதுதான் ஹானஸ்டுன்னு தோணிச்சி, அதான் சொன்னேன் என்றாள் தீபா.

இன்னும் குழம்பிக்கொண்டே இருந்தான் ரவி. மனதுக்குள் புயல் அடித்தது. மயக்கம் வரும் போல இருந்தது. கால்கள் வலுவிழந்தன.

இப்பவும் உன்னை லவ் பண்றேன், பட் நீதான் முடிவெடுக்கணும். இது உனக்கு உறுத்திட்டே இருக்குமா, இல்லையான்னு நீதான் யோசிக்கணும் என்றாள்.

எழுந்தான், வெளியே ஓடினான், சுவரில் முட்டிக்கொண்டான், மேஜையைக் குத்தினான், தட்டைத் தூக்கி அடித்தான், தண்ணீரை எடுத்து முகத்தில் விசிறிக்கொண்டான், சேரைத் தூக்கி தீபா தலையிலேயே அடித்தான், ஐயோ என்று கதறி அழுதான், சுத்தி சுத்தி

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

ஓடினான். கண்ணை மூடித் தலையைச் சிலுப்பிக்கொண்டு இருந்தவன், கண்களைத் திறந்தான்.

எதுவும் பேசாமல் எழுந்தான் ரவிக்குமார்.

கோச்சிகிட்டு எல்லாம் போகாதே, பிரியணும்னா கேஷுவலா சாப்டு முடிச்சிட்டு பிரியலாம் என்றாள் தீபா.

அவள் சொல்வதைக் காதில் வாங்கிக்கொள்ளாமல் நடை தளர்ந்தாலும் விறுவிறுவென ரெஸ்டாரண்டைவிட்டு வெளியேறினான்.

தீபாவின் மீதான காதலெல்லாம் எப்போது பொசுங்கியது எனத் தெரியவில்லை. அதெல்லாம் இப்போது ரவிக்கு ஒரு பொருட்டாகவேத் தோன்றவில்லை. காரில் அமர்ந்து, மொபைலை எடுத்து ஹரீஷின் காதலி நிரஞ்சனாவின் நம்பரை எடுத்தான். கொஞ்ச நேரம் பார்த்துக்கொண்டே இருந்தான். வாட்ஸப்பில் அவளின் ப்ரொஃஃபைல் போட்டோவையே பார்த்தபடி இருந்தவன், அவளுக்கு மெசேஜ் தட்டினான்.

பொறுமையாக, ஆனால் விரைவில் நிரஞ்சனாவைப் படுக்கையில் வீழ்த்த வேண்டும் என்பது மட்டுமே ரவிக்குமாரின் மனதில் ஆக்கிரமித்து இருந்த ஒரே எண்ணம். தேவ்டியா தேவ்டியா என தீபாவைத் திட்டியபடி இருந்தான் மனதுக்குள். டென்ஷன், கோபம், எரிச்சல் எல்லாம் கொஞ்சம் அடங்கியதும், மூளை வேலை செய்ய ஆரம்பித்தது. ‘தீபா அழகாத்தானே இருக்கா? அவளை ஏன் விடணும்? அனுபவிக்கிற வரைக்கும் அனுபவிச்சிட்டு கழட்டிவிட்டுடலாமே’ என்று மனம் மனக்கணக்கு போட்டது.

உடனே காரிலிருந்து இறங்கி, ரெஸ்டாரண்டை நோக்கி ஓடினான். நிரஞ்சனாவிடம் இருந்தும் பதில் மெசேஜ் வந்து விட்டது. உள்ளே நுழைந்ததும், தீபா பில் செட்டில் செய்துகொண்டு இருந்தாள். ரவிக்குமாரை ஆச்சரியமாகப் பார்த்தாள்.

அவளிடம் சென்று அமரச்சொல்லிவிட்டு, மீண்டும் ஆர்டர் கொடுத்துவிட்டு, தீபாவின் பக்கத்தில் போய் அமர்ந்து ஒட்டிக்கொண்டான். தீபாவின் கையைத் தூக்கி மடியில் வைத்துக்கொண்டான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

வெளிநாட்டில் ஒரு கால் கேர்ளிடம் சென்றது, திருப்தி இல்லாமல் மனம் சுணங்கிக்கொண்டு இருந்தது. இன்று தீபாவிடம் முழு விருந்து வைத்துக்கொள்ளலாம் எனத் திருட்டுக்கணக்கு போட்டது.

மூன்று இளம் பெண்கள் ரெஸ்டாரண்டுக்குள் நுழைந்தனர். அதில் ஒருத்தி ஸ்டைலாகவும், அழகாகவும், தீபாவைவிட இளமையாகவும் இருந்தாள். தீபா இருக்கிறாள், நிரஞ்சனாவை முடிக்க வேண்டும். கல்யாணம் செய்து கொள்ள இந்த இளம் சிட்டு போன்று யாரேனும் ஒருத்தியைத் தேர்ந்தெடுக்க முதலில் இருந்து வேலையை ஆரம்பிக்க வேண்டும் என்று ஆயாசமாக இருந்தது ரவிக்குமாருக்கு.

எதிர்பாரா தருணத்தில் டக்கென்று தீபாவை இழுத்து கன்னத்தில் முத்தமிட்டான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 33. பிரேக் அப்
## பெர்ஃப்யூம்

அவனும் அவளும் ஆன்லைன் மூலம் ஸ்நேகித்துக்கொண்டு அன்பை வளர்த்தனர். அவளின் விதவிதமான போட்டோக்களைப் பார்த்து ஐயாவுக்கு அன்பு காதலாக ஸ்பீட் எடுத்தது. ஒரு பலகீனமான தருணத்தில் ஐ லவ் யூ என்று டைப் அடித்து அனுப்பிவிட்டான். சாட் பாக்ஸில் டைப்பிங்...டைப்பிங் என்று காட்டிக்கொண்டு இருந்ததே தவிர டெக்ஸ்ட் ஏதும் வரவில்லை. ஐயாவுக்கு பீபி எகிறியது.

மீண்டும் மீண்டும் டைப்பிங் டைப்பிங் என்று வரும், ஆனால் அதுவும் காணாமல் போய்விடும். அட்லீஸ்ட் ஆன்லைன் என்றாவது காட்டிக்கொண்டு இருக்கறதே என்று சமாதானம் அடைந்தான்.

ஆர் யூ தேர் என்று மெசேஜ் அனுப்பினான். இந்த மெசேஜ் அனுப்புவது அவனுக்கே படு அபத்தமாக இருந்தது. தன் காதலைத் தெரிவித்த அடுத்த செகண்டில் ரிஸல்ட்டை எதிர்பார்ப்பது இன்றைய தலைமுறையின் உரிமை அல்லவா? அவளோ டைப்பிங் டைப்பிங் என்று வெறுப்பேற்றிக்கொண்டு இருந்தாள்.

என்ன? 'ஐ டூ லவ் யூ', அல்லது 'நான் அதைப்போல பழகல' இதில் ஏதாவது ஒன்றைத்தான் அனுப்பப்போகிறாள், இதற்கு ஏன் இவ்வளவு யோசிக்கிறாள்? ஏதேனும் நீண்ட கவிதை எழுதிக்கொண்டு இருப்பாளோ? கவிதை எழுதுபவள் என்று தெரியாமல் போய் விட்டதே, அவசரப்பட்டு ஐ லவ் யூ சொல்லி விட்டோமோ என்று பயந்தான்.

இரண்டும் கெட்டானாய் 'ஸோ ஸ்வீட்'என்று பதில் வந்தது. இதில் இருந்து ஆரம்பித்து இரண்டு கிமீ நீட்டத்துக்கு சாட் செய்து காதல் வளர்த்தனர். அவள் வேறு ஊர் என்பதால் உடனே சந்திக்க இயலாமல் போய்விட்டது. அவளைச் சந்திப்பதற்குள் கிட்டத்தட்ட இருபது

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

விதமான அவளின் போட்டோக்களை அப்லோட் செய்தபடி இருந்தாள். ஜீன்சில், ஷார்ட்ஸில், தாவணியில், புடவையில், ஸ்கர்ட்டில்.

நம் ஆளுக்கு எதிர்பார்ப்பு எகிறியபடி இருந்தது. காதலும் ஹைப்ரிட் கத்தரிக்காய் போல வளர்ந்தபடியே இருந்தது.

சந்திக்கும் நாளும் வந்தது. ஐயா நண்பனிடம் காரை கடன் வாங்கிக்கொண்டு அவளை ஏற்றிக்கொள்ளச் சென்றான். அதோ நின்றுகொண்டு இருக்கிறாள். அடையாளம் கண்டுகொண்டான். போட்டோவில் பார்த்தது போலவேதான் இருந்தாள். ஆனால், எதோ குறைந்தது. எல்லாமே வித்தியாசமாகப் பட்டது. என்ன எழவு ஆப்பை இவ்வளவு நாள் உபயோகித்தாளோ என கோபம் வந்தது. டிஜிட்டல் போட்டோவுக்குத்தானே ஆப்! நேரில் வருகையிலும் ஆப்பா உபயோகிக்க முடியும்?

காரில் ஏறிக்கொண்டாள். ஏறியதும் அவளே இவனை முத்தமிட்டாள். நளினமான நைஸான முத்தம். ஏதோ சாப்பிட்டு ஜீரணமாகாத வாடை அடித்தது. என்ன என்று இவனால் கண்டுபிடிக்க முடியவில்லை.

ஒரு ரெஸ்டரண்ட் போய்விட்டு, நண்பன் அறைக்குச் செல்வதுதான் பிளான்.

ரெஸ்டாரண்டில் அவளே வந்து வந்து ஒட்டிக்கொண்டாள். போட்டோவுக்கும் நேரிலும் பெரிய வித்தியாசம் இல்லைதான். ஆனால் ஏனோ மனம் ஒன்றை மறுத்தது. இவன் கொஞ்சம் தள்ளித்தள்ளியே இருந்தான். பில் செட்டில் செய்துவிட்டு வீடு வந்தனர்.

சொல்லி வைத்திருந்ததால், நண்பர்கள் வெளியே சென்று விட்டிருந்தனர். ஆர்டிஃபீஷியல் சுத்தத்தோடு இருந்தது அறை. நுழைந்ததும் அவள் கட்டிக்கொண்டாள். ஐ லவ் யூ ஐ லவ் யூ என ஒப்பித்தாள்.

என்னதான் ஆனாலும் ஆண் அல்லவா? அனைத்தும் விழித்துக்கொண்டது அவனுக்கு. அவனும் கட்டிப்பிடித்து உதட்டில் முட்டமிட்டான். திரும்பவும் ஏதோ ஒரு என்னவெனக் கண்டுபிடிக்க முடியாதவாடை. முகத்தில் பருக்களின் லேசான கீறல்கள். அருகே பார்ப்பதற்குப் பிரம்மாண்டமாய்த் தெரிந்தது. உதட்டைத்தாண்டி, மார்பகங்களில் கையை வைத்தான். தர்ம சங்கடச் சிரிப்பு சிரித்தபடிக்

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

கையை விலக்கி விட்டாள். அவளுக்கும் ஆசைதான். முதல்முறையிலேயே மார்தனில் கரம் வைக்க அனுமதித்தால் பத்தினி என நினைக்க மாட்டானே இன்றைய ஆண்மகன். மீண்டும் முயற்சிக்க, மீண்டும் தள்ளி விட்டாள்.

இந்த ரொமான்ஸ் ஒழுங்காக அரங்கேறவில்லை. சில செகண்ட் உதட்டு முத்தம், அடுத்து என்ன செய்வது எனத் தெரியாமல் நேரடியாக மார்பகம். அவள் ஏதோ செண்ட் பெர்ஃஃப்யூம் போட்டு இருந்தாள். அந்த மணமும் இவனுக்குச் சகிக்கவில்லை. முந்தாநாள் வைத்த கூட்டின் வாசனை போல அடித்தது.

இவனுக்கு அதற்கு மேல் என்ன செய்வது, எப்படிக் காதல் வளர்ப்பது எனத் தெரியவில்லை. அவள் போனால் போதும் என்று ஆகிவிட்டது. ஆனால் அவள் பக்கத்தில் பக்கத்தில் வந்து அமர்ந்துகொண்டு, அன்பாகப் பேசியபடி இருந்தாள். அவ்வப்போது முத்தமிட்டாள். இவனுக்குப் பிடிக்கவேயில்லை. முள்ளின் மேல் இருப்பது போல இருந்தான்.

எப்படியும் உடனே போகமாட்டாள், உடலுறவாவது முயற்சித்துப் பார்க்கலாம் என்று அதற்கான ஆரம்பக்கட்ட வேலைகளை உதட்டில் இருந்தே தொடங்கினான். வெளிவந்து கொண்டிருந்த வாசத்தால் உதட்டை வெடுக்கென பிடுங்கிக்கொண்டு, மார்பில் முகம் புதைத்தான். எதுவும் இயல்பாக நடக்காமல் அவசர கதியில் நடந்தது. அவள் அணிந்திருந்த சுரிதாரைக் கழட்ட எத்தனித்தான். அவள் விடவில்லை. மேலேதான் கழட்ட முடியவில்லை, கீழே கழட்டலாம் எனத் தேடித் தேடி நாடாவைக் கண்டுபிடித்து அவித்து விட்டான். அவள், பதமாக விலகி மீண்டும் போட்டுக்கொண்டாள். நாட்டி பாய் என்று செல்லம் வேறு கொஞ்ச, கடுப்பானான் இவன்.

அவளைக் கீழே படுக்க வைத்துவிட்டு, மேலே படர்ந்தான். உடையோடுதான். அதற்கு அவள் அனுமதித்ததும், உடையோடே இயங்க ஆரம்பித்தான். இரண்டு நிமிடத்தில் ஆர்கசம் அடைந்தான். அவளுக்குக் குழப்பமாக இருந்தது. ஒருவாறு புரிந்துகொண்டு அவனின் பின்னந்தலையை தட்டிக்கொடுத்தாள். உடன் எழுந்து பாத்ரூம் ஓடினான். பாத்ரூமில் தன் உடல் முழுக்க அவளின் மூன்று நாள் கூட்டு வாடை அடித்தது போலத் தோன்றியது. குளித்தான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

ஒருவழியாக மாலை வந்தது. அவள் கிளம்பும் நேரம் வந்தது. அவள் பிரியப்போகிறோமே என்று அழுது கொண்டே கட்டிப்பிடித்தபடி இருந்தாள். இவன் பல்லைக் கடித்தபடி இருந்தான். அவள் சென்றதும் மூச்சுமுட்டக் குடிக்க வேண்டும் போல இருந்தது. என்னைப் பிடிச்சிருக்கா என்று கேட்டாள். உண்மையில் இதை முப்பதாவது தடைவையாகக் கேட்டாள். கதையின் போக்கில் குறுக்கீடு வேண்டாமென ஒவ்வொரு முறையும் எழுதாமல் தவிர்க்கப்பட்டது.

இவன் ம்ம்... ம்ம் என்று முனகினான்.

உண்மையா என்னைப் பிடிச்சிருக்கா? பிடிக்கலைன்னாலும் சொல்லு, நான் ஒண்ணும் சொல்ல மாட்டேன். உன் வாழ்க்கைல இருந்து போயிடுவேன் என்று சொன்னாள்.

அதெல்லாம் ஒண்ணுமில்லை என்றான்.

அவளை இழுத்துக்கொண்டு ஓடி பஸ் ஏற்றி விட்டான். பஸ் கிளம்புவதற்குள் ஓடோடி வந்து விட்டான். திரும்ப வருகையில் ஏன் அவளை நமக்குப் பிடிக்கவில்லை என்று யோசித்துப்பார்த்தான். எதுவும் தெளிவாக விளங்கவில்லை. பலத்த ஏமாற்றமாக இருந்தது. அவள் போடும் பெர்ஃஃப்யூம்தான் காரணமா? அதை நாமே சொல்லி விடலாமே அல்லது நாமே புதுசாக ஒன்று வாங்கிக்கொடுக்கலாமே என்று யோசித்தான்.

வேண்டாம், அவளைச் சுத்தமாக பிடிக்காததற்குக் காரணமாக அந்த பெர்ஃஃப்யூம் நாற்றம் அல்லது அவளின் வியர்வை நாற்றமே இருந்துவிட்டுப் போகட்டும் என்று நினைத்தபடி அவளிடம் இருந்து வந்த காலை கட் செய்தான்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 34. பிரேக் அப்
## இன்னர்ஸுடன் ஒரு போட்டோ

நீண்ட நாட்களாகப் போட்ட திட்டம் நிறைவேறிக்கொண்டு இருந்தது. வட இந்தியச் சுற்றுப்பயணம். தீபா உற்சாகமாகவே இருந்தாள். புதுப்புது ஊர்கள், புதுப்புதுத் தங்குமிடங்கள், புத்தம் புதிய ஆட்கள் என ரொம்ப ஃப்ரெஷாக இருந்தது தீபாவுக்கு. ஆரம்பத்தில் ஜாலியாகக் காணப்பட்ட சிவா என்கிற சிவராம் சற்றே சோம்பலாக காணப்பட்டான். மணாலியில் ரோத்தாங் பாஸ் வரை பைக் ஓட்டி, திரும்பவந்த களைப்பாக இருக்கும் என்று நினைத்துக்கொள்டாள் தீபா.

மணாலியின் ஒதுக்குப்புறத்தில் மரங்கள் அடர்ந்த காட்டுப்பகுதியில் ரெஸார்ட் புக் செய்திருந்தனர். வெள்ளைப் பனி கொட்டும் க்ளைமேட். சூடாக டீ உறிஞ்சிக்கொண்டு மூட் அவுட்டாக இருந்தவனை வந்து செல்லமாக அணைத்து என்னடா பிரச்சனை, ஏன் சோகமா இருக்க என்றாள்.

எவனோ ஒரு மெசேஜ் அனுப்பி இருக்கான், நான் பாத்ததும் டக்குன்னு மொபைலை ஆஃப் பண்ணிட்ட, அதான் என்றான்.

யேய்... ச்சீ, எப்பவும் சந்தேகம்தானா உனக்கு? சொந்தக்காரன் ஒருத்தன் கடன் கேட்டு டார்ச்சர் பண்ணிட்டு இருந்தான், அதான் டக்குன்னு ஆஃப் பண்ணிட்டேன் என்றாள்.

காட்டு என கேட்பதற்கு சிவாவுக்கு ஒரு மாதிரியாக இருந்தது. பாரு என கொடுக்க தீபாவும் தயங்கினாள்.

இப்பிடில்லாம் சந்தேகப் படமாட்டியேடா செல்லம், இப்பல்லாம் ஏண்டா டெய்லி இதைப்போல எதாச்சும் சண்டை போட்டு மூஞ்சைத் தூக்கி வச்சிக்கிற என அவனது தலையைக் கோதினாள்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

ஜாலியாகி விட்டான் சிவா. இல்லடீ, எல்லாம் என் அழகு ராணி மேல இருக்கும் காதல்தான் எனச் செல்லம் கொஞ்சினான்.

குளிருது, வா, கட்டில்ல ஒக்காந்துகிட்டு கம்பளி போத்திக்கலாம் என்றாள். இருவரும் கம்பளிக்குள் புகுந்து உட்கார்ந்து கொண்டனர். இன்று எடுத்த போட்டோக்களை தீபாவின் மொபைலில் இருவரும் பார்த்துக்கொண்டு இருந்தபோது,

'இன்னர்ஸோட ஒரு போட்டோ அனுப்புடீ டியர்' என்றொரு மெசேஜ் தீபாவுக்கு வந்தது. காண்டாக்ட் லிஸ்டில் பெயர் இல்லாமல் அன்நோன் நம்பரில் இருந்து வந்தது.

டக்கென்று எழுந்துகொண்ட சிவா, என்னாடீ இது என்றான் ரௌத்ரமாக...

யேய், எவனோ என்னமோ அனுப்பி இருக்கான், எப்ப பாத்தாலும் இதையே கேட்டுகிட்டு என்று எரிந்து விழுந்தாள் தீபா.

எவனோ எப்படிடீ அனுப்புவான்? உனக்குத் தெரியாதவன் தான் இப்பிடி வெளக்கமா அனுப்புவானா என்று கத்திக்கொண்டே டேபிளில் ஓங்கிக் குத்தினான்.

எவனோ அனுப்புறதுக்கெல்லாம் நான் ஒண்ணும் பண்ண முடியாது. உனக்கு நம்பிக்கை இல்லைன்னா, விட்டுடு. டெய்லீ உன்னை சமாதானப்படுத்திட்டு இருக்க முடியாது என்ற தீபா முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

சரி அந்த மொபைலை குடுடீ, அவன் யாருன்னு பாத்துடறேன் என்று தீபாவிடம் நெருங்கி மொபைலைப் பிடுங்கப்போனான்.

மொபைலைத் தொடைக்கு அடியில் வைத்துக்கொண்டதீபா, இண்டீஸண்டா பிஹேவ் பண்ணாதே, நான் சொன்னா சொன்னதுதான். நம்பலைன்னா போ என்றாள்.

மொபைலைக் குடுக்க முடியுமா முடியாத என்றான் சிவா.

முடியாது என்றாள் தீபா தீர்க்கமாக.

ச்சீ... கேவலமா இருக்குடீ இவ்ளோ நாள் உன்கூட பழகினது. அவ்ளோதான், இனி உன்கூட இருக்க முடியாது டீ, நாம பிரிஞ்சிடலாம் என்றான் வெறுப்பாக.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

என்னாலயும் இந்த மாதிரி சந்தேகப் பிராணி கூட குப்பை கொட்ட முடியாதுடா. தட்ஸ் ஆல், எவ்ரிதிங்க் ஓவர் என்றாள்.

ஒக்கே... ரூமைக் காலி பண்ணிடலாம், டூரை கேன்ஸல் பண்ணிடலாம், நான் உடனே, இப்பவே ஊருக்குக் கிளம்பறேன் என்றான் சிவா. மேனேஜருக்கு ஃபோன் அடித்து செக் அவுட் என்றான்.

சிவா போனை வைத்ததும், மேனேஜருக்கு போன் அடித்து, ‘ஒரு ரூம் புக் பண்ணனும், நாலு நாளைக்கு’ என்றாள் தீபா!

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 35. பிரேக் அப்
## மீண்டும் ஒரு முறை

வெட்டிச் சண்டையால் அவசரப்பட்டு பிரேக் அப் கொடுத்துப் பிய்த்துக்கொண்டதை இப்போது நினைத்து எரிச்சலாக இருந்தது சுவாமிக்கு. பிரிந்த கொஞ்சநாள் தீபாவை மறந்துதான் இருந்தான் சுவாமி. சில மாதங்கள் கழித்து அவளின் ஃபேஸ்புக் அக்கவுண்ட்டை நோண்ட ஆரம்பித்து, அதுவே ஒரு வியாதியாகப் போனது சுவாமிக்கு. அடிக்கடி அவளின் வாட்ஸப் ப்ரொஃபைலைப் போய் பார்க்க வேண்டியது, என்ன போட்டோ வைத்திருக்கிறாள், என்ன ஸ்டேட்டஸ் மெசேஜ் போடுகிறாள் என பார்த்துக்கொண்டேயிருந்தான்.

அவனைவிட்டுப் பிரிந்து சென்றதும் அழகு மிளிர்வதாகப் பட்டது அவனுக்கு. கொஞ்சம் பூசியிருந்தாள் தீபா. அது இன்னமும் அழகாகவும் கவர்ச்சியாகவும் அவளைக் காட்டியது. இப்போது தீபாவுக்கு வேறு ஒரு பாய் ஃபிரண்ட் கிடைத்துவிட்டான். அவனுடன் பைக்கில் நெருக்கி அமர்ந்து போடும் புகைப்படங்களைப் பார்த்து ஏங்கித்தான் போனான் சுவாமி. வயிற்றில் அமிலம் சுரந்து கொண்டேயிருந்தது.

ஒரு நாள் தீபாவுக்கு மெசேஜ் அனுப்பியே விட்டான். 'என்னால் உன்னை மறக்க முடியவில்லை, உன் நினைவாகவே இருக்கிறது. நீ மீண்டும் எனக்கு கிடைப்பாயா? ஒருமுறையேனும் கிடைப்பாயா?'

தீபா பதிலனுப்பினாள் - இவனுக்கு நீ எவ்வளவோ தேவலாம். அடிக்கடி சண்டை போடுகிறான், என்னை கண்ட்ரோல் செய்கிறான். ஆனால் செக்ஸுவல் பர்ஃபாமன்ஸில் பின்னி எடுக்கிறான். உன்னால் நினைத்துக் கூடப் பார்க்க முடியாது. ஒருமுறை வருவதற்கு எனக்கு ஒன்றுமில்லை, பழைய ஆள்தானே! வருகிறேன். ஆனால் எனக்கு

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

திருப்தியே வராது. நீ வேண்டுமானால் என்னை வைத்து இன்பம் சுவைத்துக்கொள், இது எனக்கு தர்மம் கொடுப்பது மாதிரிதான்.

படித்துவிட்டுப் பேயறைந்தது போல இருந்தான் சிவா...

சிவாவிடம் இருந்து பதிலேதும் வராததால் தீபாவே மீண்டும் ஒரு மெசேஜ் அனுப்பினாள் - உனக்கு இன்னும் ஆள் கிடைக்கவில்லையா? ஆள் கிடைத்ததும் ப்ராக்டீஸ் செய்துகொண்டு, என்னிடம் வாயேன்.

சிவா, தீபாவை ப்ளாக் செய்துவிட்டு போனைத் தூக்கிச் சுவரில் அடித்தான்.

தீபா அனுப்பிய அடுத்தமெசேஜ் சுவரில் பட்டுத் தெறித்தது.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

## 36. பிரேக் அப்

## அனிதாஸ் அண்ட் ஆனந்த்ஸ்

மியூசிக் தறிகெட்டு காற்றில் கலந்து டொம் டொம் என்ற பீட் மட்டுமே காது வழியாகப் புகுந்து மூளைக்குள் அதிர்ந்துகொண்டு இருந்தது. டான்ஸ் ஃப்ளோரில் கிட்டத்தட்ட முந்நூறு பேர் இருப்பார்கள். சிலர் கைகளில் கிளாஸ் இருந்ததால் கால்கள் மட்டும் மெல்லிய ஸ்டெப் போட்டுக்கொண்டு இருந்தது. சிலர் உடலையும் மனதையும் வளைத்து நெளித்து ஆடியபடி இருந்தனர். கையை கொஞ்சூண்டு விரித்து ஆடினால் அடுத்தவர் மேல் படும் அளவுக்குக் கூட்டம். இதனாலேயே சிலர் கையை விரித்து ஏதேனும் அகப்படுமா என்று ஆடியபடி இருந்தனர்.

அனிதாவும் ஆனந்தும் அந்த டான்ஸ் டிஸ்கோத்தேவிற்கு ரெகுலராகச் செல்பவர்கள். ஆனந்துக்கு ஆனந்த் என்று இன்னொரு நண்பன் இருந்தான். அலுவலகத் தோழன். அந்த ஆனந்தின் மனைவியும் பெயரும் அனிதாதான். இந்த ஆனந்த் சொல்லி அந்த ஆனந்த் அனிதாவுடன் முதல்முறையாக டிஸ்கோவுக்கு வந்திருந்தான்.

டான்ஸ் களைகட்டி உச்ச ஸ்தாதியில் ஓடிக்கொண்டிருந்தது. ஆளுக்கு ஐந்து ரவுண்ட் மேல் ஆகிவிட்டது. அன் லிமிட்டெட் ஐஎம்எஃப்எல் டிரிங்க் ஆஃபரில் ஆனந்த்களும் அனிதாக்களும் வந்திருந்தனர்.

ஆனந்த் நல்ல குடிகாரன். அதனால் நன்கு குடித்து நிதானமாக ஆடிக்கொண்டு இருந்தான். அனிதாவுக்கு ஆன்ந்தைப்பற்றித் தெரியும் என்பதால், இப்போதைக்கு முடிக்க மாட்டான் என்று அறிந்திருந்தாள். கம்பெனி கொடுத்துக்கொண்டு இருந்தாள். ஆனால் அவளுக்கு அலுப்பாக இருந்தது. எவ்வளவு நேரம்தான் கையைத் தூக்கிக்கொண்டு இடுப்பை வளைத்து ஆடிக்கொண்டு இருப்பது என்று.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

ஆனால் ஆனந்துக்கு குடிப்பழக்கமே ஒழிய ப்ரொஃபஷனல் குடிகாரன் அல்ல. அதனால் அனிதாவுக்கும் இதெல்லாம் அறிமுகம் இல்லை. இதெல்லாம் என்றால், டிஸ்கோத்தே. குடி அவளுக்கும் அறிமுகம்தான். ஆனந்த் வாங்கி வரும் வைனை அவ்வப்போது குடித்திருக்கிறாள். இப்போது அவளுக்கு இந்த டிஸ்கோ பெரிய விஷயமாக இருந்தது.

ஆனந்த்தான் ஆனந்துக்கும் அனிதாவுக்கும் டிரிங்க்ஸ் செலக்ட் செய்து கொடுத்துக்கொண்டு இருந்தான். அனிதாவுக்கு ஆனந்தை ரொம்பப் பிடித்து விட்டது. அனிதாவுக்கு இதெல்லாம் பழக்கம் என்பதால் போரடித்தது. ஆனந்துக்கு இதெல்லாம் புதுசு என்பதால் ஆர்வமாகவும் இருந்தான், அதே சமயத்தில் போதையாகவும் ஆனான்.

கொஞ்ச நேரம் ஆனந்ந்தும் அனிதாவும் ஆனந்தும் அனிதாவும் பக்கத்து பக்கத்தில் ஆடிக்கொண்டு இருந்தார்கள். அப்போதும் ஆனந்த் அனிதாவை ஓரக்கண்ணால் பார்த்தபடி இருந்தான். அனிதாவும் ஆனந்தைப் பார்ப்பதை விட்டுவிட்டு ஆனந்தை வெட்கமாகவும் சொக்கிப்போயும் பார்த்துக்கொண்டு இருந்தாள்.

ஆனந்த் அனிதாவுடன் ஸ்டெப் போட்டுக்கொண்டு இருந்தாலும் அனிதா மீது எப்போதாவது படும் சின்ன உரசல் கிக்காக இருந்தது. ஆனந்துக்கு அனிதாவுடன் ஆடவேண்டும் போல ஆவல் தீவிரமாக எழுந்தது. அனிதாவுக்கும் ஆனந்துடன் ஆடவேண்டும் என்று உள் மனது அடித்துக்கொண்டது.

ஆடிக்கொண்டிருந்த ஆனந்த் ஆட்டத்தை நிறுத்திவிட்டு, அனிதாவுக்கும் அனிதாவுக்கும் டிரிங்க் எடுத்து வந்து கொடுத்தான். அனிதா அசட்டையாக வாங்கிக்கொண்டாள். அனிதா ஆர்வமாக வாங்கிக்கொண்டு, தேங்க் யூ ஆனந்த் என்றாள். ஆடிக்கொண்டிருந்த ஆனந்துக்கு வயிறு என்னமோ செய்தது. போதையும் குழப்பியது. கால் மட்டும் தொடர்ச்சியாக ஆடிக்கொண்டிருந்தாலும், கண் சொருகியது. வாந்தி வருவது போல இருந்தது. ஆட்டத்தை நிறுத்திவிட்டு ரெஸ்ட் ரூமுக்குப் போனான். அனிதா தனியாக சின்ன சின்ன ஸ்டெப்ஸை ஆர்வமாகப் போட்டுக்கொண்டு இருந்தாள். அனிதாவுக்கு டயர்டாக இருந்தது. கொஞ்ச தூரத்தில் போடப்பட்டிருக்கும் சோஃபாவில் போய் உட்கார்ந்து கொள்வதாக ஆனந்திடம் சைகையில் சொல்லிச் சென்றாள்.

Click & Join - https://t.me/tamilbooksworld

If you want more free e-Books

ஆனந்தும் அனிதாவும் தனித்து விடப்பட்டனர். நடனம் ஆடிக்கொண்டே ஆனந்த் அனிதாவுக்கு முன்னே சென்றான். ஆனந்த் வந்ததும் இடுப்பை நன்றாக வளைத்து நெளித்து ஆடினாள் அனிதா. அனிதாவின் கை அந்தரத்தில் மிதந்தபடி இருந்தது. அந்தக் கைகளை ஆட்டும்போது அவ்வப்போது தொட்டுச்சென்ற ஆனந்தின் நடன அசைவு, ஒரு கட்டத்தில் அடிக்கடி பட ஆரம்பித்தது. ஆனந்தின் கைகளை அனிதா அந்தரத்தில் பிடிக்க, இருவரும் இன்னும் நெருங்கிக் கட்டிக்கொண்டனர். ஆனந்த் அனிதாவின் இடையில் கையைக் கொடுத்து தன்னருகே இழுத்து தன் இடுப்போடு சேர்த்து வைத்துக்கொண்டு வளைத்து வளைத்து ஆடினான். அனிதாவுக்கு சொர்க்கமாக இருந்தது.

பாடல் நின்று அடுத்த பாடல் ஒலிக்கும் இடைவெளியில் ம்யூசிக் நின்றது. அப்போது மொத்தக் கூட்டமும் நடனத்தை நிறுத்தி ஓஓஓவென கத்தினர்.

ஆனந்த் வாந்தி எடுத்துக்கொண்டு இருந்தான்.

அனிதா சோஃபாவில் தலையை சாய்க்க வாகாக இடம் தேடிக்கொண்டிருந்தாள்.

அடுத்த பாடல் போடுவதற்குள், ஆனந்த், மே ஐ கிஸ் யூஎன்றான் அனிதாவிடம்.

அனிதா ஆனந்தை அள்ளி எடுத்து உதட்டில் வெறி பிடித்தவள் போல முத்தமிட்டாள். பாடலுக்குச் சுழன்று சுழன்று அனிதாவும் ஆனந்தும் ஆடினார்கள். அனிதா லவ் யூ ஆனந்த் என்றாள். அனிதாவின் காதில் ஆனந்த் கிசுகிசுப்பாக ஆனந்துக்கு எதுவும் தெரிய வேண்டாம் என்றான்.

அனிதா திரும்பவும், லவ் யூ ஆனந்த், ஐ ரியலி லவ் யூ சோ மச் என்று முனகினாள். அனி, ஆனந்துக்கு எதுவும் தெரிய வேண்டாம், அவசரப்பட்டு பிரேக் அப் பண்ணிடாதே என்றான் ஆனந்த். ம்ம்... என்று முனகிய அனிதா, ஆனந்தைத் திரும்பவும் வளைத்துக்கொண்டு ஆடினாள்.

பாடலின் பீட் உச்சத்தில் செல்ல அனிதாவை வளைத்து எடுத்து தன் மார்புக்கு மேலே தூக்கி கட்டிக்கொண்டு ஆனந்த ஆட,

அனிதாவை

Click & Join - https://t.me/tamilbooksworld

